# மணி மலர்த்திரட்டு

பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்



தமிழ்நிலையம்

புதுக்கோட்டை

# மணி மலர்த் திரட்டு

[பன்னிரண்டு கட்டுரைகள் அடங்கியது]

மகா மகோபாத்தியாய
முதுபெரும் புலவர்
பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்






தமிழ்நிலையம்
புதுக்கோட்டை



**கவிமணி**
**தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களின்**
**வாழ்த்து**

---

ஒண்ணுதல் பாகனெம் கண்ணுத லருளால்
வையத் தோங்கி வளரு மினிய
செந்தமிழ்ச் செல்வியுன் திருவடி மீதொளிர்
அணிகல ஞக அமைந்திம்
மணிமலர்த் திரட்டு வாழ்க வாழ்கவே.

—தேசிக விநாயகன்.

# அணிந்துரை

சித்தாந்தச் செந்நாவலர்,

**பேராசிரியர், வித்துவான்**

**திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை M. A., B. L.**

பெரும் பேராசிரியர் பண்டிதமணியவர்களைத் தமிழ் உலகம் நன்கு அறியும். அவர்களுடைய புகழ் மணம் திரை கடலையும் தவழ்ந்து சென்று மேல்நாடுகளிலும் பரிமளித்து வருகிறது. அமெரிக்க நாட்டில் தொகுக்கப்பெற்று வரும் உலகப் பெருமக்கள் அகராதியிற் பண்டித மணியவர்களின் வரலாறும் உறைவிடம் பெற்று ஒளி விடுகின்றது. இது தமிழ் மக்களுக்கு அவர்கள் அளித்த பெருமையாகும். உயர்வற உயர்நலம் உடைய அவர்களின் தமிழ் உரைநடை உன்னுந்தோறும் உளங்கவர் திறத்தது. சங்கத் தமிழ் நூல்கள், ஐம்பெருங் காப்பியங்கள், கம்ப ராமாயணம், பெரிய புராணம், தேவாரம், திருவாசகம், பின்னர் எழுந்த எண்ணிறந்த பிரபந்தங்கள் என்னும் இவற்றினுள் விரிந்து ஆழப் பதிந்துள்ள பல்வகை நயங்கள் என்னும் கோதிலமுதை யாரப்பருகிப் பெருகி வளர்ந்த அவர்களின் அறிவுக் கனலானது, அவர்கள் பேசியும், சொல்லியும், எழுதியும் விளக்குகின்ற ஒவ்வொரு சொல்லிலும் சுடர் விட்டு நிற்கும். பொன் மலர் நாற்றம் பெற்றது போல் அவர்களின் தமிழ் அறிவு வடமொழிப் பயிற்சியால் மாண்பெய்தியுள்ளது. பிறர் வறிதென்று வழுக்கிவிடும் வார்த்தையுள்ளும், "வாரீர்! இதில் வாய்த்த நலம் பாரீர்! வார்த்துமக்கு நான் அளிப்பேன்," என வண்ணப் பணித்து, நலம் வடித்து, நாளும் வழங்கும் வணிகரான அவர்கள் சொற் செட்டுடையாராவர். அன்னார் தெளிந்தெடுத்த பன்னிரு கட்டுரை கொண்ட இம்மணி மலர்த்திரட்டு மாண்டமிழின் மணங் கமழும் பன்னிரு மலர்களைத் திரட்டி வைத்த பொற்பேழை போன்றிலங்குகின்றது.

இவற்றுள் முதல் நான்கு கட்டுரைகள் பண்டித மணியவர்களால் எழுதப்பட்டவை. ஏனைய எட்டும் எம்மர் பேரறிஞர்களாற் பண்டித மணியவர் களின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவின்போது அன்பின் பெருக்கால் ஆக்கித் தந்தவை. முதலாவது சங்கத்தமிழ். இதில் சங்கத் தமிழின் அணிநலங்களை யும், அவற்றை நச்சினார்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் போன்ற பிற்காலத் தமிழாளி கள் பயின்றெய்திய அறிவின் திறத்தையும், குறுந் தொகை முதல் பெருங் கதையின் காறுமுள்ள பற் பல நயங்களையும் ஆடியில் அண்டம் அமைத்துக் காட்டுதல்போல், சுருங்கச் சொல்லி விளங்க வைத் திருப்பதைக் காணலாம்.

இரண்டாவது, சீவக சிந்தாமணி நந்தா நலம் பொழி சிந்தாமணியின் முந்து நயங்களைச் சிந்தாது சிறப்பித்தோதும் ஆற்றல் பண்டிதமணியவர் களுக்கே யுரித்து என்பதை அவர்களோடு நெருங் கிப் பழகியவர்கள் நன்கு அறிவார்கள். அரச குலத்து உதித்த சீவகன் சுடலையில் உடலெடுத்தது முதல், பெரும் பொருள் வாணிகனாகிய கந்துக் கடனாற் பேணப்பட்டு ஒரு வணிகனாகவே வளர்ந்து வந்தவன். பின்னர், அவன் கேமசரி என்னும் வணி கர் குல நங்கையை மணம் புரிந்து, இன்ப வாழ் வெய்தி யிருந்திடும் போதில், அவள் ஒரு நாள் புலவி யுற்று ஊடினாளாக, அதனையாற்றாது உயிர் தளர்ந்த சீவகன் அவள் அடிவணங்கி உயிர் அளித்தலை வேண் டலும், அவள் குறுமுறுவல் கொண்டு ஒரு மொழி கொடுத்தனள். அதனை வாய்ப்பாகக் கொண்டு அவளைப் புல்லியதோடு,அக் கிளி யன்னாளின் மழலைத் தீஞ்சொல்லுக்கு உருகி, ''வாணிக மகளிர் தாமே வாணிகம் வல்லர்'' என அந் நங்கையை வியந்து போற்றினான் என்று திருத்தக்கதேவர் அழகுறக் கூறியுள்ளார். வாணிக மகளிர் முதல் கெட ஊதி யம் செய்யார் என்பது இதன் பொருள். இங்கு,

இன்பம் என்னும் வாணிகம் நடத்தலுற்ற கேம சரிக்கு முதலாக அமைந்தவன் சீவகன். அவள் அவனது உயிரைக் காத்தளித்து இன்பம் துய்க்கும் விதத்தில் இடனறிந் தூாடிப்பின் அதனையொழித் துக் கூடினாள் என்பது குறிப்பு. கேமசரியின் புலவி உணர்ப்புவயின் வாரா வூடலாக நீட்டித்திருப்பின், சீவகனாகிய முதல் அழிந்து இன்பமாகிய வாணிகம் தொலைந்திருக்கும் என்பதாம். இவ்வாறு வளர்ந்தும் மணந்தும், பயின்றும், சீவகன் வணிகர் குலத்தோடு நெருங்கிய தொடர்புடையவனாக விளங்கினான் என் பது நன்கு போதரும். அத்தகைய சீவகனின் கதை யாகிய சிந்தாமணி என்னும் நூல் இப்பொழுதுவணி கர் குல திலகமாகிய பண்டிதமணியவர்களால் சிறப் புறப் பொலிவெய்துவதை நோக்கி நம் சிந்தை இறும்பூதெய்தா நிற்கும். இவ்விரண்டாவது கட் டுரை சிந்தாமணி நூலுக்கு ஒரு முன்னுரை போன் றமைந்துள்ளது. இதைத் தொடர்ந்து பல கட்டுரை கள் எழுதி அந்நூலின் நயங்களை ஒரு புத்தகமாக அவர்கள் வெளியிடுவதைத் தமிழ் உலகம் ஆவ லுடன் எதிர்பார்க்கிறது.

மூன்றாவது, இசையின்பம். இதில் இன்ப வுணர்ச்சி இனிய தமிழ் இசைக்கே என்பதை எடுத்து விளக்கி, இசைத் தேனில் தமிழமுதைக் கலந்தளிக்க முன் வந்த ராஜா சர் செட்டிநாட்டரசர் அவர்களின் வள்ளன்மையையும், உள்ளன்பை யும் தெள்ளிதிற் புலப்படுத்தியுள்ளார்கள் நான்கா வது கம்பன் கவிநலம். கதிரேசரின் கல்வித் திட்பத் தால் கம்பன் பாக்கள் ஒவ்வொன்றும், கன்று முட்டி யுண்ணச் சுரக்கும் காலியவைபோல், தன்னகத் துள்ள நன்னயமனைத்தும் பன்னலமோங்கப்பாவியா நிற்கும். இக் கட்டுரையில், இராமாயணத்தை நெடு நாட் பயின்றோரும் பல புதுமைகள் கண்டு பயனெய் துவர் என்பது திண்ணம். கற்றனைத்தூறும் அறிவு என்பது பொய்யாமொழியன்றோ !

ஐந்தாவது, சிவ வழிபாட்டின் தொன்மை. இதில், சிவபெருமான் தமிழர்களது முழுமுதற் கடவுள் என்பதும், ஆரியர்கள் இந்திய நாட்டிற் புகுமுன்னரே சிவ வழிபாடு தமிழ் நாட்டிற் சிறப்புற நடந்து வந்தது என்பதும், பலவித மேற்கோள்களுடன் இனிது நாட்டப்பட்டுள்ளன. ஆறுவது, முத்தமிழ். இதில்,முத்தமிழும் ஒன்றோடொன்றியையுடையனவாய், மனமொழி மெய்களின் ஒன்றுபட்ட நிலையை உணர்த்துவனவாகும் என்ற உண்மையை ஆசிரியர் விரித்தெழுதியுள்ளார்கள். மதிநலமுடையார் இதனை மறவாது மனக்கொளல் வேண்டும். ஏழாவது திருநாவுக்கரசர். இதில் நாட்டார் அவர்கள் அப்பர் அடிகளின் வாழ்க்கைச் சரிதையை வளம்படக் கூறி, அவர் பாக்களாகிய பரவையிற் படிந்து அரும் பொருள்மணிகளையும் மேற்கொணர்ந்து காட்டுகின்றனர். அப்பர் தேவாரத்திற் கண்ட அரிய சித்தாந்தக் கருத்துக்களும் தெளிவாக விளக்கப்படுகின்றன.

எட்டாவது பண்டைத் தமிழரின் அரசியல். இதில், சங்க இலக்கியத்திற் சிதறிக் கிடக்கும் அரசியற் கருத்துக்களை ஒருங்கு திரட்டிப் பழங்காலத் தமிழரின் அரசியல் வாழ்க்கை இனிது புலப்படுத்தப் பட்டது. ஒன்பதாவது, பிறை தொழுதல். இதில் பல நாட்டு மக்களும், சிறப்பாகத் தமிழர்களும் திங்களை வழிபடும் முறைகள் விரிவாகக் கூறப்பட்டன. திங்களின் நிலவு ஒளிக்கு வளர்க்கும் சக்தி உண்டென்பதைக் கலித்தொகை 31-ம் பாடலில், "பயங்கெழு பல்கதிர் பால் போலும் பொழுது" என்னும் குறிப்பாலும், "உலகுக்கு உணவுகளை விளைத்தற்குக் காரணமாகிய மதியின் கதிர்கள் பாலையொத்து விளங்கும் இராப் பொழுது" என்னும் அதன் உரையாலும் நன்கு தெரியலாம்.

பத்தாவது வணிகப் புலவர்கள். இதில், மணிமேகலை ஆசிரியர் கூல வாணிகன் சாத்தனார் முதல்

தற்காலத்தில் பண்டித மணியவர்கள் வரையுள்ள வணிகப் பெரும் புலவர்கள் பலரையும் பற்றி ஆராயப்பட்டுள்ளது. கேட்டார்ப்பிணிக்குந் தகைய வாய்க் கேளாரும் வேட்ப மொழியும் பண்டித மணியவர்களின் சொல் வன்மையும் அவர்களால் வாணிக உலகம் சிறப்படைந்துள்ளமையும் இனிது எடுத்துக் கூறப்பட்டுள்ளது. பதினொன்ருவது, தமிழ் இலக்கியங்களிலுள்ள உவமைச் சுவை. இச் சுவை பெறு கட்டுரை பசுவின் பாலினும் தெவிட்டாத சுவையுடையதென்பதைப் படித்தறியலாம். இதில், மானம் என்னும் சொல்லை ஆசிரியர் விளக்கும் திறம் கொண்டே அவர்கள் பெருஞ்சொல் விளக்கனுர் என்பது நன்கு புலனுகும். பன்னிரண்டாவது பண்டைத் தமிழர் பெருமை. இது மணி மலர்த் திரட்டுக்கு மகுடமாக அமைந்துள்ளது. பண்டைத் தமிழரின் பெருமையே இப் பன்னிரு கட்டுரைகளின் சாரமாகும். தமிழரின் பண்டை நாகரிகமும், கலையும், பண்பாடும், பிறநாடுகளுக்குச் சென்றெய்திய வெற்றியும், வாணிகத் திறனும் விளங்கக் கூறப்பட்டுள்ளன. இறுதியில், அருஞ்சொற் பொருள் விளக்கமும் சேர்க்கப்பட்டுள்ளது.

இவ்விதமாக, இம் மணிமலர்த்திரட்டு இணையில்லா ஆன்பாலின் தீஞ்சுவைத் திரட்டாகிப் பயிலும் மாணவர்க்கும் நவிலும் வாசகர்க்கும் தமிழ் அறிவை ஊட்டி இன்பம் பயக்க வல்லதாய் மிளிர்கின்றது. சிறந்த உரைநடை நூலாகிய இம் மணி மலர்த்திரட்டைச் செவ்விய முறையில் அச்சிட்டு வெளிப்படுத்திய புதுக்கோட்டைத் தமிழ் நிலையத்தார் உதவி பாராட்டத்தக்கது. இஃது கல்லூரிகளிற் பயிலும் மாணவர்களுக்குத் தமிழ் உரை நடைப் பாடமாக வைப்பதற்கு மிகவும் தகுதியுடையதென்பது என் கருத்து.

ஜி. சுப்பிரமணியன்.

# பதிப்புரை

அண்ணுமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழ் ஆராய்ச்சிப் பகுதித் தலைவராயிருந்த மகாமகோ பாத்தியாய பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவில், அவர்களின் இனிய நண்பர்களால் மாண்புமிக்க செட்டிநாட்டு அரசரவர்கள் தலைமையில் மனம் உவந்தளித்த மணிமலர் என்னும் கட்டுரைத் தொகுதியிலுள்ள கட்டுரைகள் எட்டும், மகா மகோபாத்தியாய பண்டிதமணி யவர்கள் எழுதிய கட்டுரைகள் நான்கும் ஆகப் பன்னிரண்டு கட்டுரைகளைத் திரட்டி "மணிமலர்த்திரட்டு" என்னும் பெயரால் இந்நூல் வெளிப்படுத்தப் பெறுகின்றது. மணிமலரிலுள்ள கட்டுரைகள் இதன்கண் மிகுதியாக இருத்தலால் 'கமுகந் தோட்டம்' என்பது போலப் பன்மை பற்றிய பெயராக இது மணிமலர்த்திரட்டு என்னும் பெயர்த்தாயிற்று.

இம் மணிமலர்த் திரட்டு பல்கலைக்கழக மாணவர்க்குத் தமிழில் சிறப்பு (Detailed Prose) உரைநடைப் பாடத்திற்குத் தகுதியான கட்டுரைகள் ஆராய்ந்து தொகுக்கப் பெற்றன. பல திறத்துப் பொருள்களிலும்

வேட்கையுடைய தமிழன்பர்கள் எல்லோர்க்கும் பயன்படத்தக்க நிலையில் இஃது அமைந்துள்ளது. உரைநடை பயிலும் மாணவர்களுக்கும் இது வாய்ப்பாக இருக்குமென்னும் நம்பிக்கை உடையேம். இக்கட்டுரை ஆசிரியர்களெல்லோரும் சிறந்த கல்வியாளர் ஆதலின் அவர்கள் அறிவுள்ளத்தில் தோய்ந்தெழுந்த பொருளுரைகள் மக்களுக்குப் பெரிதும் பயன்படுமென்பது தெளிவாம்.

இத்தகைய சிறந்த உரைநடை நூலாகிய இம்மணி மலர்த் திரட்டின் பதிப்புரிமையை மகாமகோபாத்தியாய பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள் மனம் உவந்து எமக்கு அளித்ததற்கு மிகவும் நன்றியறிவுடையேம்.

இந்நூலுக்கு வாழ்த்துப்பா வழங்கிய கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்களுக்கும் ஆராய்ச்சி முறையில் சிறந்ததோர் அணிந்துரை எழுதி உதவிய சித்தாந்தச் செந்நாவலர் வித்துவான் திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை யவர்களுக்கும் எமது நிலையத்தின் நன்றியும் வணக்கமும் உரியனவாகுக.

தமிழ் நிலையத்தார்.

# உள்ளே

1

# சங்கத் தமிழ்

சங்கத் தமிழ் என்பது செந்தமிழ்ப் பாண்டி வள நாட்டின் தலைநகரங்களில் இற்றைக்கு ஆயிரத்தைந் நூறு ஆண்டுகளுக்குமுன் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பாண்டிய மன்னர்களால் நிறுவிப் பாதுகாக்கப் பட்டு வந்த முதல் இடை கடையென்னும் முச்சங்கங் களிலும் புலவர் பெரு மக்களால் ஆக்கப்பட்ட பாட்டும் உரையும் ஆகிய நூல்களைக் குறிப்பதாகும். அம் முச் சங்கங்களிலும் தலைமை வீற்றிருந்தாரும், கவியரங் கேறினரும், கடவுட்டன்மை வாய்ந்த பெரும்புலவர் களாவார்கள். சங்ககாலத்துட்டோன்றிய தமிழ் நூல் களாக இப்பொழுது பயிலப்படுவன பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்கு என்பன வாம். சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய பெருங் காப்பியங்களும் அக்காலத்துத் தோன்றியவைகளா தலின், அவற்றையும் சங்கத்தமிழ் என்று கூறுதற்கு இழுக்கின்று. இங்கே குறிப்பிட்ட நூல்களுள் பத்துப் பாட்டும் எட்டுத்தொகை நூல்களும் மிக முதிர்ந்த தமிழ்ச் சொற்களால் ஆக்கப்பட்டவை. அவற்றுள் பழந்தமிழின் இயல்பும், தமிழ்நிலத்தார் நாகரிக

இது திருச்சி வானெலி நிலையத்தில் 7-12-41-ல் பேசியது.

முதலியனவும் நன்கு புலனாகும். இக்காலத்துப் புலவர்களால் பெரிதும் கையாளப்பட்ட தற்குறிப்பேற்றம் முதலிய அணிகள் சங்கத் தமிழில் காணப்படா. இயற்கை வருணனையாகிய தன்மை நவிற்சியும், ஒன்றனைத் தெளிவுபடுத்தற்கு ஒரு பகுதி ஒத்ததாக எடுத்துக் காட்டப்படும் உவமையுமே பெரிதும் தழுவப் பட்டனவாம். இயற்கைப் பொருள்களை நுனித்துணர்ந்து பாடுவதில் சங்கப் புலவர்கள் மிகத் திறமை படைத்தவர்கள். இயற்கைப் பொருள்களின் இயல்பைக் கண்கூடாகக் கண்டு பயில்பவர் தெரிந்து கொள்ளும் வண்ணம் அக்காட்சிக் கருத்தைப் பாடலில் அமைக்கும் ஆற்றல் அவர்களுக்கு மிகுதியாக உண்டு. அவ்வியற்கைப் பொருள்களை முன்னர்க் காணுதார்க்குப் புலப்படுத்தவேண்டி உவமையணியையும் கையாளுவர். அவர்கள் கூறும் உவமைகள் உவமிக்கப்படும் பொருள்களோடு மிக நெருங்கிய ஒற்றுமை உடையனவாகும். இவ்விரண்டிற்கும் முறையே அகப் பாட்டிலுள்ள தொடர்கள் சிலவற்றைச் சான்றுகக் காணலாம்.

முல்லை நில வருணனையில், "சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்" என்று பிடா என்னும் செடி வருணிக்கப்பட்டுள்ளது. பிடவு குறுந்தூறுகளில் சிறியதாகலானும், இலைச் செறிவாலும் காம்புகளாலும் கரியதாகலானும், பூக்குங்கால் செடி மறைய மேற்புறத்தில் வெண்ணிறமான மலர் நிறையக் காணப் படுவதாகலானும் இங்ஙனம் தன்மை நவிற்சியாகக் கூறப்பட்டது. இச்செடியைச் சிற்றூர்களில் வெள்ளைப்பிடா என்று இன்றும் வழங்குவர். உவம வகைகளில் "புதன்மிசைத் தளவி னிதன்முட் செந்நனை" யெனவும், "மீன் முள்ளன்ன வெண்கான் மாமலர்" எனவும் கூறப்பட்டுள்ளன. இதல் என்பது காடைப் பறவையாகும். அதன் கால் நகங்கள் சிவப்பு நிறமும்

கூரிய நுதியும் உடையனவாதலின் செம்முல்லையின் அரும்புகளுக்கு உவமை கூறப்பட்டன. முள்ளிச் செடியின் மலர்களுக்கு வெண்ணிறத்தாலும் சிறிய இதழ்களாலும் மீன் முட்கள் உவமையாயின.

சங்கத்தமிழின் மொழி நடைகள் தூய்மையும் இனிமையும் வாய்ந்து பொருளாழமுடையனவாய் உற்றுணர்ந்து பயில்வார்க்குப் பெரிதும் இன்பம் பயப் பனவாகும். சங்கப் புலவர் வருணனை மரபும், மொழி வளமும், பொருளாழமும் ஆகிய இவற்றைப் பிற்காலத் துப் புலவர்கள் மேற்கொண்டனராயினும், அத் துணைத் திட்பம் அமைதல் அரிதாயிற்று. ஆயினும் சங்கத்துச் சான்றோர் சென்ற வழியே, பிற்காலத்துப் புலவர்கள் செல்லுவதற்குரிய நன்னெறியாக அமைந் தது என்பதில் தட்டின்று. சங்கத் தமிழ் நூல்களுள் ஒன்றாகிய "கற்றறிந்தா ரேத்துங் கலித்தொகை"யில் மகளிர் நீர் விளையாட்டு வருணனையில் ஒருத்தி, "அடி தாழ் கலிங்கந் தழீஇ யொருகை, முடிதாழிருங்கூந்தல் பற்றிப்பூ வேய்ந்த, கடிகயம் பாயு மலந்து" என்று கூறப்பட்டுள்ளது. இதன் பொருள் ஒரு பெண் தன் அடியிலே தாழ்ந்த ஆடை நழுவி விடாமல் ஒரு கையாலே பற்றிக்கொண்டு,மற்றொரு கையாலே முடியி னின்றும் குலைந்து வீழ்ந்த கரிய கூந்தலைப் பிடித்துக் கொண்டு, மலர் நிறைந்த குளத்திலே பாய்வாள் என் பது. நீரிற் பாயுங்கால் காலுக்குத் தடைநேராமலும் அவிழ்ந்து விழாமலுமிருக்க ஆடையை ஒரு கையாலே பிடித்துக் கொண்டாளெனவும், தன் நீண்ட கூந்தல் சரிந்து வீழ்ந்தால் அதுவுந் தன் பாய்ச்சலுக்கு இடை யூறுமெனக் கண்டு மற்றொரு கையால் அதனையும் பிடித்துக் கொண்டாளெனவும் கூறிய இந்நிகழ்ச்சிகள் இயற்கைக்குப் பொருத்தமானவைகளே. இக்கருத் தையே பிற்காலத்துத் தஞ்சைவாணன் கோவை நூலா சிரியர் "அகிலேந்து கூந்த லொருகையி லேந்தி யசைந்

தொருகை, துகிலேந்தி'' என்று தன்னைவிட்டுப் பெயர்ந்து செல்லும் தலைவியின் செலவைக் குறித்துத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியதாகக் கூறினர். இங்கே கூந்தல் முடியாமை, துகில் உடாமை ஆகிய இந்நிகழ்ச்சிகளுக்குக் காரணமாகக் குறித்தது கள வொழுக்கம் வெளிப்படுமென்று கருதியதேயாம். இதனையே அக்கோவையுரையாசிரியர் ''கூந்தல் முடி யாமலும் துகில் உடாமலும் வந்தது என்னவெனில், ஆயக்கூட்டத்தார் வருவர் என்றும், வந்தால் களவு புலனுமென்றுங் கருதி அவ்விடத்து நீங்கிக் குழல் முடிக்கவும் துகில் உடுக்கவும் நினைத்து வந்தா ளென்க'' என்று கருத்துக் கூறினர். இங்கே நினைக் கத்தக்கது ஒன்று. நீர் விளையாட்டுக்குச் சங்கத்தமிழ் கூறியது பொருத்தமாகும். தலைவி தலைவனிடத்தி னின்றும் பிரிந்து வருங்கால், களவு புலனுமென்று கருதி வேருேரிடத்தில் வந்து முடிக்கவும் உடுக்கவும் நினைத்தாள் என்று கூறியது ஒருவாறு பொருந்து மேனும், கூந்தல் அவிழ்ந்த நிலையிலும் ஆடை நெகிழ்ந்த நிலையிலும் ஒருபெண் ஒரு தனியிடத்தினின் றும் விரைந்து செல்வாளேயானுல் அச் செலவே அவள் களவைப் புலப்படுத்தவுங்கூடும். இங்ஙனம் அலங் கோலமான நிலையில் இவள் வருவதற்குக் காரணம் என்னென்று தோழிமார் ஆராய்வாராயின் காலமும் இடமும் துணையாகக் களவுண்மை புலனுகுமன்ருே! கலித்தொகை ஆசிரியருக்குப் பின்னும் கோவை ஆசிரி யருக்கு முன்னும் தோன்றிய கொங்குவேளிர் என்னும் புலவர் பெருமான் தாம் இயற்றிய பெருங்காப்பிய மாகிய பெருங்கதை என்னும் நூலுள், இக்கருத்தைத் தக்கதாகிய ஓர் இடத்திற் புலப்படுத்தியுள்ளார். தீப் பற்றி எரியும் ஊரில் நிகழ்ந்த செய்திகளைக் கூறுங் கால்,

"தவழும் புதல்வரை யொருகையாற் றழீஇப்
பவழஞ் சேர்ந்த பல்கா ழிடையினர்
அவிழ்ந்த பூந்துகி லங்கையி னசைஇ
நகைப்பூங் கோதையொடு நான்ற கூந்தற்கு
மிகைக்கை காணது புகைத்தீ யெரிப்பப்
படைத்தோன் குற்ற மெடுத்துரைஇ"

என்று பாடினர். நெருப்புப்பற்றி யெரியும்போது இளங் குழந்தைகளையுடைய பெண்கள் அப்புதல்வர் களைத் தழுவி ஒருகையால் எடுத்துக்கொண்டும், விரைவாக ஓடிச் செல்லுங்கால், அவிழ்ந்த துகிலை மற்றொரு கையாற் சேர்த்துக்கொண்டும் ஓடினரெனவும், அந் நிலையில் கூந்தலவிழ்ந்து சரிந்ததாக அதனைத் தாங்கு வதற்கு மூன்றாவதாக ஒரு கை இல்லாமையால் படைப் புக் கடவுளின் குற்றத்தை யெடுத்துக் கூறிச் சென் றனரெனவும் கூறியது மிகவும் இன்புறத் தக்கது. இந்நூலாசிரியர் இக்கருத்தை எடுத்தாண்ட இடம் சிறந்ததே. இளமகவினிடத்துத் தாய்க்கு உள்ள அன்பு மிகவும் சிறந்ததொன்று, "பாலினைந் தூட்டும் தாயினும் சாலப்பரிந்து" என்பது திருவாச கம். கடவுள் அன்பிற்கு ஒப்புக்காட்டப் புக்க அடிகள் "உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை" என்றபடி உவமை உயர்ந்ததாக இருக்கவேண்டுமென்று ஆராய்ந்து தாயின் அன்புக்கு மேற்பட்டது உலகத்து இன்மையால் அதனையே எடுத்தாண்டனர். ஆதலால் நெருப்பிற்குத் தன்னைக் கொடுத்தும், தநயனை காப் பாற்றுதல் தாய்க்குரியதென்பது புலனாகும். புதல்வர் நடந்துசெல்லும் பருவமுடையவரல்லர் என்பதைப் புலப்படுத்தவே, தவழும் புதல்வரை என்றார். இந் நிலையிற் புதல்வரைக் காக்க ஒரு கையைப் பயன் படுத்த வேண்டியது இன்றியமையாததாயிற்று. அடுத்து அவிழ்ந்த பூந்துகில் அங்கையினசைஇ என் றார். மகளிர்க்குத் துகில் அவிழ்ந்தால் மானக்குறை

நேரும் என்று கருதி அதனைப் பேணுதற்கு மற்றெரு கையைப் பயன்படுத்தினர் என்ருர். பின்னர்க் கூந் தலை அவிழ்ந்து சரியவிடுதல் கூடாதென்பது கருதியும் ஒருவாறு பரவிவரும் நெருப்பு நீண்ட கூந்தற் பரப்பில் பற்றவுங்கூடுமென்பது கருதியும் அதனையும் தாங்க எண்ணினர் எனவும், மூன்ருவது கையொன்று படைக் கப்படாமையால், உறுப்புக்களைப் பயன் கருதிப் படைத்த கடவுளின் குற்றத்தை எடுத்துக் கூறி வருந் திச் சென்றனர் எனவும் ஆசிரியர் கூறினர். இங்கே சங்கத்தமிழின் கருத்து நயம் தோன்றுகின்றது. கலித் தொகை ஆசிரியர் இக்கருத்தை நீர் விளையாட்டின்பத் திலும், பெருங்கதை நூலாசிரியர் நெருப்புக்கு அஞ்சிய துன்பத்திலும் எடுத்தாண்டனர். இடைப்பட்ட கோவை யாசிரியர் இன்பமும் துன்பமுங் கலந்த நிலையில் எடுத்து மொழிந்தனர். தலைவன் கூட்டுறவில் இன்ப மும் களவு வெளிப்படுமோ வென்னும் ஐயத்தில் துன் பமும் தோன்றி விரவலாயின. மேலும் அக் கலிப் பாட்டில் கள்ளுண்டு களித்த ஒரு பெண்ணினியல்பு "ஒருத்தி, இறந்த களியான் இதழ்மறைந்த கண்ணள், பறந்தவை மூசக் கடிவாள் கடியும், இடந்தேற்ருள் சோர்ந்தனள் கை" என்று கூறப்பட்டுள்ளது. கள் ளுண்டு களித்த ஒரு பெண் அக்களிப்புக் காரணமாக இமை கூடுதலால் பார்வை மறைந்த கண்ணையுடைய வளாய் வண்டுகள் மொய்க்க ஓட்டத் துணிந்தவள் ஓட்டும் இடம் அறியாளாய்ச் சோர்ந்தனள் என்பது கருத்து. இப்பகுதிக்கு நச்சினர்க்கினியர் உரை விளக் கத்தினும் இக்கருத்தை எடுத்தாண்ட சிலப்பதிகாரப் பகுதிக்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார் விளக்கம் நன்ருகவுள்ளது. வண்டு மொய்த்தற்குக் காரணம் அக் கலிப்பாட்டில், இதழ்மறைந்த கண்ணள் என்ற தனுல் புலப்படவிருக்கவும் உரையாசிரியர் விளக்கினு ரில்லை. இதழ் என்பது கண்ணிமையாகும். மயக்கத்

தான் அதன்கண் மறைகின்ற விழிகளைப் பூவிதழின் மறையும் வண்டெனக் கருதி வண்டுகள், தம் இன மெனக் கொண்டு மொய்த்தன என்பதாம். இக்கருத் தைச் சிலப்பதிகார நூலாசிரியர், "செம்பொன் வள்ளத் துச் சேடிய ரேந்திய, வந்தீங் தேறன் மாந்தினர் மயங் கிப், பொறிவரி வண்டினம் புல்லுவழி யன்றியும், நறு மலர் மாலையின் வறிதிடங் கடிந்து" என்று எடுத்து மொழிந்தனர். இப் பகுதிக்கு அடியார்க்குநல்லார் உரைக்கருத்து,—"உண்டு மயங்கிய பெண்கள் மதி மயக்கத்தான் இமையின் மறைகின்ற விழிகளைப் பூவி தழின் மறைகின்ற தம்மினமே யெனக் கருதிச் சேர்ந்த வண்டுக் கூட்டங்களை மாலையாற் கடியக் கருதியவர் அவசத்தால் கை சோர்தலின் அவ்வண்டுகள் மொய் யாத இடங்களைக் கடிந்தனர்" என்பதாம். இங்கே புல்லுவழியன்றியும் என்பதற்கு நூலாசிரியர் கருத்துப் படி வண்டுகள் பொருந்தின இடமன்றியே என்று பொருள் கோடலே பொருந்துவதாகும். அரும்பதவுரை யாசிரியர் கருத்தும் இதுவே. அடியார்க்கு நல்லார் சங்கத் தமிழ் ஆராய்ச்சியின் பயனாகக் கலிப்பாட்டின் பொருளை நுனித்தாராய்ந்து அதற்கேற்பப் புல்லுதலை வண்டிற்கு அடையாக்கிப் 'புல்லுதல்—இனம் என்று புல்லுதல்' எனப் பொருள் கூறினர். இங்ஙனம் மாற் றிப் பொருள் கொண்டதற்குக் காரணம் கலிப்பாட்டின் பொருட் சுவையில் ஈடுபட்டதும் வண்டு மொய்த் தற்குத் தக்க காரணம் விளக்க முயன்றதுமாகும். சொற்கிடக்கை முறைப்படி பொருள் கொண்டால் வண்டுகள் மொய்த்த இடமன்றியும் மொய்யாத இடங் களிலும் கடிந்தனரென்பதேயாம்.

இனி, சங்கத் தமிழில் சில குணஞ் செயல்களுக்கு வரையறையான இலக்கணங்களைக் காணலாம். நெடி தாராய்ந்து வரையறுக்கப்பட்ட குணஞ்செயல்களின் இலக்கணங்கள் பிற்காலத்துப் புலவர்களுக்குப் பெரி

தும் ஆதாரங்களாயின. அவற்றுள் கலிப்பாட்டிற் கூறப்பட்டன சில :

"ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செருஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொன்னோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மரு அமை
நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை
முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வெளவல்
பொறையெனப் படுவது போற்ருரைப் பொறுத்தல்."

இவற்றுள், ஆற்றுதல் என்பது, இல்வாழ்க்கை நடாத்தல். அதன் சிறந்த குறிக்கோள் இல்லார்க்கு உதவுதலாகும். இவ்வுணமையையே சிலப்பதிகார நூலாசிரியர் கண்ணகி கூற்ருக, "அறவோர்க்களித் தலும் அந்தண ரோம்பலும், துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின், விருந்தெதிர் கோடலும் இழந்த வென்னை" என்று கூறினர். இங்கே கண்ணகி தன் கணவனைப் பிரிந்த நிலையில் இல்வாழ்க்கைப் பயனுகப் பிறர் எண்ணும் இன்பத்தின் இழப்பைக் குறித்து வருந்திஞளல்லள். பின்னைக் கணவனுடன் கூடி வாழ்தலில் முக்கிய நோக்கமாகிய அறவோர்க்களித்தல் முதலியன செய்ய இயலாமைபற்றியே வருந்தினளாம்; இக் குறிக்கோளே சிறந்த தென்பது கருதப்பட்டது. இது கருதியே பரிமேலழகர், தானம் பெரும்பாலும் இல்லறத்தின்மே னின்றது என்ருர். "பண்பெனப்படு வது பாடறிந்தொழுகல்" என்னும் இது மிகச் சிறந்த குண இலக்கணமாகும். பண்பெனும் சொல் பொது வகையாகக் குணமென்னும் பொருளினதாகும். ஆயி னும் பெருமை முதலிய பல குணங்களையும் அதிகார முறையில் வைத்துப் பாடிய வள்ளுவர் பின்னும் ஓர்

அதிகாரத்துக்குப் பண்புடைமை என்று பெயரிட்டனர். ஆகவே, குணவகை பலவற்றுட் பண்பென்பது சிறப்பு முறையில் வைத்து ஆராயத்தக்கதென்பது அவர் கருத்து. சிறந்த உரையாளராகிய பரிமேலழகர் இக் கலிப்பாடற் பகுதியை நன்ருகப் பயின்றவராதலின் பண்புடைமை என்பது பெருமை, சான்ருண்மைகளிற் ரும் வழுவாதுநின்றே எல்லாரியல்புகளும் அறிந் தொழுகுதல்; "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகு தல்" என்ருர் பிறரும் என்று விளக்கியுள்ளார். இக் கலிப்பாடற் பகுதியைப் படித்திலரேல் இப் பொருள் கோடலரிதாம். இங்ஙனமே ஏனையவற்றையும் நோக்கி யுணர்தல் வேண்டும்.

குறுந்தொகை என்னும் நூல் அடியளவாற் குறு கிச் சொற்கள் செறிக்கப்பட்டுப் பொருள் நலம் சிறந்த தொன்று. ஒரு தலைவனை நோக்கித் தோழி தலைவி யின் ஊர் மிக அணிமையில் இதோ தோன்றுகிற தென்று குறிப்பிடுமுகமாக, "உதுக்காண்......நிலவும் இருளும் போலப் புலவுத் திரைக் கடலும் கானலும் தோன்றும் மடலவிழ் பெண்ணை எம் சிறுநல் ஊரே ......" என்று கூறப்பட்டுள்ளது. இங்கே தன்னூரைக் காட்டப் புக்க தோழி அதனைக் காண்டற்கு அடையாள மாக அலைநுரைப் பெருக்கால் வெண்ணிறமாகக் காணப்படும் கடலையும் மரஞ் செடிகளின் நெருக்கத் தால் இருண்டு தோன்றும் கடற் சோலையையும் காட்டி அதன் பின் மடல்கள் செறிந்த பனைமரங்களையும் காட்டி. அவற்றை அடுத்துள்ளது தன்னூர் என்றன ளாம். ஒருவர் ஒரு பொருளைக் காணுங்கால் நெடுந் தூரத்தில் பெரும் பொருளையும் அணுக அணுகச் சிறு பொருள்களையும் காண்டல் இயல்பு. அங்ஙனமே முதலிற் பெரும் பொருளாகிய கடலைக் கூறினுள். கடல் கரிதாயினும் அலை நுரைகளால் வெண்ணிற மாகத் தோன்றுதல் இயல்பு; இதனுலேயே வெண்

டலைப் புணரி என்று கூறுவர். மிக அகன்ற கடற் காட்சியின்பின் கடற்கரைச் சோலை காணப்பட்டது. கடற்பரப்பினும் இது சிறிதாதலின் இரண்டாங் காட்சி ஆயிற்று. மூன்ருவது அச் சோலைக்கண்ணுள்ள பனை மரங்கள் சுட்டப்பட்டன. பொதுக்காட்சி சோலை யாகவும் சிறப்புக் காட்சி பனைமரங்களாகவும் இயைதல் பொருத்தமே. இப் பனைமரச் செறிவில் மறைபட்டுள் ளது தன்னூர் எனக் காட்டினள். ஊர் வளமுடைய தாயினும் அளவிற் சிறியதென்பது போதர 'எம் சிறு நல்லூர்' என்றனள். சிறியதாக இருந்தபடியால் இத் துணைப் பருப்பொருள்களைக் குறித்துக் காட்டவேண் டியதாயிற்று. இக்கருத்தைச் சிலப்பதிகார நூலாசிரி யர் கானல்வரிப்பாடலுள்,

திரைவிரி தருதுறையே திருமணல் விரியிடமே
விரைவிரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே
மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே
இருகய லிணைவிழியே எனைஇடர் செய்தவையே"

என்னும் இசைப்பாட்டில் விளக்கமாகப் புலப்படுத்தி யுள்ளார்.

இஃது ஒரு தலைமகன் தான் காதலித்த ஒரு பெண் ணின் இயல்பைப் பாங்கன் கேட்ப அவனுக்குக் காட்டிக் கூறியது. தூரப்பார்வை தொடங்கிப் பருப்பொருள் களையும் அணுக அணுகச் சிறு பொருள்களையும் குறிப் பிடுதலை இதன்கட் காணலாம். முதலிற் கடற்பரப்பும் பின் அலையும் கடற்றுறையும் அத்துறையிற்காணப் படும் வெண்மணற் பரப்பும் குறிப்பிடப்பட்டன. பின்னர் அம்மணற் பரப்பில் ஒரு சிறு மணமலர்ச் சோலையில் அவள் நிற்கும் இடம் காட்டப்பட்டது; அவ்விடத்தில் நிற்கும் தலைமகள் உருவந் தோன்ற அவள் உறுப்புக்களுள் கூந்தல் நீண்டு அடர்ந்து கறுத்து இருத்தலின் அதுவும், அதனை அடுத்து

மதியை ஒத்த அழகிய முகமும், அம்முகத்தில் இரண்டு கயன் மீன்களை யொத்துத் திகழும் விழிகளும் குறிப் பிடப்பட்டன. இம்முறையை இச்சங்கத் தமிழ் நூல் களிற் கண்டு அந்நெறிச் செலவில் விருப்பமுடைய கம்பநாடர். இராமன் முடிசூடிக்கொண்டு தன்னைத் காண வருவானென்று எதிர்பார்த்திருந்த கோசலையின் முன்னிலையில், அரசியற் கோலம் ஏதுமின்றிக் காடு புகுங் கருத்தோடு தாயினிடம் விடைபெற்றுக் கொள்ள நடந்து வந்த அவ்விராமனைத் தூரத்தே வரக்கண்டு கோசலை நினைந்த எண்ணங்களை ஒரு பாடலில் வெளிப்படுத்தியுள்ளார். அப்பாடல்,

"புனைந்திலன் மௌலி குஞ்சி மஞ்சனப் புனித நீரால்
நனைந்திலன் என்கொ லென்னும் ஐயத்தாள்"

என்பதாம். இதன்கண் தூரத்தே கண்டபோது முடி சூடி வருவானென்று எதிர்பார்த்திருந்தவளாதலின், அம்முடியின்மை கண்டு ஐயமுற்றாள். ஒருவாறு தாய்க்கு வணக்கம் செய்ய வருங்கால் முடியுடன் வரு தல் கூடாதென்று தவிர்ந்து வருகின்றனன்போலு மென்று தோன்றும் எண்ணத்திற்கு மறுதலையாகச் சற்று அடுத்து வந்ததும் தலைமுடி முடிசூட்டுத் திரு மஞ்சன நீரால் நனைந்திலது என்று கண்டாள். அதனால் முன் மேற்கொண்ட ஐயம் மிக்கதாயிற்று. அந்நிலை யில் இராமன் தாயின் திருவடிகளில் வணங்கினான். "நினைந்ததென் இடையூறுண்டோ நெடுமுடி புனை தற்கு" என்றாளாம். இங்ஙனம் சேய்மைக் காட்சி அண்மைக் காட்சிகளை உள்ளமைத்துப் பாடும் முறை யைச் சங்கத் தமிழிற் கண்டு பின்னவர் பலரும் அந் நெறியே ஒழுகலாயினர்.

2

# சீவக சிந்தாமணி

ஒரு மொழியின் பெருமையை அறிந்துகொள்ளு தற்குக் கருவி அம் மொழிக்கண் அமைந்த சிறந்த இலக்கியங்களே ஆகும். இலக்கியங்கள், மதிநுட்பமும் மொழிப்பயிற்சியும் நிரம்பப் பெற்றுப் புலமை கைவரப் பெற்ருேரால், புறவுலகத்தினும் அக வுலகத்தினும் நுனித்துணர்ந்து நுகர்ந்த பல பொருளுண்மைகளைச் சுவைமிக்க செய்யுட்களானும் உரை நடையானும் புலப்படுத்தி இயற்றப்படுவனவாம். செய்யுள் நடையில் அமையும் இலக்கியங்களையே நம் முன்னையோர் பெரிதும் கையாண்டனர். விரிந்த பொருள்களைச் சுருங்கிய சொற்களிலடக்கி, வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பொருள் புலப்படுத்தி, ஓசை நயத்துடன் கற்பார்க்கு இனிமை பயத்தலானும், கற்றவர் நினைவி லிருத்திக் கொள்ளுதற்கேற்ற இயல்புண்மையானும் செய்யு ளிலக்கியங்கள் பெரும்பாலும் தழுவப்பட்டன. செய்யுள் நடைபோல் பொருட் செறிவுள்ள இயல்நூலாகிய இறையனுர் களவியல் போன்ற உரைநடையிலமைந்த இலக்கியங்கள் மிகச் சிலவே. தமிழிற் செய்யுள் நடையில் அகப்பொருளும் புறப் பொருளும் பற்றிச்

---

இது திருச்சி வானெலியில் 12-2-43-ல் சொற்பொழிவு செய்யப்பட்டது.

சங்ககாலத்தெழுந்த நூல்கள் பலவுள. அவற்றுட் பெரும்பாலன தனிச் செய்யுட்களாகவே உள்ளன. அகப் பொருள்—இன்பப்பகுதியாகிய ஆடவர்மகளிர் காதலைப் பற்றியும், புறப்பொருள்—அறமும் பொருளும் எனினும்—பெரும்பாலும் பொருட்குக் காரணமாகிய வீரத் தைப்பற்றியும் கூறுவன. இவ் விருதிறத்துப் பொருள் களையும் ஒருங்கமைத்து நிகழ்ந்தனவும் நிகழாதனவும் இவ்விரண்டும் கலந்தனவுமாக ஒரு வரலாறு தழுவித் தொடர் நிலைச் செய்யுளாகப் பாடப்படுவது காப்பிய மாகும்.

காப்பியத்தைத் தொடர்நிலைச் செயயுளென்று தமிழறிஞர் கூறுவர். காப்பிய இலக்கணங்கள் முற்றும் நிரம்பப் பெற்று அழகிய இனிய சுவைமிக்க பல செய்யுட்களாற் பாடப்பட்ட தமிழ்ப் பெருங்காப்பியங் கள் ஐந்தென ஒரு காலத்து எண்ணப்பட்டன. அவை சிந்தாமணி சிலப்பதிகாரம் மணிமேகலை வளையாபதி குண்டலகேசி என்பனவாம். இவற்றுள் முன்னைய மூன் றும் அச்சின் வாயிலாக வெளிப்பட்டன. சிலப்பதிகார மும் மணிமேகலையும் காலத்தான் முற்பட்டனவாயி னும், இனிய ஓசைநயம் வாய்ந்த செய்யுட்களாக முத லிற் பாடப்பட்டதாதலின் சீவகசிந்தாமணி எண்ணு முறையில் முதலிடம் பெற்றது. இச்சிந்தாமணிப் பாடல் களைப் பாவினம் என்று கூறலாகாதென்றும் 'கொச்ச கம்' என்னும் கலிப்பாவாகவே கொள்ளவேண்டும் என் றும் நச்சினார்க்கினியர் கூறுவர்.

சீவகசிந்தாமணி என்னும் இப் பெருங்காப்பியம் பத்துப் பாட்டு எட்டுத் தொகை முதலிய முதிர்ந்த செய்யுள் நடையாலாகிய சங்கநூல்களுக்குப் பின்ன ரும், பெரிய புராணம் கம்பராமாயணம் முதலிய அழகிய காப்பியங்களுக்கு முன்னரும் ஆகிய இடைக் காலத்துத் தோன்றியது. இதனால் இச்சிந்தாமணி

சொன்னடையாலும் பொருணயத்தாலும் சிறப்புற்று விளங்குவதொன்று. இதனை இயற்றிய ஆசிரியர் திருத்தக்க தேவர் என்னும் பெயருடையார். இவர் சோழர் குலத்திற்றேன்றிச் சிறு பருவத்தே ஆருகத சமயத்தைத் தழுவிய துறவற நெறியுடையார் என்று கூறுவர். இன்பச் சுவையையே பெரும்பாலுந் தழுவிய இச் சிந்தாமணிப் பெருங்காப்பியத்தை இவர் பாடுதற்கு முன்னர் இவர் உள்ள நிலையை அறிதற்பொருட்டு இவருடைய ஆசிரியர் எதிரே ஓடிய ஒரு நரியின் செயலைப் பற்றிப் பாடக் கட்டளையிட்டனரென்றும், அங்ஙனமே 'நரிவிருத்தம்' என்னும் நூலை, நிலையாமை முதலிய உயர்பொருள் தோன்றப் பாடி முடித்தனர் என்றும், அது கண்டு இன்பம் நுதலிய காப்பியம் பாடுதலால் இவர் ஒழுக்கம் மாறுபடாதென்று துணிந்து இந்நூலை இயற்றுவதற்கு ஆசிரியர் உடன்பட்டு ஊக்கம் உறுத்தினர் என்றுங் கூறுவர். வடமொழியில் வான்மீகம் போலப் பெருங்காப்பியங்களின் அமைப்பிற்கு இஃது எடுத்துக் காட்டாக விளங்குவதாகும்.

இந்நூல் பதின்மூன்று இலம்பகங்களாக வகுக்கப்பட்டு மூவாயிரத்துக்கு மேற்பட்ட செய்யுட்களாலாயது. இக்காப்பியத் தலைவன் ஏமாங்கத நாட்டில் இராசமாபுரத்தில் செங்கோல் செலுத்திய சச்சந்தன் என்னும் அரசனுடைய புதல்வன் சீவகன் ஆவான். இவன் பிறத்தற்கு முன்னர் இவன் தந்தை சச்சந்தன் என்பான் தன் காதற்கியைந்த கற்பரசியாகிய விசயை யென்பாளை மணந்து அவள் காதலின்பத்தில் ஈடுபட்டு அவ்வின்பத்தை ஒழிவின்றி நுகர்தற்கு அரசியல் தடையெனக் கண்டு அவ்வரசைக் கட்டியங்காரன் என்னும் அமைச்சன்பாற் கொடுத்து அரண்மனையில் ஒருபால் தேவியுடன் இன்பம் நுகர்ந்திருந்தான். ஓராண்டு கழிதற்கு முன்னரே கட்டியங்காரன் அரசியல் வேட்கையுற்றுப் படைவீரரைத் தன்வயப்படுத்தி அரசனைக்

கொல்ல முற்பட்டான். இங்நிலையறிந்து "உரிமை முன் போக்கியல்லால் ஒளியுடை மன்னர் போகார்" என்றதற் கேற்பக் கருவுற்றுத் திங்கணிறைந்த காதலியை மயிற் பொறியி லேற்றிப் புறம்போக்கி அமைச்சனோடு போர் செய்து இறந்தான்.

அரிதிற் பிரிந்து மயிற் பொறியிற் சென்ற விசயை நகர்ப் புறத்தையடைந்ததும் பகைவர் வெற்றிமுரசொலி கேட்டுச் சோர்ந்து பொறியியக்குங் கை நழுவ ஆங் குள்ள சுடலைக்கண் வீழ்ந்தாள். வீழ்ந்த அவ்விடத்தே அழகிய ஓர் ஆண்குழந்தையைப் பெற்றுப் பாதுகாக்க வகையின்றி வருந்திக் கொண்டிருக்குங்கால், அவள் உயிர்த் தோழி வடிவுகொண்டு வந்த ஒரு பெண் தெய்வம் தேற்ற ஆறுதல் எய்தி, அத்தெய்வம் சொல்லியபடி ஆங்குள்ள மரச்செறிவில் மறைந்து நின்ருள். அப்பொழுது அன்று பிறந்திருந்த தன் குழந்தையைப் புதைக்க ஆங்கு வந்த கந்துக்கடன் என்னும் பெரும்பொருள் வாணிகன் "ஒழுக்கியல் அருந் தவத்து உடம்பு நீங்கினர், அழிப்பரும் பொன்னுடம்பு அடைந்தது ஒப்ப" இறந்த தன் புதல்வன் உடலை ஆங் கிட்டு அருமருந்தன்ன விசயை புதல்வனைக் கொண்டு தன் மனை சென்று வருந்திய தன் இல்லாளை நோக்கி, "நின் மகன் சாதலினின்றும் தப்பினன்" என்று கொடுப்ப, அவள் ஏற்று உவகைஎய்தினள். அவ்வாணி கன் அக் குழந்தையைத் தொட்டெடுத்தபோது அது தும்மிற்ருகத் தெய்வம் "சீவ" என்று வாழ்த்தியதால் அக்குழந்தைக்குச் "சீவகன்" என்று பெயரிட்டு வளர்த்து வருவாராயினர்.

இங்ஙனம் சீவகன் வசுதேவன் புதல்வனுகிய கண்ணன் நந்தகோன் மனையில் வளர்ந்ததுபோல வளர்ந்து வருவானுயினன். பின்னர் அவன் எல்லாக் கலைகளிலும் வல்லனுய்க் காந்தருவதத்தை முதலிய

பெண்கள் எண்மரை மணந்தும், தன் தந்தையின் பகைவனுகிய கட்டியங்காரனுற் சிறைப்படுத்தப்பட்டு நண்பனுகிய தேவனொருவனுல் விடுதிபெற்றும், பல அரிய துணைவர்களால் தன்னுடைய நற்ருயின் தவச் சாலே யெய்தி அவள் அன்பிற்குப் பாத்திரமாகியும், மீண்டும் அப்பகைவனை அழித்துப் பழைய அரசியலைக் கைப்பற்றியும், நாட்டுவளம் பெருக்கி நங்கைமா ரோடும் புதல்வரோடும் நல்வாழ்க்கையிற் றலைப்பட்டும். இறுதியில் நிலையாமை உணர்ந்து பற்றெழிந்து மூவு லகுச்சியின்பக் கடலாகிய பரிநிர்வாணம் எய்தினன் என்ப. இஃது இக் கதா நாயகனுகிய சீவகன் வரலாற் றுச் சுருக்கமாகும்.

இனி, இப்பெருங்காப்பியம் சீவகனைப் பற்றிய வரலாறு கூறுதலானும், சிந்தித்த பொருள் எல்லாவற் றையும் தரும் இயல்பின தாகலானும் ‘சீவகசிந்தாமணி, என்னும் பெயருடையதாயிற்றென்ப. இன்னும் இதற்கு ‘மண நூல்’ என்ற பெயரும் உண்டென்று கூறுவர்,

சீவகன் காந்தருவதத்தை முதலிய மகளிர் எண் மரை மணஞ் செய்துகொண்ட பகுதிகள் அவ்வப் பெண்கள் பெயரால் ‘காந்தருவதத்தையார் இலம்பகம்’ என்பது முதலியவாகக் கூறப்பட்டுள்ளன: அவை, 3, 4, 5, 6, 7, 8, 9, 12 - பகுதிகளாகிய இலம்பகம் எட்டு மாம். ஏனைய ஐந்து இலம்பகங்களுள் முதலாது நாம களிலம்பகம் ஆகும். அப்பகுதியில் சீவகன் கலைகளிற் சிறந்த பயிற்சி பெற்ருனென்பது முக்கியமான செய்தியாகும். அதனுல் நாமகளை மணந்தான் எனக் கொண்டு அதுவும் ஒரு மணப் பகுதி யாகுமென்று நூலாசிரியர் குறிப்பிடுகின்ருர்; “குழைமுக ஞானமென் னும் குமரியைப் புணர்க்கலுற்ருர்” எனவும், “இருந்து பொன்னேலை செம்பொன் ஊசியில் எழுதி ஏற்பத் திருந்து பொற் கண்ணியாற்குச் செல்வியைச் சேர்த் தினுரே” எனவும், “நாமகள் நலத்தை யெல்லாம் நயந்

துடன் பருகி" எனவும் கூறிய செய்யுட் பகுதிகள் இதற்குச் சான்ருகும்.

இரண்டாவது இலம்பகத்தில் சீவகன் தன் தோழனை பதுமுகனுக்கு நந்தகோன்மகள் கோவிந்தையை மணஞ் செய்வித்தமையால் அதுவும் மணப் பகுதியாயிற்று. பத்தாம் இலம்பகத்தில் பகைவென்று அரசியலைக் கைப்பற்றிய செய்தி கூறப்படுதலின் 'மண்மகளை மணந்தான்' என்ப. இதனைப் "பணைமுகைப் பைம்பொன் மாலைப் பாசிழைப் பூமி தேவி, இணைமுகை யேகமாக நுகரிய எய்திஞனே" என்பதனலறியலாம். பதினேராம் இலம்பகம் பூமகளிலம்பகம் ஆகும். அதன்கண் அரசு கைப்பற்றி நிலவுலகத்தை ஆட்சி புரிந்த செய்தி கூறப்படுதலின் "பூமகளை மணந்தான்" என்ப. "குடையோங்கிப் பரவைமாநிலம் அளித்தது களிக்கயன் மழைக்கட் பொருவில் பூமகட் புணர்ந்தனன்" என்பதனுல் அறியலாம். இறுதி இலம்பகம் முத்திமகளிலம்பகமாகும். முத்தியென்னும் வடசொல் வடமொழியிற் பெண்பாற் சொல்லாதலின் "முத்தி மகள்" என்ருர். சீவகன் பற்றறத் துறந்து வீட்டுலகம் எய்திய செய்தியைக் கூறுதலின் முத்தி மகளை மணந்தான் என்ப. இதனைக் "கேவல மடந்தை யென்னும் கேழ்கிளர் நெடிய வாட்கண், பூவலர் முல்லைக் கண்ணிப் பொன்னெருு பாகமாக... இன்பக் கடலினுள் மூழ்கிஞனே" என்பதனுனும், "பிரிதலும் பிணியும் மூப்பும் சாதலும் பிறப்பு மில்லா, அரிவையைப் புல்லி...உறையுமன்றே" என்பதனுனும் அறியலாம். சீவகனுக்கு இறுதியில் வாய்த்த பெண்மகள் பிறப்பிறப்பும் பிணிமூப்பும் இல்லாதவளாயிஞளென்று கவி கூறிய செய்தி இன்புறத் தக்கதொன்று. இங்ஙனமெல்லாம் மணப்பகுதிகளாக அமைந்தமையின் இதனை 'மண நூல்' என்று வழங்குவாராயினர்.

இனி, இப்பெருங்காப்பியத்தில் உண்மைக் காதலின் இயல்பையும், வீரத்தின் இயல்பையும் விளங்கக் காணலாம். இன்பம் அவலம் முதலிய சுவைகளைத் தக்க இடத்திற் புலப்படுத்தியிருக்கும் அழகு பாராட்டத்தக்கது. அம்முறையே பிற்காலக் கவிகளுக்கு வழிகாட்டியாக அமைந்ததெனலாம். “அமைச்சரைப்பல்லாற்றானும் சோதித்துத் தெளிந்த பின்னரே நம்பவேண்டும். என்பது முதலிய அரசியலமைப்புக்களும், அன்பு அருள் நன்றி மறவாமை முதலிய குணங்களால் விளையும் நன்மைகளும், ‘பிறர்க்கின்னா செய்தார் விரைந்து கெடுவர்’ என்பது முதலிய நீதிகளும் பிறவும் இதன்கண் தெளிவுற விளக்கப்பட்டுள்ளன. இக் காப்பியத் தலைவனாகிய சீவகன் உயர்ந்த குணஞ் செயல்களை உடையவனாக வருணிக்கப்பட்டுள்ளான்.

இவன்பாலமைந்த நற்குண நற்செயல்களைக் கவி பகைவன் நாவில் வைத்து, “அருள் வலி ஆண்மை கல்வி அழகு அறிவு இளமை ஊக்கம், திருமலி ஈகை போகம் திண்புகழ் நண்பு சுற்றம், ஒருவரிவ்வுலகில் யாரே சீவகன் ஒக்கு நீரார்” என்று பாராட்டியுள்ளார். அருண்முதற் சுற்றமுடைமை யீருகப் பதின் மூன்று குணங்கள், நன்குணர்ந்த பகைவனாகிய கட்டியங்காரன் முகமாக வெளிப்பட்டுள்ளன வென்றால், இவன் தன்னிகரில்லாத் தலைமகன் என்பது புலனாகுமன்றோ? அருள் வலி என்னும் குணங்களுள், ஒன்று மிக்க விடத்தில் மற்றொன்று நிற்றலரிதாகும். சீவகன் அருணிறைந்த கொடைக் குணமும் அளவிகந்த உடல் வலியும் படைத்தவனென்று அவ்விரண்டு குணங்களின் பயன்களை நேரிற் கண்டோர் கூற்றாகக் கவி ஒரு சந்தர்ப்பத்தில் எடுத்துரைக்கின்றார். “கொடையுளும் ஒருவன் கொல்லும் கூற்றினும் கொடிய வாட்போர்ப், படையுளும் ஒருவனென்று பயங்கெழு பனுவனுண்ணூல், நடையுளார் சொல்லிற்றெல்லாம் நம்பி சீவகன்பாற்

கண்டாம்” என்பது அப்பகுதியாகும். பாரதத்தை உணர்ந்தோர் கொடைக்குக் கன்னனையும் படைக்கு அருச்சுனனையும் எடுத்துக் காட்டுவர். இங்கே இவ் விரண்டும் நம்பி சீவகன்பாற் காணப்பட்டனவாம். தான் பிறந்த நகரத்துள்ள ஆயர்களின் பசுக்கூட்டங் களைப் பக்கத்துள்ள வேடர்கள் கவர்ந்து சென்றனராக அப்பொழுது அரசு வீற்றிருந்த கட்டியங்காரன் ஆனிரைகளை மீட்க வியலாத நிலையில் சீவக குமரன் சென்று அவ்வேடர்களை அச்சுறுத்தி ஓட்டி ஆனிரை களை மீட்ட நிகழ்ச்சியை அறிந்தோர் இங்ஙனம் பாராட்டுவராயினர். எளிதிற் கொல்லத்தக்க வேடர் களின் உயிரை அவர்களுக்கும், ஆனிரைகளை ஆயர் களுக்கும் வழங்கியதாலும், கொடிய அவ்வேடர்களை ஒறுத்தடக்கியதாலும் கொடைத் திறனும் படைத்திற னும் ஒருங்கு வாய்ந்தவனென்று பாராட்டப்பட்டான். இது கன்னிப் போராகும். இக்குணங்கள் மிக்கு வெளிப் பட்ட இடங்கள் இன்னும் பலவுள. அவை அவ்வப் பகுதியில் தெளிவுறுத்தப்படும்.

கவிச்சுவை ஒன்பதனுள் இன்பச் சுவையே சிறந்த தென்ப. திருக்குறளின் உரையிற் பரிமேலழகர், “இச் சிறப்புப்பற்றி வடநூலுட் போசராசனும் சுவை பல வென்று கூறுவார் கூறுக; யாம் கூறுவது இன்பச சுவை ஒன்றனையுமே என இதனையே மிகுத்துக் கூறி னான்” என்பர். அச்சுவையையே பெரிதும் நுதலியது இப் பெருங்காப்பியம். இன்பம், உவகை, சிருங்காரம் என்பன ஒருபொருளனவாம். அது தோன்றுதற்குரிய நிலைக்களம் “செல்வம் புலனே புணர்வு விளையாட் டென்று, அல்லல் நீத்தவுவகை நான்கே” என்ற விதிப் படி, செல்வ நுகர்ச்சியும் கல்வியறிவும் காதலின்பமும் நீர் விளையாட்டு முதலியனவும் ஆம். சீவக குமாரன் அரச குமரனாய்ச் சிறந்த பெரும் பொருளாளனாகிய கந்துகன் மனையில் வளர்ந்ததனாலும், பகைவென்று

அரசியற் செல்வத்தை யடைந்து மனைவியர் மக்களுடன் வாழ்ந்ததனுலும் செல்வ நுகர்ச்சி புலனுகும். கல்விப் பயிற்சியிற் சிறந்தவனென்பதை 'நாமகள் நலத்தை யெல்லாம் நயந்துடன் பருகி'' என்பதனுன் அறியலாம். சிறந்த இலக்கியங்களையும், படைக்கலத் தொழில் முதலிய கலைகளையும், இசைக் கலைகளையும், மறுமைக்குரிய தத்துவ நூல்களையும் நன்கு கற்றவன் என்பதும், யாழ் வாசிப்பதிற் சிறந்த நிபுணன் என்பதும், வரலாற்றுப் பகுதிகளாலறியலாம். காந்தருவ தத்தை யென்பாளோடு நடத்திய யாழ்ப்போரில் வெற்றியடைந்தது இங்கே கருதத் தக்கது. சமய நூலுணர்ச்சியும், பிறர்க்குத் தெளிவுறப் போதிக்கும் ஆற்றலும் மிகப்படைத்தவன் என்பதற்குப் பற்பல சான்றுகள் உள்ளன. சீவகன் வழியெதிர்ப்பட்டான் ஒருவன் வினுவிய வினுக்களுக்கு விடையிறுக்கு முகமாக "என் மனைவியரும் நால்வர் மக்கள் ஒவ்வாதார் தாமில்லை ஒப்பான் ஒரு மகனே நால்வர் ஒரு வயிற்றுப் பிறந்தான்'' என விடை கூறினுன். இவ்விடையில் நான்கு மனைவியரிடத்தினின்றும் ஒரு நன்மகன் பிறந்தான் என்று கூறக்கேட்ட அவ் வழிச் செல்வோன் நகைத்து "மனைவியர் நால்வரிடத்தினின்றும் ஒரு மகன் பிறத்தல் எப்படிப் பொருந்தும்'' என்று கேட்க, சீவகன் கூறிய விடை பாராட்டத் தக்கது.

"நற்றுனஞ் சீலம் நடுங்காத் தவமறிவர்
சிறப்பிந் நான்கும்
மற்றுங் குச் சொன்ன மனைவியரிந் நால்வரவர்
வயிற்றுட் டோன்றி
யுற்றுன் ஒரு மகனே மேற்கதிக்குக் கொண்டுபோ
முரவோன் றன்னைப்
பெற்றுர் மகப்பெற்றுர் அல்லாதார் பிறர்மக்கள்
பிறரே கண்டீர்''

இச்செய்யுளால் தானம் சீலம் தவம் இறைவர் பூசனை ஆகிய இந்நான்கும் மனைவியர் என்பதும், இந் நால்வர் வயிற்றினும் பிறந்து பயன்றருவான் நல்வினையாகிய மகன் ஒருவனே என்பதும், இப்புண்ணிய குமரனைப் பெற்றாரே நன்மகப் பேறுடையார் என்பதும் புலனும்.

இனிக் காதலின்பமும், நீர் விளையாட்டு முதலிய மகிழ்ச்சியும் இக் காப்பியத் தலைவன்பாற் பெருக்க மாகக் காணலாம். மகளிர் எண்மரை மணந்து அன்னு ரோடு நுகர்ந்த இன்பங்களே இவ்வுவகை நிலைக்களங் களுக்குப் போதியனவாகும். கேமசரி என்னும் ஒரு பெண் மகள் இல்லத்திற்கு அவள் தந்தையால் அழைக் கப்பட்டுச் சென்ற சீவகன் அப் பெண்மணியின் காத னேக்கம் தனக்குப் புலப்பட்ட முறையைக் கூறுமுக மாக எழுந்த செய்யுள் சுவைத்துணர்ந்து இன்புறத் தக்கது.

**காதன்மை கண்ணுளே யடக்கிக் கண்ணெனும்**
**தூதினுற் றுணிபொருள் உணர்த்தித் தான்றமர்க்கு**
**ஏதின்மை படக்கரந் திட்ட வாட்கணேக்**
**கோதநீ ரமுதமும் உலகும் விற்குமே.**

என்பது அப் பாடலாகும்.

அந் நங்கையர் திலகம் சீவகனுடைய அழகு மிக்க தோற்றப் பொலிவில் ஈடுபட்டுத் தன்னுள்ளத்தெழுந்த காதற்பெருக்கை ஏனையோர் அறியாவாறும், சீவகன் மாத்திரம் அறிந்துகொள்ளவும் எங்ஙனம் புலப்படுத் தாள் என்பதை இச் செய்யுள் சுவைபடத் தெளி வுறுத்துகின்றது. அவள் தன் அளவிகந்த காதலை யெல்லாம் தன் கண்ணுள்ளே அடக்கினுளாம்; உள் ளத்தே தோன்றி மிக்கதால் இடம்பெருமல் வெளிப் படுதற்கு வாயிலாகிய கண்ணில் அடக்க நேர்ந்தது. பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும் ஆதலின் கண்ணிடனுதல் பொருத்தமே. "இத்துணைக் காதல்

நிறைவுடையேன், என்னை மணந்து கோடல் வேண்டும்" என்று தான் றுணிந்த பொருளை அக்கண்ணுகிய தூதிணுல் சீவகனுக்கு உணர்த்தினளாம். ஆகவே அவன்பாற்சென்ற கடைக்கண்ணேக்கம் அவள் உண்மைக் கருத்தைப் புலப்படுத்தி அவனைத் தன் வயப் படுத்திய தென்பது புலனும். இங்ஙனம் இருமுது குரவர் முதலிய உறவினர் சூழவிருந்த நிலையில் இவள் தன் காதற்பார்வையை அவன்பால் செலுத்தினுளென் ருல் அஃது அவர்க்குப் புலப்படாதோ எனின் அது குறித்தே "தான் தமர்க்கு ஏதின்மைபடக் கரந்திட்ட வாட்கணேக்கு" என்று கூறப்பட்டது. இவள் கட் பார்வை சுற்றத்தார் அயன்மையென்று கருதும்படி சீவகன்பால் மறைவிற் செலுத்தப்பட்டதாம். தனக்கு மாத்திரம் உண்மையைப் புலப்படுத்திப் பிறரறியா வாறு மறைக்கப்பட்ட அவள் நோக்கின் திறமையை வியந்து சீவகன், இந்நோக்கம் பாற்கடலிற்றேன்றிய அமிழ்தத்தையும் உலகையும் தனக்கு விலையாக விற்கும் என்று கருதுவாணுயினன். உவகைச் சுவை யில் "விப்பிரலம்பம்" என்று வடநூலிற் கூறப்படும் காதலர் பிரிவிரக்கம் இந்நூலிற் பலவிடங்களில் சுவை நலந் தோன்றக் கூறப்பட்டுள்ளது. இஃது அவலச் சுவைபோற் காணப்படினும் முடிவில் இன்பத்தில் நிலை யுறுதலின் உவகை யென்றே கொள்ளல் வேண்டும். இதனையே உவகையிற் சிறந்த கூருகக் கவிகள் மேற் கொண்டனர்.

இதுகாறும் கூறியவாற்ருல் காப்பிய இலக்கணங் களெல்லாம் நிரம்பப் பெற்றுப் பயில்வார்க்குப் பல் வகைச் சுவைகளாலும் அறிவின்ப விருந்தளித்து மகிழ்வுறுத்துவது இச் சீவக சிந்தாமணி என்பது போதரும்.

3

# இசையின்பம்

மக்களுக்கு இம்மை வாழ்க்கையில் நுகரவேண்டிய இன்பங்களுள் இசை யின்பம் ஒன்று. இசை, அறிவுடைய மக்களையும் குழந்தைகளையும் அறிவு குறைந்த விலங்கு முதலியவற்றையும் இன்புறுத்தும் இயல்பினது. இவ்விசை சாமவேதத்தினின்றும் தோன்றியதென்பது வடமொழி நூலார் கொள்கை. தமிழாசிரியர் இயல் இசை கூத்து எனத் தமிழை முக்கூறுபடுத்திக் கூறுவர். இயல் இசையினும், இசை இயலினும் விரவும். கூத்தில் இவ்விரண்டும் விரவும். இசை நாத மாத்திரையாய்ச் சுரவரிசைகளோடமைதல் ஒருவகை. பொருள் வெளிப்பட விளங்கத்தக்க பாடல்களோடு அமைதல் ஒருவகை. முன்னது இசை இலக்கணம் அமைந்த புலவர்களே பெரும்பாலும் கேட்டு உணரத் தக்கது. பின்னது இசையியல் உணர்ந்தோரும் ஏனையோரும் கேட்டு அநுபவிக்கத் தக்கது. இயற்றமிழில் எழுத்துச் சொல் இலக்கணங்களைப் பற்றிச் சொற்பொழிவு செய்யப்பட்டால் அதனை இலக்கணம் வல்லாரே உணரமுடியும். அவ்விலக்கண அமைதியோடு கூடிய இலக்கியங்களைப்பற்றிப் பேசினால் எல்லோரும் கேட்டு இன்புறுவர். இம்முறை இசைப்பகுதியினும் மேற்கொள்ளத் தக்கது. இசை இலக்கணக் குறியீடுகளும் பிறவும் தமிழில் விரிவாக இருந்தனவென்பதற்

இது குமரன் தமிழிசை மலரில் வெளிவந்தது.

குச் சிலப்பதிகாரப் பெருங்காப்பியமும் அரங்கேற்று காதைக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையும் சான்ருவனவாம். இசை நுணுக்கம் முதலிய பல நூல்கள் பண்டு இருந்தன என்பதையும் அறிகின் ரேம்.

தமிழ் மொழியை இயல் இசை கூத்து என முத் திறப்படுத்திக் கூறியதொன்றே தமிழிசைப் பெரு மையை விளக்குவதாகும். ஒரு மொழியை இவ்வாறு பாகுபடுத்திக் கூறுதல் தமிழிலன்றி வேற்று மொழி களில் காணப்படாததொன்று. இசை வல்லாராகிய பாணர் என்பாரைத் தமிழ் நாட்டரசர்கள் ஆதரித்து வந்த செய்தியைப் பண்டைச் சங்கநூல்களிற் பரக்கக் காணலாம். இசையிற் சிறந்த பாணர்களுக்கும் ஆட லில் வல்ல விறலியர்களுக்கும் உயர்ந்த பட்டங்களும் பரிசுகளும் வழங்கப்பட்டு வந்தன. இசைப்பாடல் களைச் சாகித்தியம் என்று வடமொழியாளர் வழங் குவர். சாகித்தியம் ஏதாவது ஒரு மொழிபற்றி நிகழ் வது என்பதும், தனியிசை ஒரு மொழியும் பற்ருது சுர முறையில் நிகழ்வதென்பதும் நம்மால் அறியப் பட்டன.

தமிழ் நூலார் பண் பண்ணியல் திறம் திறத்திறம் என்று முறைப்படுத்திய இராக வகைகளை வடநூலார் சம்பூர்ணம் சாடவம் ஔடவம் சதுர்த்தம் என்று குறி யிட்டாளுவர். இங்ஙனம் இலக்கியத்திற் கலவாது நிகழும் இராகங்களும் ஒன்பான்சுவைகளுக்கும் நிலைய மாகும் என்பது நூலோர் கொள்கை. இஃது அநுபவத் தாலும் உணரப்பட்டதொன்று. ஆயினும் இரசபாவங் களாகிய சுவையும் கருத்தும் சாகித்தியத்தில் இசை இயையும் பொழுதே நன்கு வெளியாகும். சுவையும் கருத்தும் உணர்ந்து அநுபவிக்கும்பொழுதே மக் களுக்கு இன்பமுண்டாகும். இசைக்கருவிகளில் சாகித் தியங்களின் சுரநிலைகளே அமையுமன்றிச் சுவையும்

கருத்தும் மிடற்றுப்பாடலில் வெளிப்படுதல்போல் வெளிப்படா. இன்பத் தோற்றத்தின் அடிப்படையைப் பற்றியே இசை நிகழவேண்டும் என்பது கேட்கும் பொது மக்களின் வேட்கையாகும். மிக்க சுவையுள்ள உணவு வகைகளை ஆக்குவோர் திறமையெல்லாம் அவற்றை உண்பவர் இன்புறும் நிலையை எதிர்பார்த்து நிற்பனவாமன்றே! அங்ஙனமே இசைவகைகளின் தனி நிலையை அறிந்து பாடுவோர், கேட்பவர்களின் இன்ப நுகர்ச்சியைக் கண்டு மகிழும் கடப்பாடுடைய ராவர். கேட்போர்க்கு இன்பம் ஊட்டவேண்டின் இனிய இலக்கியப் பாடல்களில் இசை கலப்பது மிக அவசியமாகும் நாட்டிய நூல்களில் அவிநயக்கலை மிகச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. இனிய இசை யுடன் கலந்து பாடப்படும் பாடற் கருத்துக்களை வாயி னுற் கூருமல் கண் கை முதலிய உடலுறுப்புக்களால் புலப்படுப்பதே அவிநயமாகும். பொருட் குறிப்பில் லாத ஆடல்களே தாளத்தின் அளவில் அமைவன வாம். பொருள் புலப்படுக்கும் அவிநயத்திற்கு மொழி பற்றிய இனிய பாடல்கள் இன்றியமையாதன. உயர்ந்த கருத்துக்களை இனிய சுவையுடன் கூடிய இசைவழிப் புலப்படுப்பதே நாட்டியக்கலையின் நோக்க மாகும். அக்கருத்துக்களையே உரைநடையில் விளக் கிப் பேசினுல் கொள்ளுவோர் சிலரேயாவர். இசைப் பாடல்களுடன் இயைத்து ஆடல் அவிநயத்தோடு விளக்கினுற் கேட்டின்புறுவோர் பலராவர். ஆதலின் கூத்துப் பகுதிக்குச் சாகித்தியம் இன்றியமையாத தென்பது வெளிப்படை. யாழ் முதலிய இசைக்கருவிக ளெல்லாம் பாடற்பயனுகிய இன்பத்தைப் பெருக்கு தற்கே அமைந்தனவாம். “வேதத்தொலி கொண்டு வீணைகேட்பார் வெண்காடு மேவிய விகிர்தனுரே” என்று இசைத்தமிழாகிய தேவாரத்தில் கூறப்பட் டுள்ளது. இதனுல் வேதமாகிய இசைப்பாடலும் ஒலி

யாகிய இசையும் வீணையாகிய கருவியும் இயைதலினு லேயே கடவுளும் இன்புறுவர் என்னும் குறிப்புப் புலனும் ஓர் இசைப்பாடலின் ஓர் அடியை எடுத்துப் பலமுறை பாடுதலைக் கேட்கின்றோம். ஏன் அங்ஙனம் பாடல்வேண்டும்? அப்பாடலில் அமைந்த இரசபாவங் களை வெவ்வேறு விதமாகப் புலப்படுத்திக் கேட்போரை இன்புறுத்துதற்கேயாம். இப்பயன் இல்லையாயின் ஒன்றைப் பலமுறை பாடுதல் கூறியது கூறலாகிய குற்றத்தின்பாற்படுமன்றோ! சுவைக் கருத்துக்களின் வேற்றுமையைப் புலப்படுக்க இயலாத இசைப்பாடகர் கள் அங்ஙனம் பன்முறை திருப்புதலால் விளையும் பயன் காலக் கழிவேயாம். ஆகவே இசை தனி நிலை யில் இரசபாவங்களை விளைப்பதினும் மிகுதியாகப் பாடல்களோடு கலந்தபொழுது விளக்குமென்பது அநுபவத்திற்கண்டது.

இசைக்கு இயைய ஆக்கப்படும் பாடல்களைத் தமிழ் நூலார் வரிப்பாடல் என்பர். சிலப்பதிகாரத்திலுள்ள கானல்வரி வேட்டுவவரி முதலியனவும் இசைத்தமிழின் பாலனவே. பரிபாடல் என்னும் சங்கச் செய்யுட்கு முன்னையோர் பண் வகுத்தமையை நோக்குங்கால் பல்லாயிரம் யாண்டுகளுக்கு முன்னரே தமிழிசை மிகப் பெருமைபெற்று விளங்கிய தென்பதை அறியலாம். திருஞானசம்பந்தர் முதலிய சைவப் பெரியார் பாடி யருளிய தேவாரப் பாசுரங்கள் எல்லாம் இசைத்தமிழ்ப் பாடல்களேயாம். மிக உயர்ந்த தத்துவ ஞானநுபவங் களும் இறைவன் திருவருட்பெருமை முதலியனவும் ஆகிய சிறந்த பொருளுண்மைகளைத் தம்மகத்தே கொண்டு திகழும் தேவாரம் முதலிய பாசுரங்களை அவற் றிற் கியையப் பெரியோர்கள் கண்ட பண்களுடன் பாடக் கேட்பின் எவருடைய உள்ளந்தான் உருகாம லிருக்கும்? கன்னெஞ்சமும் கரையு மன்றோ! இங்ஙனம் உள்ள முருகி ஈடுபடுதற்குக் காரணம் பண்ணுட

னமைந்த பாடற் பொருளுணர்ச்சியேயாம். நோய் தீர்க்கும் நன்மருந்துகளை உண்பிக்கக் கருதும் மருத்துவர் அம்மருந்தை இனிமைச் சுவையுள்ள வெல்ல முதலிய அநுபானங்களுடன் கலந்து கொடுத்தல் போல, மெய்யுணர்வின் பயனாகிய உண்மைகளை மக்களுக்கு அறிவிக்கக் கருதிய பெரியோர்கள் அவற்றை இனிய இசையிற் கலந்து ஊட்டுவாராயினர். இவ்வுண்மையை "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்" என்னும் திருநாவலூரர் திருவாக்கானும் உணரலாம்.

இனி, இசைக்குரிய பாடல்கள் எம்மொழியில் இருக்கவேண்டும் என்பதைப் பற்றிச் சில கூறவிரும்புகின்றேன். இஃது ஏதுக்கள் இன்றியே எளிதில் உணரத்தக்க தொன்று. மக்களுக்குரிய நாட்டு மொழியில் இருப்பது இன்றியமையாதது. வேற்று மொழியில் அமைந்த பாடல்களைக் கேட்டெய்தும் இன்பம் இசையின் தனிநிலையில் எய்தும் இன்பத்தினும் சிறந்ததாகாது. வேற்று மொழிப் பாடல்களும் சாகித்திய சம்பந்தமில்லாத இசையும் இசைக் கருவிகளின் மூலம் கேட்கப்படும் கீதமும் ஒத்த தன்மையனவேயாம். சுவைக் கருத்துக்களைத் தன்மயமாக உணர்ந்து அநுபவிப்பதற்குத் தாய்மொழிப் பாடல்களே ஏற்றனவாம். கேட்கும் மக்களுட் பலர் தமக்குரிய மொழிப்பாடற் கருத்துக்களை உணர்தற்கே தகுதி யில்லாதவராயிருக்கும் இக்காலத்தில், சிறிதும் பொருள் விளங்காத வேற்று மொழிப்பாடல்கள் அவர்க்கு எவ்வாறு பயன்படும்? சில இசையரங்குகளில் பொருள் விளக்கமில்லாத வேற்று மொழிப் பாடல்களைக் கேட்டுத் தலையசைக்கும் குழுவைக் காண்கின்றோம். அக்குழுவிற் பலர் இசையின் இயல்பையோ பாடற் பொருளையோ அறியும் தகுதியுடையராக இருக்கமாட்டார். ஏதோ இசைக்கலையில் தமக்கு அறிவுண்டென்று பிறர் மதிக்க

வேண்டும் என்னும் குறிக்கோளே அன்னார் தலை நடுக்கத்திற்குக் காரணமாகும்.

ஓர் இசையரங்கிற்கு யான் சென்றிருந்த பொழுது இசையிற் சிறந்த புலவர் ஒருவர் பல்லவி சுரம் பாடினர். சுரவேகம் வரவர அதிகரித்தது. அந்நிலையில் மிருதங்கம் வாசித்தவர் பாடகரை ஒத்த தகுதியுடையர் ஆதலின் அவர் விரைவினும் ஒருபடி மேலாகவே சென்றனர்: தாள நுட்பங்களை இருவரும் உணர்ந்தவர்களாதலால் அந்நிலை அவர்கள் திறமையைப் புலப்படுத்திய தெனினும், கேட்டவருட் பெரும் பாலோர்க்கு அது மற்போர் நிகழ்ச்சிபோலக் காணப்பட்டது. அக் கூட்டத்தில் தமிழ்ப் புலமையில் பெரும் புகழ்படைத்த பெரியார் ஒருவரிருந்தனர். அவர்க்கு இசையறிவும் நன்கு உண்டு. அவர் இடையே எழுந்தனர். நல்ல சமயத்தில் எழுந்திருக்கிறீர்களே என்றேன். அதற்கு அவர் "இக் கடும் போர்க்கிடையே என்னைப்போன்ற முதியவர்கள் சிக்கிக்கொண்டால் எங்ஙனம் மீள முடியும்?" என்று நகைச்சுவை தோன்றக் கூறினர். இதனால் தாளமுறை வேண்டா என்பது என் கருத்தன்று. மிக நீடித்துப் போகாமல் ஓர் அளவில் முடிய வேண்டுமென்பதற்கே யான் கண்ட இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடலானேன். மற்றோர் அமயம் ஒரு கலியாண வீட்டில் நிகழ்ந்த இசையரங்கிற்குச் சென்றிருந்தேன். நீண்ட நேரம் சுர வரிசைகளும் வேற்று மொழிப் பாடல்களும் பாடப்பட்டன. பாடியவர் இனிய குரலும் பொருட் சுவையில் ஈடுபடும் அறிவும் வாய்ந்து புகழ் படைத்த இசைப்புலவராவர். அவர் வாய்ப்பு அரிதாகலின் பாடிய கீர்த்தனை ஒன்று முடிவானதும் யான் அவரை நோக்கித், "தமிழ்ப் பாடல்களில் ஏதேனும் பாடலாகாதோ" என்றேன். அது கேட்டதும் அவ்விசையரங்கை மேற்பார்த்து நடத்திக் கொண்டிருந்த இளைஞர் ஒருவர் என்னைப் பார்த்து நகைத்தனர். அச்

சிரிப்புக் குறிப்பு அவருக்குள்ள இசையறிவு பெரிதென் பதையும், யான் அரங்கின் இயல்பறியாமையால் தமிழ்ப் பாட்டுப் பாடச் சொன்னேன் என்பதையும் புலப்படுத்தியது. நெடு நேரம் விளங்காத பாடல்களைப் பாடிவிட்டு முடிவிற் பாடுவோரும் கேட்போரும் அயர்ந்த நிலையில் தமிழ்ப் பாடல்களில் ஒரு சில புறக் கணிப்பாகப் பாடுதலே இசையரங்கின் இயல்பென்பது அவர் கருத்தெனப் பின் அறிந்தேன். அம் முறையே இதுகாறும் இசைப்புலவர்கள் மேற்கொண்டதுமாம்.

நம் நாட்டு மொழியாகிய தமிழோ இயற்கையிலே இனிமை வாய்ந்தது; இசைக்குப் பெரிதும் ஏற்ற தொன்று; இனிய சொற்களும் தொடர்களும் இசையி லமைந்து கேட்பவரைப் பரவசப்படுத்தும் இயல்பின. இவ்வியைபு நோக்கியன்றே, அப்பர் தம் தேவாரத்தில் "தமிழோடிசை பாடல் மறந்தறியேன்" என்றருளினர். நாளடைவில் தமிழிலுள்ள இனிய இசைப் பாடல்கள் எடுத்தாளப்படாமையானும், புதியன ஆக்குதற்கு ஊக்க முறுத்துவாரின்மையானும், இக்காலத்து இசைப் புலவருட் பலர் மொழியறிவு செவ்வையாக வாய்க்கப் பெருதவராக இருக்கின்றமை யானும் தமிழ்ப் பாடல் குறைந்து வர, வேற்று மொழிப் பாடல்களே விஞ்சி நின்றன. பிற மொழி பாடல்களைப் வரவேற்றுத் தம் மொழிப் பாடல்களைப் புறக்கணிக்கும் இயல்பு தமிழர் களிடைப் பெருகிவரலாயிற்று. இக்காலத்துப் புகழ் படைத்த இசைப் புலவர்களுட் பலர் வேண்டிய ஓர் அளவு கூடத் தமிழ் மொழிப் பயிற்சியில்லாதவராகக் காணப்படுகின்றனர். அன்னூர் கேள்வி மூலம் கற்ற ஒரு சில தமிழ்ப் பாடல்களைப் பாடும்பொழுது பொரு ணிலை தெரியாமல் சொற்களைப் பிய்த்துச் சிதைத்து விழுங்கி விடுகின்றனர். சொற் பொருளுணர்ச்சி யில்லாமையால் பாடுங்கால் உள்ளம் ஈடுபடுதல் அவர்க்கு அரிதாகின்றது. பாடுவோர் அநுபவித்துப்

பாடவில்லையானுல் கேட்பவர்க்கு எங்ஙனம் இன்பம் நிகழும்? பாடுவோர் நாவளவிற் பாடக் கேட்பவர் செவி யளவிற் பட்டு ஒழியும். அவ்வளவன்றி இருவருளத்தை யும் தொடாத பாடலால் விளையும் பயன் என்னையோ! இதனுல் வேற்று மொழிப் பாடல்களை அறவே ஒழித்து விடவேண்டும் என்பது பெறப்படாது. இக்காலத்தில் நிகழும் இசையரங்குகளில் வேற்றுமொழிப் பாடல் களுக்குக் கொடுக்கப்படும் கால அளவை நந்தமிழ் மொழிப் பாடல்களுக்கும், தமிழ்ப்பாடல்களுக்குக் கொடுக்கப்படும் அவகாசத்தை வேற்றுமொழிப் பாடல் களுக்குமாக மாற்றிக்கொண்டாலே போதியது.

நல்ல சாகித்தியங்கள் புதியன பல வெளிவர வேண்டுமானுல் இசைப்பயிற்சியோடு மொழிப் பயிற்சி யுமுடைய புலவர்களே முன்வரவேண்டும். தனி இசைப் பயிற்சி மாத்திரம் உடையவர்கள் ஓர் அளவாவது மொழிப் பயிற்சியும் பெற முயலவேண்டும். நாட்டு மொழிக்கல்வி சிறிதளவு பயின்ருலும் வழுவறப் பயிலு தல் நலமாம். அம்மட்டிற் பாடுவோர் கேட்போர் எல்லோருக்கும் ஓரளவு இன்பம் விளைவதாம்

இந்நிலையில் தமிழர் தம் இயல்பை மறந்து பெரும் பாலும் வேற்றுமொழிக்கே இடன் அளித்துத் தம் மொழிப் பாடல்களைப் புறக்கணித்து வருதலைக் கண்டு மனம் பொருது இசையாகிய இனிய தேனில் தமிழ்ப் பாடலாகிய அமிழ்தினைக் கலந்து தமிழ் மக்களுக்கு ஊட்டுவிக்க முன் வந்தவர்கள் தமிழ்ப் பல்கலைக் கழகம் கண்டு தமிழர் வாழ்க்கைக்கு அடிகோலிய பெருங் கொடைவள்ளல் செட்டிநாட்டு ராஜா. ஸர். Dr. அண்ணு மலைச் செட்டியார் அவர்களே யாவர். எச்செயலை மேற் கொண்டாலும் நெடிது சூழ்ந்து துணிவதும், துணிந்த பின் எத்துணை இடையூறு நேரினும் நெகிழவிடாது முயல்வதும், உறுதியாகப் பயன் விளைத்து மகிழ்வதும்

இவர்களிடத்துக் காணப்படும் அருஞ்செயல்களாகும். இசையரங்குகளிற் பெரும்பாலும் தமிழ்ப்பாடல்களே பாடப்படல் வேண்டுமென்று இவர்கள் மேற்கொண்ட முயற்சிக்குச் சில இடையூறுகள் நேர்ந்தனவாயினும் அவையெல்லாம் இவர்களுடைய அறிவாற்றலோடு கூடிய விடா முயற்சியால் ஆற்றல் குன்றிவருகின்றன. தமிழ்ச் சாகித்தியங்களைப் பெருக்குதற்கு மேற்கொண்ட செயல்கள் கூடிய விரைவிற் பயன் விளைவிக்கும் என்னும் நம்பிக்கையை உண்டுபண்ணுகின்றன. ஏழிசையாய் இசைப் பயனாய் இன்னமுதாய் விளங்குகின்ற இறைவன் திருவருள் முன்னிற்பதாக.

இதுகாறும் கூறியவற்றாற் போந்த தொகைப் பொருள் :—இசை தனித்தும் சாகித்தியத்தோடியைந்தும் நடைபெறும் என்பதும், தனித்த இசையினும் சாகித்தியத்துடன் நிகழ்வது இன்ப மிகுதியைச் செய்யும் என்பதும், சுவையும் கருத்தும் நன்கமைந்த வரிப் பாடல்கள் கேட்பவருள்ளத்தைத் தம் வயப்படுத்தி இன்புறுத்தும் என்பதும், அத்தகைய சாகித்தியங்கள் அவ்வந்நாட்டு மொழிகளில் ஆக்கப்பட்டனவாக இருத்தலே பொருளுணர்ச்சிக்கு ஏற்றதாகும் என்பதும், அம்முறையில் நம் நாட்டில் தமிழ்மொழிப் பாடல்களே பெரும்பாலும் இசையரங்குகளிற் பாடப்படல் வேண்டும் என்பதும், வேற்று மொழிப் பாடல்கள் மிகுதியாகவும் தமிழ்ப் பாடல்கள் சுருங்கியும் நிகழும் குறை பரிகரிக்கத்தக்க தென்பதும், தமிழிற் பண்டைக்காலந் தொட்டு இசை ஒருகூறாக நின்று பெருமை செய்வ தென்பதும், இத்தகைய தமிழிசையை வளர்த்தற்குச் செட்டிநாட்டு ராஜா. ஸர். அவர்கள் மேற்கொண்டுள்ள முயற்சி பாராட்டத்தக்கதென்பதும், அம்முயற்சியின் பயனாக விரைவில் தமிழிசை வளர்ச்சியடைந்து தமிழர் ஆக்கம் ஓங்கும் என்பதும் பிறவுமாம்.

### வெண்பா

இன்ப வுணர்ச்சி யினிய தமிழிசைக்கே
என்ப துணர்மி னிருநிலத்தீர்—துன்பொழிவு
வாய்ப்ப முயன்மின் மருளன்மின் மாசிரிய
ஏற்ப விழிமி னெழுந்து.

4

# கம்பன் கவிநலம்

அன்புமிக்க ஐயன்மீர்! அன்னைமீர்!

கல்வி கொடை வீரம் முதலியவற்றால் புகழுடலை இந் நிலவுலகில் நிறுவி மறைந்த பெரியோர்களின் திரு நாட்களில் திருவிழாக் கொண்டாடுதல் இன்றியமை யாததொன்று. இம் முறையில் இன்று நம் அரசியல் தலைநகராகிய இச் சென்னைமாநகரில் கவிஞர் தலைமணி யாகிய கம்பருக்குத் திருவிழா எடுத்துக் கொண்டாட நேர்ந்தது தமிழன்பர்களுக்குப் பேருவகை அளிப்ப தாகும். எல்லாம்வல்ல ஆண்டவனுக்கு எடுக்கும் திரு விழாவில் அன்புவிருந்து சிறந்ததாகும். புலவர்களுக்கு எடுக்கும் திருவிழாவில் அறிவு விருந்து சிறந்ததாகும். இவ்விரண்டனுள் அறிவுவிருந்து உண்ணும்பொருட் டுக் கூடியிருக்கும் இப்பேரவையில் எனக்குத் தலை மைப் பேறளித்துப் பெருமைப்படுத்திய இத்திருவிழாக் கழகத்தாருக்கு என் நன்றியறிவை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அன்புடையீர்!

**"கல்வியிற் பெரியன் கம்பன்"** என்று, பெருமைக்கு ஏது வாகிய கல்விக்கு எடுத்துக்காட்டாக அறிஞரால் மேற் கொள்ளப்பட்டவரும், எல்லாச் சுவைகளுக்கும் நிலைக்

*இது 16-4-44ல் நிகழ்ந்த சென்னை கம்பர் மாநாட்டுத் தலைமை முன்னுரை.*

களமாக இராமாவதாரப் பெருங்காப்பியத்தைச் சிறந்த முறையில் ஆக்கி அளித்த கலை வள்ளலும் ஆகிய கம்ப நாடரின் பெருமை இத்தமிழுலகமேயன்றி ஏனைக் கவியுலகங்களும் உணர்ந்து இன்புறும் நிலையில் விளங்குகின்றது. ஓர் உயர்ந்த கவியின் இயல்பை அளத்தற்கு மற்றொரு கவியுள்ளமே சிறந்த கருவியாகும். அம்முறையில் இரகுவமிசம் என்னும் பெருங் காப்பியத்தைத் தமிழிற் பாடிய அரசகேசரி என்னும் புலவர்,

**கற்றார் கலியிற் பெரிதாந்தமிழ்க் கம்பநாடன்**
**உற்றாங் குரைத்தான் உரையாதன ஓதுகிற்பாம்**

என்று புலவர் பெருமானாகிய கம்பர் பெருமையில் ஈடு பட்டுப் பாராட்டுவாராயினர். கம்பர் இயற்றி அளித்த தொடர்நிலைச் செய்யுளாகிய இராமாவதாரத்தில் காப்பிய மாந்தராகிய இராமன் சீதை அநுமான் முதலியோரின் குணஞ் செயல்களின் இயல்புகள் மிகத் தெளிவுறுத்தப்பட்டுள்ளன. உயர்ந்த கருத்துக்களை எடுத்துக் கூறிக் கேட்போரைச் செயற்படுத்தும் நெறியில் ஒரு பொருளை மறைநூல் கூறுதல் தலைவன் தன் பணியாளனுக்கு இடும் கட்டளையை ஒக்கும் எனவும், அதனையே அறநூல் கூறுதல் ஓர் அன்பன் தன் நண்பனுக்குக் கூறுவதை ஒக்கும் எனவும், காப்பியம் கூறுதல் ஒரு காதலி தன் இனிய காதற் கிழவனுக்குக் கூறுவதை ஒக்கும் எனவும் ஒரு புலவர் கூறியுள்ளார். இம்முறையுள் இறுதியிற் கூறப்பட்டதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக உள்ளது கம்ப ராமாயணமாகும்.

இக்காப்பியச் செய்யுட்களைப் படிக்குங்கால் நாவிலும் உள்ளத்திலும் தேனூற்றுப் போல இனிமைச் சுவையே விஞ்சி நிற்கின்றது. சங்கத்துச் சான்றோர் செய்யுட்களுக்குப்பின் சிலப்பதிகாரம் மணிமேகலை சிந்தாமணி முதலியவை தோன்றின. இவை கதை

தழுவிய தொடர்நிலைச் செய்யுட்களாதலாலும், பாநலம் பழுத்துப் பயில்வார்க்கு இன்பஞ் செய்யும் சுவையுடைமையாலும் அறிவுடையாரால் மிக விரும்பிக் கற்கப்படுகின்றன. இவற்றுள் சீவக சிந்தாமணிக் காப்பிய நடை நெறியை மேற்கொண்டு, திருக்குறளின் அரிய கருத்துக்களில் தோய்ந்து, இனிய ஓசைநயந்தோன்றப் பிற்காலத்து எழுந்த அரிய தொடர்நிலைச் செய்யுள் கம்ப ராமாயணம் ஆகும்.

இது மக்களுடைய வாழ்க்கையில் நிகழும் பற்பல செய்திகளையும் தக்க இடங்களில் மெய்ப்பாடு தோன்றக் கூறும் அழகு மிக்கது; எண்ணங்களைப் புலப்படுத்தும் குறிப்புக்களும், வரலாற்று மாந்தர் இயல்புகளைத் தக்கவாறு அவர்தம் வாய்மொழியில் வெளிப்படுக்குந் திறனும் நன்கு அமையப்பெற்றது; தன்மைநவிற்சி உவமை முதலிய அணிகளைப் புதிய புதிய முறையில் வியக்குமாறு எடுத்துக் கூறுவது ஒரு சிறந்த இலக்கியத்தை அது தோன்றிய காலத்து மக்களுடைய வாழ்க்கை ஓவியமாகவும், அக்காலத்து மக்களது நாகரிகம் முதலியவற்றைத் தன்னுட் கொண்டு காட்டும் கண்ணுடியாகவும் பெரியோர் கூறுவர். அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இக்கம்பராமாயணத்தைக் கூறலாம்.

இப்பெருங்காப்பியத்தின் செய்யுள் நடை எளிமை, இனிமை, ஆழம் உடைமை என்னும் மூன்று குணங்களையும் உடையது. இதற்குச் சான்ருகப் பற்பல செய்யுட்களைக் காணலாமாயினும் ஒன்று காட்டுவல். கோசல நாட்டை அணிந்துரைக்குங்கால்,

வண்மை இல்லையோர் வறுமை இன்மையால்
திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்
உண்மை இல்லைபொய் உரைஇ லாமையால்
வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால்

என்று வருகின்ற இச்செய்யுளின்கண், எளிமையைப் பாடலில் உள்ள சொற்களைப் பயிலும் பொழுதே பதப் பொருள் வெளிப்பட்டுக் கிடப்பதால் அறியலாகும். "வண்மை வறுமை, திண்மை செறுநர், உண்மை பொய், வெண்மை கேள்வி" என்னும் இவற்றுள் பெரும்பாலும் திரிசொற்கள் இல்லாமல் எளிதிற் பொருள் உணர்த்தும் செஞ்சொற்களே உள்ளன. இவற்றினும் எளியனவாக ஒரு பெரும்புலவன் எங்ஙனம் கூறமுடியும்? இனிமை, சொல்லினிமையும் பொருளினிமையும் தொடரினிமையும் ஓசையினிமையும் எனப்பலதிறப்படும். அவ்வெல்லாம் இச்செய்யுளில் நன்கு அமைந்துள்ளன. இவ்வினிமைப் பண்பு, ஓதுங்கால் செவி கருவியாக உணரத்தக்கது. இவ்வெளிமை முதலியவற்றைக் கம்பநாடரே, "செவ்விய மதுரம் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல், வவ்விய கவிஞர்" எனப் புலப்படுத்து விளக்கியுள்ளார். இப்பாடற் பகுதியில் 'மதுரஞ் சேர்ந்த நற்பொருளில்' என்பதனுல் இனிமையும், 'சீரிய தீஞ்சொல்' என்பதனுல் எளிமையும், 'கூரிய தீஞ்சொல்' என்பதனுல் ஆழமுடைமையும் புலப்படுத்தவாரும்.

மேற்காட்டிய பாடலில் எளிமையும் இனிமையும் இவ்வாருக, ஆழமுடைமை எங்ஙனம் அறியத்தக்கதெனிற் கூறுதும்:

தொல்காப்பியம் மெய்ப்பாட்டியலில் பெருமிதச் சுவைக்கு நிலைக்களமாக நான்கு பொருள்கள் கூறப்பட்டன. அவை,

> கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
> சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே

என்பதனுற் போந்த கல்வி முதலிய நான்குமாம். பெருமிதம் என்பது வீரமாகும். கோசல நாட்டில் இருப்போர் பெருமிதமுடையோர் என்றும், அதற்குரிய நிலைக்

களமாக உள்ள கல்வி முதலியன அவர்பால் நிறைந் திருக்கின்றன என்றும் புலப்படுத்தப்புக்க கம்பநாடர், அத்தொல்காப்பியச் சூத்திரத்தை நினைவில் இருத்திக் கொண்டு நான்காத அடியிலும் கல்வி முதலிய நான்கனை யும் குறிப்பிடுவாராயினர். வறுமையின்மையால் வண்மையில்லை என்றார்; எனவே கொடைக் குணம் இயல்பாகவே நிரம்பப் பெற்றவர் என்பது புலனாகும். இதனாற் கொடையும், நேர் பகைவர் இல்லாமையால் திண்மை இல்லை என்னும் இதனால் தறுகணும், பொய் யுரை இல்லாமையால் உண்மை இல்லை என்னும் இத னால் புகழும், பல்கேள்வி பொருந்தியமையால் அறி யாமை இல்லை என்னும் இதனாற் கல்வியும் புலனாதல் அறிக.

இவற்றுள், இசைமையாகிய புகழை வெளிப் படக்காண்கின்றிலேம் எனின், பொய்யாமை கூறவே புகழ் பெறப்பட்டதாம். "பொய்யாமை யன்ன புகழில்லை" எனப் பொதுமறையும், அதற்கு இலக்காக, "பரவு மெய்யினுக்கு உயிரளித்து உறுபுகழ் படைத் தோன்" எனக் கம்பராமாயணமும் கூறுமாற்றான் உணரலாம். தசரதன் மெய்ம்மையை நிலை நிறுத்தற் பொருட்டு உயிரைக் கொடுத்துப் புகழை நிலை நிறுத் தினான் என்னும் இக்கருத்துத் திருக்குறளில் தோய்ந்து கண்டதாம். இங்ஙனம், பெருமிதத்தைப் புலப்படுத் தும் உட்கோள் உடையராய், அது தோன்றுதற்குரிய நிலைக்களப் பொருள்களை இப்பாடலாற் புலப்படுத்திய கம்ப நாடர் நுண்ணறிவு பெரிதும் போற்றத்தக்க தொன்று. இஃதே ஆழமுடைமை யென்பதாகும்.

இங்ஙனமே முன்னோர் வரையறுத்துக் காட்டிய பொருள் நயங்களை நினைவில் இருத்தித் தக்க இடங் களிற் பயன்படுத்தும் நெறியை இன்னும் பல இடங் களிற் காணலாம்; மற்றொன்று காட்டுவல்:

இலங்கை எரியுண்டபின் மீண்டும் நகரைத் திருத்தி அமைத்துக்கொண்டு, சூழ்ச்சித் துணைவராகிய அமைச்சர் முதலியோர் சூழ இருந்த இராவணன், தனக்கு நேர்ந்த பரிபவத்தைக் கூறுமுகமாக எழுந்த பாடல்களுள் ஒன்று,

> ஊறுகின் றனகிணறு உதிரம் ஒண்ணகர்
> ஆறுகின் றிலதனல் அகிலும் நாவியும்
> கூறுமங் கையர்நறுங் கூந்த லின்சுறு
> நாறுகின் றதுநுகர்ந் திருத்தும் நாமெலாம்

என்பது. இதன்கண், நன்னீர் பெறுதற் பொருட்டு நிலத்தை அகழ்ந்தால் புண்ணீர் ஊறுகின்றதென்றும், அநுமானுல் சுடப்பட்டபடியால் இந்நகரம் நெருப்பு வெப்பம் தணிந்திலது என்றும், அகிற்புகையும் புழுகு முதலியவும் இடையருது கமழும் மகளிருடைய கூந்தல் தீ நாற்றம் நாறுகின்றதென்றும் கூறப்பட்டிருக்கின்றன; இக் கருத்தில் ஒரு சில வரையறைப் பொருள் புலப்படுக்கப்பட்டுள்ளன. மக்கள் வாழ்க்கைக்கு வேண்டியவை உணவு, உறக்கம், இன்ப நுகர்ச்சி, அச்சமின்மை என்பனவாம். இவற்றை இராவணன் தன் வாழ்க்கையில் என்றும் குறைபடாமல் நிரம்பப் பெற்று அநுபவித்து வந்தான். இப்பொழுது கால மாறுபாட்டால் அவ்வெல்லாம் விபரீதமாய்க் காணப் படுகின்றனவாம். எங்ஙனமெனில், கூறுதும்.

மக்களுக்கு இன்றியமையாத உணவாகவும் உணவுகளை உண்டாக்குதற்கு ஏதுவாகவும் இருப்பது நீராகும். "நீரின் றமையாது உலகு" என்பது முதுமொழி. அத்தகைய சிறப்பு வாய்ந்த நன்னீரைப் பெறுதற்கு நிலத்தைத் தோண்டினுல் அங்கிருந்து புண்ணீர் ஊறுகின்றதாம். இதனுல் உணவு மாறுபட்டதென்பது போதரும். நன்ருக உறங்குவதற்கு வெப்பம் தடையாகும்; "நெருப்பினுட் டுஞ்சலு மாகும்

நிரப்பினுள், யாதொன்றும் கண்பா டரிது'' என்னும் வள்ளுவர் வாய்மொழி இதனை வலியுறுத்துவதாகும். இங்கே உண்டியின் பின் இன்றியமையாத உறக்கத்திற்குத் தடையாக அநுமான் இட்ட நெருப்பு நிலத்தில் தாக்கியமையால் நகரம் புதுப்பிக்கப்பட்டும் வெப்பம் தணிந்திலது என்னும் இதனால் உறக்கம் இலதாயிற்றென்பது போதரும். கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலன்களும் ஒருங்கு நுகர்தற்குரிய மகளிர் கூந்தல் சுறு நாறுகின்ற தென்னும் இதனால் இன்ப நுகர்ச்சியும் இலதாயிற்றென்பது போதரும். ஆகவே, உண்டி, உறக்கம், இன்ப நுகர்ச்சி என்னும் இவையெல்லாம் மாறுபட்டன என்பது புலப்படுத்தவாறும். நான்காவதாகிய அச்சம் இராவணன் வாழ்க்கையில் சிறிதும் நேர்ந்ததில்லை. ஆயினும், ஒரு குரங்கு வந்து நகரை நெருப்பிட்டு அழித்துவிட்டுச் சென்றதே, அது தானும் அந் நெருப்பினாலோ படை வீரராலோ அழிந்தொழிந்தது என்னும் வார்த்தையும் கேட்கப்பட்டிலது என்னும் இதனால், இராவணன் அச்சத்திற்குப் பெரிதும் ஆளாயினான் என்பது போதரும். இதனை,

> ''மற்றில தாயினும் மலைந்த வானரம்
> இற்றுஇல தாகிய தென்னும் வார்த்தையும்—பெற்றிலம்''

என்னும் இராவணன் கூற்றாக உள்ள செய்யுட் பகுதியால் அறியலாம்.

இனி, இயற்கை வருணனையில் வைத்தும், உவமை முகமாகவும் பொருள் விளக்கம் செய்வதில் கம்பர் செல்லும் நெறி வியப்பை அளிப்பதாகும். பொதுத்தன்மை ஒன்றைப் புலப்படுத்தற்குச் சிறந்த உவமை ஒன்றே போதியதாகும்; பல கூறுதல் வேண்டாவாம். உவமேயப் பொருளில் உள்ள நயம் தோன்றச் செய்வதற்கு ஒன்றுக்கு மேலும் கூறலாம். ஒரு சில புலவர் பயன்

தோன்ருத நிலையில் பல கூறுவர். கம்பர் பல பொருள் நயங்களும் ஒன்றில் தோன்றக் கூறுவர். ஒன்றுக்கு மேல் அடுக்கிக் கூறுவராயின் அவ்வளவும் பொருள் நயம் கருதியபடியாம். இரண்டு உவமை கூறிய இடம் ஒன்று காட்டுவல் :

இராமபிரானுக்கும் இராவணனுக்கும் நிகழ்ந்த முதற்போரில் இராவணன் மகுடம் சிதையுமாறு இராமன் ஏவிய அம்பு விரைந்து சென்று தாக்கி மகுடங்களை வீழ்த்தியவுடன் இராவணன் நின்ற தோற்றத்தைப் பற்றி இரண்டு உவமைகள் கூறியுள்ளார். அப்பாடல்,

**சொல்லு மத்தனை யளவையின் மணிமுடி துறந்தான்**
**எல்லி மத்தெழு மதியமும் ஞாயிறும் இழந்த**
**அல்லும் ஒத்தனன் பகலும்ஒத் தனன்அமர் பொருமேல்**
**வெல்லு மத்தனை அல்லது தோற்றிலா விறலோன்.**

என்பது. ஒரு சொல் தோன்றி அழியும் அத்துணைச் சிறுபொழுதில் மணிகள் அழுத்திய முடிகளை இழந்து விளக்கமற்று நின்ற இராவணன், திங்களையும் ஞாயிற்றையும் முறையே இழந்த இரவையும் பகலையும் ஒத்தனன் என்பது பொருள். ஈண்டுத் திங்களை இழந்த இரவையும், ஞாயிற்றை இழந்த பகலையும் என நிரனிறையாகக் கொள்ளல் வேண்டும். ஒளிமிக்க பற்பல மணிகள் பதிக்கப்பட்டு விளங்கிய முடிகளை இழந்து நிற்கும் இராவணனது உடல் மிகக் கறுத்துக் காணப் படுதலை இவ்வாறு உவமித்தார். ஆனுல், கருமையாகிய பொதுத்தன்மை புலப்படக் கூறவேண்டுமாயின், திங்களை இழந்த இரவினையாதல், ஞாயிற்றை இழந்த பகலினையாதல் ஒன்றே உவமை கூறுதல் போதியதாக, இரண்டு உவமை மேற்கொண்டது எக் கருத்துப்பற்றி யென்பது ஆராயத்தக்கதாகும். அவ் வாராய்ச்சியிற் கிடைக்கும் பயன் என்னவெனில், அப்

பயனே கம்பர் பெருமைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும் என்பது என் கருத்து. உவமைகளின் இயல்பை இனி ஆராய்வோம்.

திங்களை இழந்த இரவு பொலிவிழந்து காணப் படும். திங்களோடு கூடியிருந்தாலும், அதனை இழந் திருந்தாலும் இரவென்னும் பொருள் உண்டு. ஆயினும் அது விளக்கமற்றிருக்கும் என்பதைக் கருத்தில் இருத் திக்கொள்ள வேண்டும். ஆனால் ஞாயிற்றை உடைய தாக இருக்குங்காலே பகலென்னும் பொருளுண்டு. ஞாயிறு பகலைச் செய்பவனாதலின் பகலவன் என்று கூறப்படுவான்; தினகரன் என்பதும் அது. ஆதலின் ஞாயிற்றை உடையதாக இருக்கும் காலமே பகல் என் னும் பெருருடையதாகும்; ஞாயிறின்றேல் பகல் என் னும் பொருளும் இன்றாம். ஆகவே திங்களை இழந்த இரவு உள்பொருளாகவும் பொலிவிழந்தும் இருக்கும். ஞாயிற்றை இழந்த பகல் என்பது இல்பொருளாக முடியும். இங்ஙனம் உவமைகளின் இயல்புகளைத் தெளிவுபடுத்திக்கொண்டு உவமேயப் பொருளைக் காணப் புகின் மிகைபடக் கூறியதாக முடியாதென்பது போதரும். எங்ஙனம் எனிற் கூறுவல். மக்களுக்குரிய உடல் இருவகைப்படும்; ஒன்று பருவுடம்பு. மற் றொன்று புகழுடம்பு. சிறந்த ஆற்றலும் ஆட்சியு முடைய இராவணனுக்கு அமைந்த இவ்விரண்டு உடம் புகளுள், பூதவுடம்பாகிய இப்பருவுடல் உள்ளதாயி னும், மணிகள் அழுத்திய முடிகளை இழந்து விளக்க மற்று மிகக் கரியதாகக் காணப்பட்டமையால் அது திங்களை இழந்த இரவை ஒத்தது என்று கோடல் பொருந்தும். அவன் நெடுங்காலம், பெற்ற வெற்றி முதலியவற்றால் வளர்த்து வந்த புகழுடல் இராமனது அம்பொன்றால் எய்திய தோல்வி காரணமாக அறவே தொலைந்து விட்டது; ஆதலின் அது ஞாயிறு இல் வழிப் பகல் என்பது ஒன்று இலதாதலை ஒப்பாகும்

என்பதுபடக் கூறியது பொருத்தமே. இராவண னுடைய சிறந்த வீரமும் மானமும் முதற்போரிலேயே ஒழிந்தன என்பது.

வீரமும் களத்தே போட்டு
வெறுங்கையோ டிலங்கை புக்கான்

என்பதனுல் அறியத்தக்கதாகலின், வீரமானங் காரண மாக வளர்ந்துவந்த புகழுடலும் மாய்ந்த தென்பது இங்கே நினைக்கத்தக்கது. ஆகவே பருவுடல் இருந்தும் விளக்கமற்றிருந்ததென்றும், புகழுடல் அறவே தொலைந்த தென்றும் புலப்படுத்தற்கு இரண்டு உவமை கள் இங்குக் கூறப்பட்டனவென்று கோடலே சிறந்த தாகும். இங்ஙனம் உவமைகளை நுனித்துணர்ந்து மேற்கொள்ளும் நெறி இன்னும் பல இடங்களிலும் கண்டு இன்புறத்தக்கது.

காப்பிய மாந்தருட் சிறந்த இராமபிரானது பேச்சு வன்மையில், அறம் பிறழாமல், எண்ணத்தில் அரும் பிய பொருள் நாவில் மலர்ந்து, தேனெனப் பாலெ‌ன இனிக்கும் செம்மையும் அறிஞருலகு அறிந்து இன் புறத் தக்கது. இலங்கைப் போர் முடிந்து திரும்புங் கால், விண்ணுலகில் தெய்வநிலை பெற்றிருந்த தசர தன், இராமபிரான் முன் தோன்றி மகன்மைக் காதலில் ஆழ்ந்து உவகை உடையவனுய்ப் பலபடப் பாராட்டி, "உனக்குயான் ஈவது ஒன்று கூறுக" என்றுனுக, இரா மன் வணங்கி, "உனை யான் சென்று வானிடைக்கண்டு இடர் தீர்வனென்று இருந்தேன்; இன்று காணப்பெற் றேன். என் இனிப்பெறுவது?" என்று மறுமொழி பகர்ந்தான். இந்நிலையில் ஒரு பாடல் பின்வருவது :

ஆயினும் உனக்கு அமைந்ததொன்று உரையென அழகன்
தீயள் என்றுநீ துறந்தஎன் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியு மாம்வரந் தருகெனத் தாழ்ந்தான்
வாய்தி றந்தெழுந்து ஆர்த்தன உயிரெலாம் வழுத்தி.

இராமன் தந்தையாகிய தசரதனை நோக்கி, "மீண்டும் தங்களைக் காணப்பெற்றதொன்றே சிறந்த பேருக அமையும்'' என்று கூறியதும், தசரதன் "ஆனாலும், நினக்குப் பொருந்தியதொரு வரங்கேட்க'' என்று கூறினுக, இராமன் வரங்கேட்கும் முறை மிகப் பாராட்டத்தக்கதாகும். கடவுட் கூறனுகிய இராமனுக்குத் தசரதன்பால் பெறக்கடவது யாதாகும்? எல்லோருக்கும் எப்பேறும் அளிக்கவல்ல இராமபிரான் தனக்கு வேண்டியதாய் நினைக்கத்தக்கது யாதாகும்? எல்லோருக்கும் எப்பேறும் அளிக்கவல்ல இராமபிரான் தனக்கு வேண்டியதாய் நினைக்கத்தக்கது யாதாகும்? அதுவும் வரமாகவேண்டும்; வரமென்பது பெரியவனிடத்துச் சிறியவன் பெறத்தக்கது. அதுவும் தசரதன் ஒருவனிடத்தன்றிப் பெற முடியாததாகவும் இருத்தல் வேண்டும்; அவ்வரம் இராமனுக்கு யாதாகலாம்?

முன்னர்க் கைகேயி செய்த கொடுமை காரணமாக, தசரதன் மிக வெறுத்து; "கைகேயி என்மனைவியும் அல்லள்; பரதன் மகனும் ஆகான்'' என்று கூறியுள்ளான்: ஆதலின் அவ்விலக்கைப் பரிகரிக்கச் செய்ய வேண்டும் என்பது இராமன் உட்கோள், ஆனல் இது பிறர்பொருட்டுள்ள வேண்டுகோளாதலின் இராமனுக்கு நலம் பயக்கும் வரமாக எங்ஙனம் அமையும் என்பது கருதத்தக்கது. தனக்கு நலம் பயக்கும் வரமாகவே இராமபிரான் கருதி வேண்டுகின்றுன். இந்நிலையில் கைகேயியையும் பரதனையும் தசரதன் விலக்கியதைப் பரிகரிக்க வேண்டுமாயின் எப்படிக் கேட்பது?

"கைகேயியைத் தாங்கள் மனைவியாகவும், பரதனைப் புதல்வனுகவும் ஏற்றுக் கொள்ளல் வேண்டும்'' என்று கேட்கலாம். ஆனல் இது தனக்கு வரமாகாது. மேலும், கைகேயி தன்னை வெறுத்தாலும் தான்

வெருது அன்பு பாராட்டி அவளைத் தாய்மை கொண் டாடும் இராமன் குணங்களுக்கு, யாரோ ஒருத்தி என்று கொள்ளத்தக்க முறையிற் கேட்பது இழுக்குமாம். "என் தாயைத் தங்கள் மனைவியாக ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்று கேட்கலாம். தந்தையால் மனைவி யல்லள் என்று விலக்கப்பட்ட நிலையில் தாயாகக் குறிப் பிடுதல், "தந்தைசொல்மிக்க மந்திரமில்லை" எனக் கொள்ளும் இராமன் கொள்கைக்குப் பொருந்தாது. ஆகவே கைகேயியைச் சுட்டிக் கூறுதற்குரிய முறை யைக் கண்டுபிடிப்பதே அரிதாகின்றது.

வியாச முனிவர் இயற்றிய மகாபாரதத்தில் சகுந் தலை வரலாற்றுப் பகுதியில் இங்கே நினைக்கத் தக்கது ஒன்று உண்டு. சகுந்தலை தன் இளம் புதல்வன் பரதனை அழைத்துக்கொண்டு தன் கணவனுகிய துஷி யந்தனுடைய அரசவைக்குச் சென்ருளாக, ஒரு முனி வர் சாபத்தால் சகுந்தலையை இன்னளென்று அறியா தவனுய் அரசன் "நீ யார்? இங்கு வருதற்குரிய காரியம் என்னை?" என்று வினுவச் சகுந்தலை திகைக்கின்ருள். அவளை இன்னள் என்று அறிவிக்க யாரும் இல்லை. உடன் வந்த கண்ணுவ முனிவருடைய மாணவர்கள் இடையே விட்டுச் சென்றுவிட்டனர். இந்நிலையிற் சகுந்தலை தானே தன்னை அறிவித்துக்கொள்ள வேண் டியவளாயினுள். எவ்வாறு அறிவிப்பது? "என்னைக் கண்ணுவ முனிவர் ஆசிரமத்தில் காந்தருவ முறையில் மணந்தமையால் யான் தங்கள் மனைவியாவேன்" என்று கூறவேண்டும். இது மிக அநாகரிகமான அறி விப்பாகும். "நின் பெண்டாட்டி யான்" என்று ஓர் நன்மகள் எங்ஙனம் கூறுவள்! ஒன்றும் பேசாது நின்ருல் அரசன் விலக்கவும் கூடும். இத்தகைய இடர்ப்பாடான நிலையில் சகுந்தலை தன்னை அறிவிப் பதற்கு ஒரு முறையைக் கண்டுபிடித்தாள். அதுதான்

கவியின் பெருமைக்கு எல்லையாக நின்று வியப்பளிப்பது.

சகுந்தலை அவ்வமயம் தன்னை இன்னள் என அறிவிக்கக் கருதித் தன் மகனை நோக்கி, “குழந்தாய், நின் தந்தைக்கு வணக்கம் செய்” என்றாள். உடனே அப்புதல்வன், “தந்தையே, வணக்கம்” என்றான். ‘குழந்தை’ என்று அவள் அழைத்தமையால் அவளுக்கு மகன் என்பதும், அரசனைச் சுட்டி, “நின் தந்தைக்கு” என்று கூறியதால் அரசனுக்கு அவள் மனைவி என்பதும் பெறப்பட்டதோடு தந்தைக்கு வணக்கஞ் செய்யும்படி தாய் கட்டளையிடும் அறமும் புலப்படுத்தப் பட்ட படியாம். இத்துணை நாகரிக முறையில் பேச வைத்த பெருமை வியாச முனிவர்க்குத் தக்கதே. அங்ஙனமே இராமன் தனக்குத் தாய் என்றுதல், தந்தையைக் குறித்து நின்மனைவி யென்றுதல் கைகேயியைக் குறிப்பிட இயலாத நிலையில், செய்யும் வேண்டுகோள் அறிஞருலகை இன்புறுத்துவதாகும்.

“தீயவள் என்று தங்களால் விலக்கப்பட்ட என் தெய்வமும், அத்தெய்வத்தின் மகனும்” என்று கைகேயியையும் பரதனையும் குறிப்பிட்டானும். “அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்” என்னும் அறத்திற்கும் இது பொருந்துவதாயிற்று. இனிக் குறிக்கப் பட்ட இருவர் முகமாகத் தனக்கு வரமாதல் வேண்டுமே எனில், வரமும் ஆயிற்று. எங்ஙனமெனின்,

“அவ்விருவரும் முறையே எனக்குத் தாயும் தம்பியுமாம் வரந்தர வேண்டும்” என்பதாம். தந்தையால் விலக்கப்பட்டபடியால் இவர்கள் முறையே தாயும் தம்பியும் ஆகாமை இராமனுக்குக் குறையாக இருந்தது. இக்குறையைப் பரிகரிக்கு முகமாக இது வரலாயிற்றென்பது அறியத்தக்கது. இதனால் இராமபிரான் அறமுறை திறம்பாதவன் என்பதும், பேச்சு நாகரிகத்

திற் சிறந்தவன் என்பதும், தாய்மை அன்பும், சோதர உரிமையும் உடையவன் என்பதும் வெளிப்படக் காண லாம். இப்பாடல் முன்னர்க் குறிப்பிட்ட எளிமை இனிமை ஆழமுடைமை என்னும் குணங்கள் அமைந்த தென்பதும் எளிதிற் புலனும்.

இத்துணை அரிய நயங்கள் பல அமைந்த சுவை ஊற்ருகிய கம்பராமாயணத்தை ஊன்றிப் படித்து இன்புறுதலே சிறந்த முறையாகும். அங்ஙனம் இன்றிச் சிலர் மரபுநெறி பிறழப் பொருள்கொண்டு போலி இன்பம் எய்துவாரும், சிலர் அரிய பொருளமைந்த பாடல்களை உண்மைப் பொருள் காணும் மதுகை யின்றிப் பொருளற்றன வென்று புறக்கணிப்பாருமாக உள்ளார். அன்னர் நெறி கம்பராமாயண நுண் பொருட்டுறையை அடைதற்கு நேரிய தாகாது என்பது அறியத்தக்கது. மற்ருெரு சாரார் இன்ஞேரன்ன இலக்கிய இன்பத்தில் ஈடுபடுதற்கு மனம் ஒல்லாமல் வேறு சில பொருந்தாக் காரணங்காட்டி வெறுத்து ஒதுக்கவும் முற்படுகின்றனர். தமிழர் தம் கலைச்செல் வங்களை வெறுக்காமல் நன்ருக அநுபவிக்க வேண்டும் என்பதே என் வேண்டுகோள்.

அன்பர்களே !

இதுகாறும் என் சிற்றுரைக்குச் செவி சாய்த்துப் பெருமைப்படுத்திய நுங்கள் எல்லோர்க்கும் என் உள மார்ந்த வணக்கத்தைச் செலுத்துகின்றேன்.

வெண்பா

ஆன்றதமிழ்க் கம்பன் அரிய இலக்கியத்தை
ஊன்றிப் பயில உளமினிக்கும்—தோன்றுசுவை
ஊற்ருகுஞ் செஞ்சொல் உரைக்குங்கால் நாவினிக்கும்
ஏற்ற செவியினிக்கு மே.

5

# சிவ வழிபாட்டின் தொன்மை

இந்திய சமய வாழ்க்கையில் சிவ வழிபாடும், சத்தி வழி பாடும் ஆற்றல் மிகுந்த பகுதிகளாமென்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். சில ஆண்டுகளுக்கு முன் பஞ்சாபிலும், சிந்துவிலும், ஹாரப்பா, மொஹெஞ்சதாரோ என்னுமிடங்களில் புலப்படுத்தப் பட்டன. அங்கே வாழ்ந்த மக்களில் கடவுட் கொள்கை யைப் பற்றிப் பேசிய தொல் புதைபொரு ளிலாக்காத் தலைவர் அங்கு வாழ்ந்த மக்களின் சமயத்தைப் பற்றிக் கூறியது வருமாறு :—

'Taken as a whole their religion is so characteristically Indian as hardly to be distinguishable from still liviug Hinduism or at least from that aspect of it which is bound up with animism and cults of Siva and the mother Goddess still the two most potent forces in popular worship.'

இதன் பொருளாவது :—' பிண்டமாகப் பார்க்கும் போது அவர்கள் சமயம் இப்பொழுது வழக்கிலுள்ள இந்து மதத்தினின்று பிரித்தறிய முடியாதபடி தெளி வான இந்தியச் சார்புடையதாக விருக்கின்றது. ஆவி வணக்கமும், சிவ வழிபாடும், அன்னைத் தெய்வத்தின் வழிபாடும் கலந்த பகுதியினின்று அதனைப் பிரித் தறியவே யியலாது. சிவ, அன்னை வழிபாடுகளாகிய

இரண்டும் பொதுமக்கள் வழிபாட்டில் இன்னும் மிக்க உரமான சத்திகளாக விளங்குகின்றன.' சக்திவழி பாடு சிவ வழிபாட்டின் ஒரு பகுதியாமென்பதை டாக்டர். ஜி. யு. போப் முதலிய அறிஞர்கள் நன்கு விளக்கி யிருக்கின்றனர். பண்டை நூல்களாலும் அஃது இனிது புலனும். கொற்றவை, காளி, உமை என்னும் தெய்வங்களுக்கு நாயகன் சிவபெருமான் என்பது சங்க நூல்களுள் பேசப்படுகின்றது.

ஹாரப்பா, மொஹெஞ்சதாரோ என்னுமிடங் களிற் கண்டுபிடித்த அதிசயங்களுள் மிகச் சிறந்தது சிவநெறியின் தொன்மையாகும். சர். ஜான் மார்ஷல் என் பவர் அதனைத் தெளிவாகக் கூறியுள்ளார்.
அவர் கூறுவதாவது :—

'Among the many revelations that Mohonjadaro and Harappa had in store for us none perhaps is more remarkable than this discovery that Saivaism has a history going back to the chalcolithic age or perhaps even further still and that it thus takes place as the most ancient living faith in the world.'

இதன்கண் உலகத்தில் நிலைபெற்றுள்ள சமயங்க ளெல்லாவற்றிற்கும் பழமையான சமயம் சைவமென்று அறியவந்தமை பாராட்டட் படுகின்றது. புதையுண்ட நகரங்களின் நாகரிகம் கி. மு ஐயாயிரம் ஆண்டிற்கு முன் நிலவியதெனக் கூறப்படுகின்றது. ஆரியர் இந் நாட்டிற்கு வெளிநாட்டிருந்து வந்தவரென்று கருதிய திலகர், அவர்கட்குக்கூறும் தொன்மை கி.மு. நாலாயிர மாண்டிற்கு முற்பட்டதென்பதாம். பிறர் கி. மு. இரண் டாயிர மாண்டிற்கு முற்பட்டதென்பர். தமிழர்கள் வெளிநாட்டிலிருந்து இவண் வந்ததாகக் கூறும் கருத் தினர் சிலர், அவர்கள் கி. மு. எண்ணாயிர மாண்டிற்கு முன் வந்தனரென்பர். ஆசிரியர் வி. அரங்காச்சாரியார்

என்பவர் தமது இந்திய சரித்திர நூலில் அவ்வாறு கூறி யுள்ளார். பன்னெடுங்காலமாக இந்திய நாட்டிலேயே பஞ்சாப் மாகாணத்தில் ஆரியர் தோன்றி வாழ்ந்தனர் என்னும் கருத்தினை வற்புறுத்தும் அபினஸ் சந்திரதாஸ் என்பவர் தாம் எழுதிய இருக்கு வேத இந்தியா என்னும் நூலில் விந்தியத்திற்குத் தெற்கில் இருந்த நாட்டில் தமிழர்கள் தோன்றி வாழ்ந்தனர் என்றும், இருவகை மக்களினத்தார்க்குமிடையிற் கடல் இருந்த தென்றும், பணியர் என்னும் வர்த்தகர்கள் அங்கு மிங்கும் போக்கு வரவு செய்தனரென்றும் இயம்பினர். இப்பணியர் என்பாரை ஆரியரென்று அபினஸ்சந்திர தாஸரும், தமிழரென்று காலஞ்சென்ற பி. டி. சீனிவாச ஐயங்கார் அவர்களும் செப்பினர். ஆராய்ந்து பார்க்குமிடத்துப் பணியர் என்பார் தமிழினத்தாரென்பது தெளிவாகும். பண்டைக் காலத்தில் தமிழ் மக்களே கடல் வாணிகத் துச் சிறந்து விளங்கினர். காலஞ்சென்ற வரலாற்று ஆசிரியர் டி. ஆர். சேஷ ஐயங்கார், திராவிட இந்தியா என்ற நூலில் கூறுவது இவ்விடத்தில் உற்று நோக்கத்தக்க தாகும்.

'The existence in the Tamil language of pure Tamil words like kadal, paravai, punari, arkali and munnir, all of which refer to the sea and the words like kalam, mara-kalam, mithavai and kappal, which are also original Tamil words and which all denote a ship, proves that the Tamils in the earliest times were a sea-faring people.'

அஃதாவது, "தமிழ் மொழியில் வழக்காற்றிலுள்ள தூய தமிழ்ச் சொற்களாகிய கடலைக் குறிக்கும் கடல், பரவை, புணரி, ஆர்கலி, முந்நீர் ஆகியவைகளும், கப்பலைக் குறிக்கும் கலம், மரக்கலம், மிதவை, கப்பல் ஆகியவைகளும் பண்டைத் தமிழர்கள் கடற்செலவிற் சிறந்தவர்க ளென்பதைத் தெளிவுபடுத்துகின்றன" என்பதாம்.

பணியர் என்ற சொல் வணிகரென்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். அச்சொல்லிலுள்ள ணகரம் தமிழ் மொழிக்குரிய வொலியாகும். ஆரியத்தில் அது முதலிலில்லை. அபிநாஸ்சந்திரதாஸ் கூறுகிறபடி ஆரியர் இந்திய நாட்டிலிருந்து மேலை நாட்டிற்குச் சென்றரென்ருல் ஆரியச் சார்பான பாரசீகம், கிரீக், இலத்தீன் முதலிய மொழிகளில் ணகரம் காணப்படல் வேண்டும். அது காணப்படாமையானும், தமிழ்ச் சார்புடைய தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய மொழிகளில் காணப்படுவதாலும் அது தமிழொலி யென்பதே தேற்றம். அவ்வாறு ளகரம் சகரம் முதலிய வெழுத்துக்களுமாம். சிவம் என்ற சொல்லில் உள்ள சகரமெய் தமிழோசையாகும். எனவே பணியர் என்பார் தமிழினத்தவராய் ஆரியநாடு சென்று அங்கே தங்கியவ ரென்பது போதரும். அன்னோர் வழிபாடு சிவ வழிபாடு என்பது இருக்குவேத ஆராச்சியாலும் தெளியப்படும். இருக்கு வேதத்துள் சிவலிங்க வழிபாட்டை இகழ்ந்து இந்திர வழிபாட்டை உயர்த்திக்கூறும் பகுதிகள் உள்ளன.

தமிழர் கன்னிமுனைக்குத் தெற்கே யிருந்த கடல் கொண்ட நாட்டில் இருந்து இவண் போந்தவரென்பது முச்சங்க வரலாற்றினுல் தெளியப்படும். கடல் கொண்ட நாட்டைப் பற்றி ஆராய்ச்சி செய்த ஸ்காட் எலியட் என்பவர் அங்கிருந்த பண்டை மக்கள் பதினுன்கு அல்லது பதினைந்தடி உயரமுள்ளவராய்த் தலையின் முதற்பாகத்தில் நெற்றிக்கண் போன்ற தசைத் திரளுள்ளவராயிருந்தன ரென்பர். முன்னோர் வழிபாட்டினின்று சமயம் கிளைத்ததென்பது வரலாற்று நூலார் கருத்து. ஆதலின் அந்நாட்டினரே முக்கட் கடவுள் வழிபாட்டினைத் தோற்றுவித்தவ ரென்னலாம். புறநானூற்றினுள் பண்டைப் பாண்டிய மன்னனொருவனைப் புகழ்ந்து கூறும் பாடலில் ‘முக்கட் செல்வர் நகர் வலம் செயற்கே நின்குடை பணியும்’ என்பது

பேசப்படுதலின் அக்கடவுளே பண்டைத் தமிழ் மக்கராால்முதற் பெருந் தெய்வமாக வழிபடப்பட்டமை ஊகிக்கப்படும். மொஹெஞ்சதாரோவில் கண்டெடுக்கப்பட்ட சிலைகளில் முக்கண்ணும், மூன்று முகமுமுடைய சிவவடிவம் சிறந்து விளங்கிற்று. ஆதலின் தமிழருடைய சிவவழிபாடு புதையுண்ட நகரங்களிற் பயின்றுவந்த தென்பது போதரும்.

சிவபிரானுக்குச் சிறந்த வூர்தியாக வுள்ளது காளையாகும். அதன் வடிவமே கொடியிலு மெழுதப்படும். புதையுண்ட நகரங்களிற் காணப்பட்ட சில முத்திரைகளிற் காளைவடிவம் பொறிக்கப் பட்டுள்ளது. பானைகளின் மீதும் சிறு கொம்புடைய காளை வடிவம் பொதுவாகக் காணப்படுவதொன்றாகும். அழித்தற் கடவுளின் ஊர்தியாக அக்காளையினமைப்பு ஏற்பட்டிருக்கின்றதென்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். விளையாட்டுச் சாமான்களிலும் காளை வடிவம் வரையப்பட்டுள்ளது. இந்திய ஐரோப்பிய இனங்களின் தோற்றத்தைப்பற்றி ஆய்ந்தவோரறிஞர் தமிழர்க்கு முதன்மையான பிராணி காளை யென்றும், ஆரியர்க்கு முதன்மையான பிராணி குதிரை யென்றும் தெரிவித்தனர்; ஆதலின் காளையை யூர்தியாகக் கொண்ட கடவுள் வணக்கம் ஆதியில் தமிழர்க்குரிய தென்று ஊகிக்க இடமுண்டு.

டி. ஆர். சேஷஐயங்கார் கூறுவதாவது :—

'The worship of Siva was prevalent among the mountain tribes long before the advent of the Aryas into the South.

டாக்டர் சிலேட்டர்: காளி, சிவம், விஷ்ணு முதலிய தெய்வங்கள் திராவிடருக்கு உரியவென்று கூறுகின்றார்.

டாக்டர் ஸ்டீவன்சன் என்பவர் சொல்வதாவது :—

Siva was the Tamilian God, and was worshipped in two forms one as spiritual object of meditation and the other as a material symbol or linga to represent the invisible to the visible eyes, என்பது.

சிவம் என்ற சொல் தமிழ்ச் சொல்லென்று டாக்டர் கிரையர்சன், (Dr. Grierson) தமது பெருநூலுட் கூறியுள்ளார். அது வடமொழியிற் புகுந்து சைவம் என்ற சொல்லிற்கு அடிப்படையாயிற்று. அது செம்மையென்ற பண்புச் சொல்லடியாகப் பிறந்தது. செம்மையென்பது செந்நிறத்தையும், நேர்மை, நன்மை, மங்களம் என்ற பண்புகளையுங் குறிக்கும். சிவம் என்னும் சொல் செம்மையடியாகப் பிறந்ததென்பது தெளிவு. அதுபோல நேர்மை, நன்மை, மங்களம் என்பவற்றைக் குறிக்கும் சிவம் என்ற சொல்லும் செம்மையடியாகப் பிறந்ததே. சிந்தாமணியுள் சிவம் புரி நெறி யென்ற சொற்றொடர் அப்பொருளிலே வந்துள்ளமை காண்க. பேரின்ப வீடு என்னும் பொருளில் சிவகதியென்ற சொற்றொடர் சிந்தாமணி யாசிரியரால் வழங்கப்பட்டுள்ளது.

சிவவழிபாடு முதலில் ஆரியராலிகழப்பட்டு நாளடைவில் ஆரிய நூலில் முதன்மை பெற்றது. உருத்திரன் என்ற வடசொல் செம்மையன் என்று பொருள்படும். இருக்குவேத முதல் மண்டிலத்தில் உருத்திரன் கடவுளரில் முதன்மையானவனென்றும், பொன்னைப்போல் விளங்குபவன் என்றும், எல்லாவுயிர்களுக்கும் இரங்குபவனென்றும், சிறந்த வைத்திய னென்றுங் கூறப்பட்டுள்ளன. இருக்கு வேத ஐந்தாவது மண்டிலத்தில் திரிபுரமெரித்த கடவுளே உலகிற்குத் தந்தையென்பது பேசப்படுகின்றது. பத்தாம் மண்டிலத்தில் அவன் நஞ்சுண்டமை தெரிக்கப்படுகிறது. யசுர்வேதத்தில் சதருத்ரீயம் என்னும் பகுதியில் உருத்திரனது பெருமை விரிவாக விளக்கப்பட்டுள்ளது. சாம வேதத்துள் தேவர்களுக்குள் உருத்திரன்

அந்தணன் என்று கூறப்படுகிறது. அதர்வ வேதத்தில் சிவப் பிழம்பின் வழிபாடும் திரிபுர சங்காரமும் பேசப் படுகின்றன.

பிராமணங்களுட் பழையதான ஐதரேய பிராம ணத்துள் பிரஜாபதியை, உருத்திரன், தனது மூவிலே வேலால் ஒறுத்தான் என்று பேசப்படுகிறது. கௌஷீ தகி பிராமணத்தில் சிவபிரானது பவன் முதலிய எட்டு நாமங்கள் கூறப்படுகின்றன. சதபத பிராமணத்துள் தக்கன் யாகத்தில் சிவபிரான் தேவர்களைத் தண்டித்த செய்தி காணப்படுகின்றது.

வால்மீகி இராமாயணத்தில் தேவர்கள் சிவபிரானை வழிபட்டு முருகனைத் தமது படைத்தலைவனுகப் பெற் றுக் கொண்ட வரலாறும், கங்கையைத் தாங்கும் பொருட்டுப் பகீரதன் சிவபெருமானை நோக்கித் தவஞ் செய்த வரலாறும் கூறப்படுகின்றன. நஞ்சுண்டமை யும், தக்கன் வேள்வி யழித்தமையும் இராமாயணத்தில் பகரப்பட்டுள்ளன. மாபாரதத்தில் சிவபெருமான்மாட் டுப் பாசுபதம் பெறும்படி கண்ணன் அர்ச்சுனனுக்குக் கூறிய வரலாறும், கண்ணன் உபமன்யு முனிவரிடம் உபதேசம் பெற்ற வரலாறும் பிறவும் சிவபெருமான் பெருமையையே விளக்குவன வாகும். சுவேதாசுதர உபநிடதம், கேனுேபநிடதம் முதலியவை சிவபெருமான் மாண்புணர்த்துவதை யாவருமறிவர்.

பழம் புராணங்களாகிய மச்சபுராணம், வாயுபுரா ணம் என்பவைகள் சிவ பரத்துவமே பகர்கின்றன. திருமாலுக்குப் பெருமைகூறும் புராணங்கள் பிற்காலத் தெழுந்தனவாகும். வாணன் கதை முதலியனவும் அத்தகையனவே. இக்கருத்துக்களை உயர்திரு. மறை மலையடிகள் மாணிக்கவாசகர் காலம் என்ற நூலில் தெளிவுபடுத்தியுள்ளார்.

பழந்தமிழ் நூல்களிலெங்கும் சிவபெருமானது உயர்வு விளங்கித் தோன்றுதல் சங்கநூல்களையும்,

சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி முதலிய காப்பியங்களையும் கற்றோர்க்கு இனிது புலனாகும்.

இதுகாறுங் கூறியவாற்றான் வட இந்தியாவில் பஞ்சாபிலும், சிந்துவிலும் தோண்டிப் புலப்படுத்தப் பட்ட நகரங்களிற் கிடைத்த பொருள்களினாராய்ச்சி யால் புலனாவது சிவநெறியானது உலகத்தில் வழங் கும் சமயநெறிகளெல்லாவற்றினும் பழமையானதென் பதும், சத்திவழிபாடு சிவ வழிபாட்டின் பகுதியே யாமென்பதும், அதுவும் தொன்மை மிக்கதென்பதும், புதையுண்ட நகரங்களின் நாகரிகம் கி. மு. ஐயாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதாகத் தோன்றுவதாலும், கி. மு. நாலாயிரம் ஆண்டுக்குப் பின் வந்த ஆரியருக்கு அந்நாகரிக முரியதென்று கொள்ள இடமின்மையாலும் அவர்களுக்குச் சில்லாயிர ஆண்டுகட்கு முன் எங்கும் பரவிய தமிழினத்தார்க்கு அது உரியதென்று கொள் ளுதல் சாலுமென்பதும், இந்திய நாட்டில் நாகரிகம் பரவுதற்குக் காரணராயிருந்த பணியர் என்பார் தமிழினத்தைச் சேர்ந்த வணிகரென்பதும், கடல் கொண்ட நாட்டிலிருந்த தமிழர்க்குள் முக்கட் கடவுள் வழிபாடு தொடங்கிய தென்பதும், அவர்கள் முதன்மை யாய்ப் பேணிய காளையைப் யூர்தியாகக்கொண்ட சிவ வழிபாடு வட இந்தியாவில் புதையல் நகரங்களில் நிலை பெற்றதென்பதும், அவ்வழிபாட்டுக் குறிகளை ஆரியர் ஆதியிலிகழ்ந்தனரென்பதும், சிவம் என்ற சொல் ஒலி யானும் பொருளானும் தமிழ் மொழிக்குரிய தென்பதும் ஆரிய நூலில் இடம்பெற்ற உருத்திர வழிபாடு சிவ வழிபாட்டின் கூறே யென்பதும், சிவனது மாண்பு வடமொழி நான்கு வேதங்களிலும், இதிகாச, புராணங் களிலும் சிறப்புற்று விளங்குகிறதென்பதும், பண் டைத் தமிழ் நூல்கள் பலவும் சிவபெருமானுக்கு முதன்மை கூறுகின்றனவென்பதும் பிறவும் அறியற் பாலனவாகும்.

## 6

# முத்தமிழ்

முத்தமிழ் என்ற வழக்கு நம் தமிழ் மரபாகும். 'தெரி மாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' என்பது பரி பாடல். முத்தமிழ்க்கும் இலக்கணம் கூறும் மூவுறுப்பு அடங்கிய பிண்டமே அகத்தியம் எனப் பண்டைத் தமிழ் உரையாசிரியர்கள் எழுதி வைத்துள்ளனர். சிலப் பதிகாரம் முத்தமிழ் இலக்கணத்திற்கு இலக்கியமாக விளங்குகிறது என அடியார்க்கு நல்லார் உரைவழியே அறிகின்றோம். திருக்கச்சூர்க் கல்வெட்டு ஒன்று (M.E.R. 377 of 1906) முத்தமிழாசிரியர் பெருநம்பி என் பவரைப்பற்றிப் பேசுகின்றது. இன்றும் நம் பள்ளிச் சிறுவர்கள் ஔவையார் வாயால் "சங்கத்தமிழ் மூன் றும் தா" எனக் கடவுளை வேண்டி நிற்கின்றனர்.

முத்தமிழாவன இயல், இசை, கூத்து என யாவ ரும் அறிவர். கூத்து என்பது 'நாடகக் காப்பியம்' அன்று. பரத நாட்டியம் என்றும் 'Dance' என்றும் வழங்குவனவற்றோடு ஒத்ததொன்று; இவற்றை ஆங் கிலத்தில் 'Fine arts' என வழங்கும் இன்னியற் கல்வித் துறைகளோ என ஐயுறலாம். ஆனால் ஓவியம் முதலி யன முத்தமிழில் பிரித்தெண்ணப்படவில்லை. வட மொழியாளர் 64 கலைகள் எனக் கல்வித்துறைகளை வகுத்த முறையும் இதற்குப் பொருந்துவதில்லை. ஆகவே இவ்வாறு மூன்று எனத் தமிழர் வகுத்ததன் உண்மை நோக்கம் யாது? என்ற கேள்வி பிறக்கிறது.

இயற்றமிழானது சொற்களாலாயது; சொல்லோ ஒலிவடிவம்; இசையும் ஒலிவடிவே. இவ்விரண்டிற்கும் வேற்றுமை என்ன? சொல்லோ நம் எண்ணத்தைக் காட்டும் அறிகுறி; அஃது ஒலியாகவும் முடியலாம். ஆனால் இவற்றால் குறிக்கப்படுவது மனத்தெழும் கருத்துக்களேயாம். நம் என்ணம் எல்லாம் சொல் வடிவே என்பர் சிவஞானபோதப் பேருரையாளர். பேசும்போது எழும் ஒலி வானிற் பிறக்கும் அசுத்த மாயாகாரியமாயினும், அது குறிப்பது எண்ணமே யாதலின் சொற்கள் அவ்வகையில் சுத்தமாயாகாரி யமே என்பர். பெனிடெட்டோ க்ரோசே (Benedetto Croce) என்ற இத்தாலியப் பேராசிரியரும் சொல்லில்லை யேல் எண்ணமில்லை என்பர். ஆனால் இசையோ நம் உணர்ச்சிக்குப் போக்குவீடாக எழும் இயற்கை ஒலி யாகும். அஃது அறிகுறியல்ல; அஃதே பொருள். இன்ப ஒலியும் துன்ப ஒலியுமாக இசை வெளிவரு கின்றது. நோதிறம் எனத் தமிழர் ஓர் இசைக்குப் பெயரிட்டனர் அன்றோ? ஆகவே மனக்கருத்தின் அமைதியே இயற்றமிழ். வாய் ஒலியின் அமைதியே இசைத்தமிழ். மெய்யின் இயக்க விளக்கமே கூத்துத் தமிழ். இவ்வாறு உயிர் முத்திறத்தானும் தன்னி யல்பை வெளிப்படுத்து நிலையில் சிறப்பாக விளங்கு வன முத்தமிழாம்.

மேல்நாட்டு உள்ளத்தியற்கை நூலாசிரியர்கள் மனமானது அறிவு நிலை, உணர்ச்சிநிலை, செயனிலை என முத்திறப்பட்டது எனக் கூறிவந்தனர்; இவை வெவ்வேறு நிலைகளாகாது நெருப்பில் சூடும் ஒளியும் வடிவும் ஒன்றாய் விளங்குதல்போல ஒற்றித்து நிற்பன என இதுபோது கூறுகின்றனர். நம் நாட்டு அறிஞர்களும், விருப்பாற்றல், அறிவாற்றல், செயலாற் றல் என்றும், இச்சா ஞானக் கிரியா சக்திகள் என்றும் பேசிவந்தனர். இசை, இன்ப ஒலியும் துன்ப ஒலியு

மாக எழக் காண்கின்றோமாதலின் உணர்ச்சிநிலை அல்லது விருப்பாற்றலின் இயக்கம் எனலாம். மனக் கருத்தை விளக்கும் இயற்றமிழ் அறிவு நிலை அல்லது அறிவாற்றலின் இயக்கம் எனலாம். செயல்நிலை அல்லது செயலாற்றலின் இயக்கமே கூத்துத் தமிழாம். எனவே மனத்தின் இயக்கமாக எழுகின்றவை அனைத்தும் இவற்றிலடக்கவே வேண்டும். இப்பாகுபாடு இவ்வகையில் இயற்கைக்கும் இலக்கணத்திற்கும் பொருத்தமாகும்.

வீட்டு நெறியெனும் மெய்யுணர்வே அறத்துப் பாலின் முடிபாதலின் அறம் அறிவு நிலையின் பயன் எனலாம். உலகில் மக்கள் அரசும் குடிகளுமாய் வாழும் வாழ்க்கையைக் கூறும் பொருட்பால் செயல் நிலையின் பயன் எனலாம். முடிந்த முடிபாம் இன்பத் துப்பால் உணர்ச்சிநிலையின் பயன் எனலாம். "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணை" எனத் தொல்காப்பியனார் தமிழ் ஒழுக்கம் கூறினார். எனவே முப்பாலும் முத்தமிழாக முடிகின்றன; காதலை வீணைச்செல்வம் எனச் சிந்தாமணி கூறுவதினின்றும் இசையும் இன்பமும் ஒன்றுதல் விளங்கும்; எனவே இயற்றமிழ் அறமாம்; கூத்துத் தமிழ் பொருளாம்.

உலகப் பொருள்களின் இயல்பாகச் சத்துவ இராசத தமோ குணங்களையும் காத்தல் படைத்தல் அழித்தல் என்ற செயல்களையும் கூறுவர் அன்றோ? இவை கீழ் நிலையிற்றோன்றும் அறிவுநிலை விளக்கமாகவும் செயல்நிலை விளக்கமாகவும் விருப்புநிலை விளக்கமாகவும் முறையே கொள்ளத்தக்கன என்பர். திரு. பகவான் தாசர் தாம் எழுதிய **'அமைதி நூல்'** என்பதனுள், 'வீடுபெற்று நின்ற மேனிலையில் இறைவனியல்பாக விளங்கும் அறிவும் உண்மையும் இன்பமும்

(சச்சிதானந்தம்) மேனிலையிற்ருேன்றும் அறிவு நிலையும் செயல் நிலையும் விருப்பு நிலையுமாக முறையே அமைகின்றன என்றும், இயங்காதிருக்கும்போது ஒரு பொருளுண்மையினை உற்றுநோக்கியறியாத நாம் அஃது இயங்கும்போது எளிதின் அறிதலின், உண்மைத் தன்மையைச் செயனிலை விளக்கமாகக் கொள்வது பொருத்தமே என்றும், அறிவு அறிவுநிலையின் விளக்கமாதலிலும் இன்பம் விருப்புநிலை விளக்கமாதலிலும் ஐயம் ஒன்றும் எழுதற்கிடமில்லை என்றும் கூறுகின்ருர். அறியும் ஆன்ம அறிவு குறை நீங்கி நிறைவாம் வீட்டு நிலையில் மெய்யறிவு நிலையாக விளங்க எங்கும் நிறைந்த இறைவன் அடிப்படையான உண்மை நிலையாக விளங்க மயக்கி நின்ற இருளுலகம் முற்றும் மாறி இன்ப நிலையாக விளங்க இவ்வாறு இவை மூன்றும் ஒற்றித்து முதிர்ந்து பழுத்து முற்றி நிற்கும் முத்திநிலையும் முத்தமிழ் நிலைதானே.

**முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்**
**சுத்தஅநு போகத்தைத் துய்த்தலனு—மெத்தவே**
**இன்பங் கொடுத்தலிறை இத்தைவினை வித்தல்மலம்**
**அன்புடனே கண்டுகொளப் பா.**

என்பது காண்க.

இவ்வாறு உயரப்பறப்பதைவிட்டு மண்ணிற் றவழ்ந்து வரும்போதும் முத்தமிழ்க் கொள்கையின் பெருமை விளங்குகிறது. இக்காலத்துக்கல்வி அறிவு நிலை ஒன்றையே வளர்க்கின்றது. இதன்பயனுகத் தலை கொழுத்து உள்ளம்வற்றி உடல்வாடி நிற்கின்ற மக்களையே காண்கின்ருேம். போரும் மூண்டெரிகின்றது. முத்தமிழ் நெறியே கல்வி கற்றிருந்தால் முழு மனவளர்ச்சி பெற்ற சான்ருேர்களாய்த் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் விளங்கியிருப்பர் அன்ருே? ‘சங்கத்தமிழ் மூன்றுந்தா’ என எல்லோரும் வேண்டுதல் இன்றியமையாததன்ருே?

மற்றுமொரு வகையால் முத்தமிழ்க் கொள்கையை ஆராயலாம். நமக்கு அமைந்தன மூன்று கருவிகள்; மனம் மொழி மெய் என்பன. இவை பண்பட்ட நிலையைத் 'திரிகரண சுத்தி' என்பர் வடமொழியாளர். தமிழர் இதனைத் தம் மொழியில் மிக அழகாக விளக்கி வைத்துள்ளனர். உள்ளத்தின் இயற்கை நிலையே அதன் தூய நிலையாகும். ஓர்த்து உள்ளது உணர்வதே அந்நிலையாம். அதனை உண்மை என்றனர். (மை என்பது மெய் என்பதன் திரிபாக விளங்குவதை மொழி நூலாராய்ச்சியாளர் எடுத்துரைப்பர். ஆகவே உண்மை என்பது உள்ளத்தின் இயல்பு அல்லது வடிவம் எனப் பொருள்படும்; மெய்ம்மை என்பது அங்ஙனமே உடலின் இயற்கை என்றும் வாய்மை என்பது வாயின் இயற்கை என்றும் பொருள்படுமாறு காண்க.) வாயின் இயல்பு தீதின்றி நன்று பயக்கும் வாய்மையே யாம். மெய்யின் இயல்பு பொய்படா தொழுகும் ஒழுக்கமாம் மெய்ம்மையே யாம். உண்மை வாய்மை, மெய்ம்மை என்ற தனித் தமிழ்ச் சிறப்புச் சொற்கள் முத்தமிழின் இயல்பை விளக்க எழுந்தன போன்றமைந்துள்ளன. இன்பமாய்ப் பொங்கி அறிவாய் விளங்கும் உள்பொருளை உள்ளத்தாலும் வாயாலும் மெய்யாலும் வழிபட்டு அதுவாய் நிற்கும் முறை இதுவேயாகும். **தூயமனத்தில் பொங்கி எழுந்தது இயற்றமிழ். தூயவாயின் முழக்கமே இசைத்தமிழ்; தூயமெய்யின் இயக்கமே கூத்துத்தமிழ்.** இவை மூன்றும் உண்மைக்குமாருக இருத்தலாகாது என்பது தமிழர் கண்டமுடிபு. இவற்றின் ஒற்றித்த வடிவமே முருகு எனும் அழகாம். உணர்ச்சி நிலையின் அழகை யாவரும் அறிவர். 'கல்வியழகேயழகு' என அறிவு நிலையையும் அழகாகக் கண்டனர் நாலடி பாடிய தமிழர். 'ஒழுக்கத்தழகு' எனச் செயல்நிலை அழகினையும் அழகாகக்கண்டார் தமிழ வில்லியார். கிரேக்கர்கள் உண்மை, அழகு, நன்மை என்பவற்றைப் பொன்

ளுலான முக்கோணமாகப் பாராட்டி வந்தனர். உண்மை என்பது அறிவையும், அழகு உணர்ச்சியையும், நன்மை ஒழுக்கத்தையும் குறிப்பனவாகலின் அவையும் முத்தமிழ்க் கொள்கையை விளக்குதல் காண்க. ஆனால் கிரேக்கர்க்கு அவை குறிக்கோளாக விளங்கத் தமிழர்க்கு இவை கல்வி முறையாகி அன்றாட வாழ்க்கையாய் விளங்கின. முத்தமிழ் எனக் கொண்டதால் எல்லாவற்றையும் அழகு என முடிப்பது எளிதாயிற்று. பரதநாட்டியத்திலும் பாவம் எனும் மனக்குறிப்பும் ராகம் எனும் இசையும் தாளம் என்பதும் ஒத்தியைதல் வேண்டும் என்றனர் வடமொழியாளர். முத்தமிழை வெவ்வேருகப் பிரித்துப் பேசினாலும் பிரிக்கமுடியாதபடி ஒன்ருய் மனக்கருத்தாய் அரும்பி, இசையாய்ப் பூத்துக், கூத்தாய்ப்பழுத்து முற்றியபோதுதான் உயரிய வாழ்க்கையாய் இனிக்கக் காண்கிருேம். கண்ணன் மறைமுடிபோதிப் புல்லாங் குழலூதிக் குடக் கூத்தாடுகின்ருன். சிவபெருமான் ஆலின்கீழ் அறமுரைத்துச் சாமகீதனாய் மிக நல்ல வீணை தடவி இன்பக் கூத்தாடிக் கூத்தரசெனச் சிறப்படைகின்ருன். பேரறிவு நிலைபெற்ற பெரியோர்களும் 'அயரா அன்பின் அரன் கழல் செலுமே' என்றபடி உண்மைநிலை மறவாத அறிவாற்றலும், அன்பாய் விளங்கும் விருப்பாற்றலும், அரன்கழல்செலும் செயலாற்றலும் பெற்று விளங்குகின்றனர். அவர்கள் இயலும் இசையும் கூத்தும் இருந்தபடி அது. 'ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கன்பிலை என்புருகிப் பாடுகின்றிலை' என்பது திருவாசகம். கடவுளையடையும் வழிகள் அன்புநெறி, செயல் நெறி, அறிவுநெறி என்றெல்லாம் பெயர்பெற்றுள்ளமை அறிவோம். முத்தமிழ் வழியே கடவுளையடைதலும் கூடும் எனக்கண்ட நற்றமிழ் ஞானசம்பந்தர் 'ஆடல் நெறி,' 'பாடல் நெறி' எனப் புதிதாகக் கூறியுள்ளார். பாடல்நெறி இயல் இசை என்ற இரண்

டையும் குறிப்பதால் முத்தமிழும் இங்கே குறிக்கப் பட்டமை காண்க. திருமூலர் "தமிழ் மண்டலம் ஐந்தும் பரவிய ஞானம்" கூறுவது ஈதேயாம். இவற்றை எல்லாம் மனத்தில் வைத்துக்கொண் டன்றோ,

முத்தமிழே கற்று முழங்கு மெய்ஞ்ஞானிக்குச்
சத்தங்கள் ஏதுக்கடி குதம்பாய்
சத்தங்கள் ஏதுக்கடி

எனக் குதம்பைச் சித்தர் பாடுகின்றார்.

7

# திருநாவுக்கரசர்

திருநாவுக்கரசர், பரதகண்ட மெங்கணும் பரந்து நிலவிய தொன்மைச் சமயமும் உண்மைத் திருநெறியு மாகிய சைவ சமயத்திற்குப் புறச் சமயிகளால் உண் டாகிய இடையூற்றைக் களைந்து, அதன் மாண்பு மலை விளக்காய்த் திகழுமாறு செய்த பேரருளாளப் பெருமக் களாம் சமய குரவர் நால்வருள் ஒருவராவர். இவர் பசுகரணமெல்லாம் பதிகரணமாகத் திகழப்பெறும் சீவன்முத்த நிலையை எய்தியவரென்பது,

**''பாலை நெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்**
**காலனையன் றேவிக் கராங் கொண்ட—பாலன்**
**மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்**
**கரணம்போ லல்லாமை காண்''** —திருக்களிற்றுப்படியார்.

என்னும் ஆன்றோர் திருவாக்கானறியப்படும். இவரது மெய்வரலாறு தில்லையம்பலவாணர் அருளிய *முதல் கொண்டு சேக்கிழார் பெருமான் பாடிய திருத்தொண் டர் புராணத்துள்ளே திகழா நிற்பது. அதன் சுருக் கம்:—

திருமுனைப்பாடி நாட்டிலே, திருவாமூரிலே, வேளா ளர் மரபிலே, குறுக்கையர் குடியில் புகழனர் என்பவர்க் கும் அவர் மனைவி மாதினியார்க்கும் திலகவதியார் என் பவர் பிறந்து சில யாண்டு சென்றபின், மருணீக்கியார்

* முதல் ஈண்டு உலகு'' என்ற சொல்.

என்பவர் திருவவதாரஞ்செய்து, உரிய காலத்திலே கல்வி கேள்விகளில் வல்லராகி மேம்பட்டு விளங்கினர். திலகவதியாரை அரசன்பாற் படைத்தலைவராயிருந்த கலிப்பகையார் என்பவர் மணம் பேசிப் பெற்றோரின் இசைவு பெற்றும், கலியாணம் செய்யுமுன், தம் அரசன் ஏவலை மேற்கொண்டு வடபுலத்து மாற்றரசரோடு அமர்செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது புகழனார் இறந்து அவர் மனைவியாரும் உடன் சென்றனராக, திலகவதியாரும் மருணீக்கியாரும் பெருந்துயருழந்து தந்தையர்க்குரிய கடன்களைச் செய்து முடித்தனர். அந்நாளிலே கலிப்பகையாரும் போர்க்களத்தில் உயிர்கொடுக்க அச்செய்தியைக் கேட்ட திலகவதியார் தாமும் இறக்கத்துணிந்தும், தம்பியார் வேண்டிக் கொண்டமையின் அவர்பொருட்டு உயிர் தரித்து, 'அம்பொன்மணி நூல்தாங்காது அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி' மனையின்கண் தவம்புரிந்து கொண்டிருந்தார்.

அவர், இங்ஙனமிருக்க, மருணீக்கியார் யாக்கை நிலையாமையையும், செல்வ நிலையாமையையும் அறிந்து தமது செல்வத்தை அறஞ்செய்தலிற் செலவிட்டுப் பற்றற்ற நிலையை எய்தியும், சிவபிரான் அருள் தலைக்கூடாமையால் உண்மைச்சமயம் இதுவென அறியப் பெறாது சமண் சமயத்திற் புகுந்து பாடலிபுத்திரம் என்னுமிடத்தை யடைந்து ஆருகத நூலாராய்ச்சியில் மேம்பட்டவராய்ப் புத்த சமயத்தவரை வாதில் வென்று தருமசேனர் என்னும் பெயருடன் இருந்து வந்தனர்.

திருவாமூரில் இருந்த திலகவதியார், திருவதிகை வீரட்டானத்தை யடைந்து வீரட்டானேசுரர் திருக்கோயிலின்கண் திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருப்பள்ளித்தாமம் தொடுத்துச் சாத்துதல் முதலிய திருப்பணிகளைச் செய்துவரும் நாளில் தமது தம்பியார்

சமணசமயப் படுகுழியில் வீழ்ந்து கெடுவதை இறைவனிடத்தில் விண்ணப்பித்து வர, அதனை ஏற்ற சிவபெருமான் அவருக்குக் கனவிலே தோன்றி, 'நின் தம்பி முற்பிறப்பிலே ஓர் முனிவனாகி நம்மையடையத் தவம் புரிந்தவன்; சிறிது தவறியற்றி இந்நிலையனாயினான் நாம் இனி அவனைச் சூலை மடுத்து ஆட்கொள்வோம் கவலை யொழிக' என்று அருள் புரிந்தார்.

அதற்கியையத் தருமசேனருக்குச் சூலைநோய் வந்துற்றது. சமணர் பலவகையான தீர்வினைச் செய்யவும் அது தீராது மேன்மேல் முறுகி வருத்தவே, உய்யுங்காலம் வந்தமையால் தமது தமக்கையை நினைந்து திருவதிகையை அடைந்து அவரை வணங்கி வேண்ட, அவர் பரமசிவனது அருளை வியந்து அவருக்குத் திருநீற்றைத் திருவைந்தெழுத்தோதிக் கொடுத்து, திருப்பள்ளியெழுச்சியிலே திருக்கோயிலுக்கு அழைத்துச்சென்று இறைவன்பால் ஆட்படுத்தனர்.

ஆட்பட்ட மருணீக்கியாரும் இறைவனை வலம் வந்து பணிந்து திருமுன்னின்று திருவருளினாலே பாடும் வன்மை பெற்றுத் தமது சூலை நீங்குமாறும் உலகினர் உய்யுமாறும் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்னும் திருப்பதிகம் பாடி நோய் நீங்கிப் பேரின்பமடைந்து, தமக்கு மிகப் பெரிதாய உதவியைச் செய்ததென்று சூலையைப் பாராட்டினர். அப்பொழுது இறைவர் அவருக்கு '**நாவுக்கரசு**' என்னும் பெயரினைச் சூட்டியருளினர். திருநாவுக்கரசர் அன்று தொட்டு மனம் மொழி மெய் என்னும் மும்மைக்கரணங்களாலும் வழிபடும் உரிமை பூண்டு சிவசாதன மணிந்து, தியானமருத உணர்வும், தடையின்றி யெழுகின்ற திருப்பதிகத் திருவாக்கும், மழைபோலப் பொழியும் கண்ணீரும், உழவாரப் பணியும் உடையவராயினர்.

இங்கு நிகழ்ந்தவற்றைக் கேட்ட சமணர் இதனை அரசன் அறியின் தானும் சைவனாவான் என்று அஞ்சி,

அவனையடைந்து, 'தருமசேனர் சூலைவந்ததாகப் பாவித்துச் சைவத்தையடைந்து நமது சமயத்தை யிகழ்ந்தார்' என்று சொல்லினர். அதைக் கேட்ட அரசன் அமைச்சர்களை யழைத்துத் தருமசேனரை அழைத்து வருகவென, அவர்கள் போய்த் திருநாவுக்கரசரை அழைக்க; அவர், 'நாமார்க்குங் குடியல்லோம்' என்னும் மறுமாற்றத் திருத்தாண்டகம் பாடி மறுத்து, அமைச்சர்கள் வேண்டிக் கொண்டமையின், 'இறைவன் உளன்' என்று அவரோடு சென்றனர். பல்லவ மன்னன் அவரைக் காவலாளரிடம் ஒப்புவித்துச் சமணர் சொல்லுமாறு செய்கவென விடுத்தான்.

சமணர் அவரைக் கொல்லுதற்கு நீற்றறையிலிட்டு ஏழுநாள்காறும் பூட்டிவைத்தும், பின் நஞ்சினையருத்தியும், யானையை ஏவியும் அவர் ஒன்றுனும் ஊனமின்றி யிருந்தமையின்; இறுதியாகக் கற்றூணிலே வலிய பாசங்களினுற் கட்டிக் கடலில் இட்டனர். இடவும், திருநாவுக்கரசர் 'சொற்றுணை வேதியன்' என்னும் நமச்சிவாயத் திருப்பதிகம்பாடித் துதித்து, அக்கல்லே தெப்பமாக மிதக்கத் திருப்பாதிரிப்புலியூர் என்னும் பதியிற் கரையேறினுர். ஏறினவர் திருக்கோயிலுக்குச் சென்று தரிசித்து 'ஈன்ருளுமாய்' என்னுந் திருவிருத்தம் பாடினர்.

திருநாவுக்கரசு நாயனுர் பின்பு திருவதிகை வீரட்டானத்தை யடைந்து ஏழைத்திருத்தாண்டகம் முதலிய பல பதிகங்கள் பாடியிருக்கு மளவில் உண்மையை யறிந்த பல்லவ வரசன் சைவத்தை யடைந்து நாயனுரைத் திருவடிகளில் வணங்கிச் சமண் பாழிகளை யிடித்துத் திருவதிகையில் சிவபெருமானுக்குக் குணதரவீச்சரம் என்னுந் திருக்கோயில் எடுத்து உய்ந்தான்.

திருநாவுக்கரசர் திருப்பதிகடோறும் விருப்புடன் சென்று பதிகம் பாடியும், உழவாரப்பணி புரிந்தும்

போதருவாராயினர். அவ்வாறு சென்ற பதிகளுள்ளே அவர் திருப்பெண்ணுகடத்தை யடைந்த பொழுது சமண் மாசுதீரும் பொருட்டுத் தமக்குச் சூல, இடப இலச்சினை பொறிக்க வேண்டுமென்று பாடி அவ்வாறே பொறிக்கப்பெற்ருர். தில்லைத்திருப்பதியிலே பல பதிகங்கள் பாடிப் பணிசெய்யும் நாளில் திருஞானசம்பந்தப் பிள்ளையாருடைய பெருமைகளைக் கேள்விற்றுச் சீகாழிப் பதியை அடைந்து அவர்கழல்களில் விழுந்து வணங்கப் பிள்ளையாரும் இறைஞ்சித் தமது மலர்க்கையால் அவரையெடுத்து 'அப்பரே' என, அவரும் 'அடியேன் என்ருர்; இருவரும் திருக்கோயிலையடைந்து தரிசித்த பின், அப்பர் பிள்ளையாரது மடத்திலே சிலநாள் தங்கியிருந்து, பின்பு பிற பதிகளையும் வணங்குதற்குச் சென்றனர்.

திருச்சத்தி முற்றத்திலே தமக்குத் திருவடி சூட்ட வேண்டி இறைவனைப்பாடி, நல்லூரிலே சூட்டப் பெற்றுப் பதிகம்பாடித் துதித்தார். திருப்பழனத்தை வணங்கித் திங்களூருக்கணிமையிற் செல்லும் பொழுது அவ்வூரிலுள்ள அந்தணராகிய அப்பூதியடிகள் தம்மீது எல்லையில்லா அன்பு செய்தலையறிந்து அவர் மனைக்குச் சென்று அவரைக் கண்டு அவரன்பினை வியந்து அவரில்லில் அமுது செய்ய இசைந்து தாம் அமுது செய்தற்கு இலைகொணரச் சென்ற அப்பூதியடிகளின் புதல்வராகிய மூத்த திருநாவுக்கரசு இலையரியும் பொழுது அரவுதீண்டி மரித்தமை யறிந்து 'ஒன்று கொலாம்' என்னும் பதிகம் பாடி அவரை உயிர்ப்பித்தனர்.

திருப்புகலூரையடைந்த பொழுது முருக நாயனுர் மடத்தில் எழுந்தருளியிருந்த திருஞான சம்பந்தரைச் சந்தித்துப் பின் இருவருமாகப் பலபதிகட்குச் சென்று வழிபட்டனர். இருவரும் திருவீழிமிழலையை அடைந்த பொழுது மழையின்மையால் வற்கடம் மிக்கு உயிர்கள்

பசியால் வருந்த, நாயன்மாரிருவரும் சிவபெருமான் பாற் படிக்காசுபெற்றுத் தங்கள் திருமடங்களிலே இரண்டுகாலமும் பறைசாற்றி யாவர்க்கும் உணவளித் தனர். இருவரும் திருமறைக்காட்டினை யடைந்த பொழுது, மறைகள் பூசித்துத் திருக்காப்பிடப்பெற்ற எதிர்முக வாயிற்கதவு திறக்கப்பாடுமாறு சம்பந்தர் வேண்ட, அவ்வாறே 'பண்ணினேர் மொழியாள்' என் னும் பதிகம் பாடித் திறப்பித்தார்; அவ்வாயிலாற் சென்று வழிபட்டபின் பிள்ளையார் பதிகம்பாடி அடைப் பித்தார்.

திருநாவுக்கரசர் பழையாறையை அடைந்த பொழுது வடதளியிற் சிவபிரான் சமணர்களால் மறைக் கப்பட்டிருத்தலையறிந்து, 'இறைவனை நேரே கண்டு கும்பிட்டன்றிப்போகேன்' என உணவு கொள்ளாது அங்குத்தங்கி, இறைவனுற் கனவிலருளிச் செய்யப் பெற்ற சோழ மன்னர் சமணரையகற்றிப் பெருமானை வெளிப்படுத்தக் கண்டு கும்பிட்டார். திருப்பைஞ்ஞீ லிக்குச் செல்லும்பொழுது வழியிலே பசியாலும் நீர் வேட்கையாலும் வருந்துவது பொருத சிவபெருமான் தண்ணீர்ப் பந்தர் அமைத்துப் பொதிசோறும் தண் ணீரும் அளித்து உண்பிக்க உண்டு திருவருளை வியந்து பரவினுர்.

திருக்காளத்தியை அடைந்து காளத்தியப்பரையும் கண்ணப்பரையும் தரிசித்திருக்கும் பொழுது, வடகயிலை யிற் சிவபிரான் எழுந்தருளியிருக்கும் கோலத்தைத் தரிசிக்க விழைந்து வடதிசைக்கண் காடுமலையெல்லாம் இரவு பகலாக உணவின்றி நடந்து தம் உறுப்புக்க ளெல்லாம் சிதைந்து வயமழிந்து ஓரிடத்திற்கிடந்தார்; அப்பொழுது அங்கே சைவ முனிவராகத் தோன்றிய சிவபெருமான் கயிலைக்குச் செல்லலாகாமை தெரிவித்து மீளுமாறு கூறவும் அதற்கொருப்படாது, பின் அவர்

வானிலே மறைந்து பணித்தவண்ணம் ஓர் வாவியிலே மூழ்கித் திருவையாற்றிலே ஓர் வாவியிலெழுந்து திருக் கோயிலே யடைந்து, அதுவே திருக்கயிலையாக அம்மை யப்பர் எழுந்தருளியிருக்குங் காட்சியைக்கண்டு வணங் கிப் பதிகம் பாடித் துதித்தார். திருப்பூந்துருத்தியை அடைந்து ஒரு திருமடங்கட்டுவித்துப் பல பதிகம் பாடிப் பணிசெய்து கொண்டிருந்தார். அப்பர் திருப் புகலூரை யடைந்து திருப்பணி செய்துகொண்டிருந்த பொழுது சிவபிரான் அவரது பற்றற்ற நிலையை உல கினர்க்குக் காட்டவேண்டி அவர் பணி செய்யும் உழ வாரம் நுழையுமிடங்களில் செம்பொன்னும் நவமணி யும் திகழுமாறு செய்ய அவர் அவற்றை அங்குள்ள பரல்களோடொப்ப மதித்து உழவாரத்தாலெடுத் தெறிந் தார்; தேவகணிகையர் எதிர்நின்று ஆடியும் பாடியும் மருட்டுமாறு செய்ய அதற்குச் சிறிதும் சித்தஞ் சலியா திருந்து அவர் அகன்றொழியச்செய்தார். இறுதியில், திருநாவுக்கரசர் புகலூரிலே ஒரு சித்திரைமதிச் சதய நாளில் 'எண்ணுகேன் என் சொல்லி யெண்ணுகேனோ' என்று திருத்தாண்டகம் எடுத்து, 'உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே' என்று பாடி, அண்ணலார் சேவடிக்கீழ், நண்ணரிய, சிவானந்த ஞானவடிவாயினர்; என்பது.

இனி, இவ்வரலாற்றினின்று உளங்கொளற் பால வாய உண்மைகளிற் சிலவற்றை ஈண்டுச் சிந்திப் போம்:

திருநாவுக்கரசர், சூலைநோய் முன்பு தம்மைப் பொறுக்கலாற்றாத இன்னல் செய்ததாகவும், உண்மை யறியாது புறச்சமயம் புக்க தம்மைச் சிவபிரான் திரு வடிக்கு ஆட்படுத்தியது அதுவெனக் கொண்டு 'இவ் வாழ்வு பெறத்தரு சூலையினுக் கெதிர்செய் குறையென் கொலெனத் தொழுதார்' என்று சேக்கிழார் கூறுகின்

றனர். சூலை நோய் செய்த உதவிக்குக் கைம்மாறின் றெனக் கூறி அதனை வணங்கினுரென்பது 'இன்னு செய்தார்க்கும் இனியவே செய்யும்' அவரது சால்புடை மையை இனிது விளக்குகின்றது. மற்று, நீற்றறையி லிடுதல் முதலிய கொடுந் துன்பங்களை யிழைத்த சமணர்திறத்தும் எத்துணையும் இன்னலிழைக்கக் கருதாமலும் சினங்கொள்ளாமலும் அமைந்திருந்த அவரதியல்பு 'எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானும், மாணு செய்யாமை தலை' என்னும் பொய்யாமொழிக்கு மெய்யிலக்கியமாகின்றது. அவர் திருக்கயிலை காண்பான் ஊணுறக்கமின்றிச் செல்வுழிக் காலால் நடந்ததன்றிக் கையை ஊன்றியும் மெய்யைக் கிடத்தியும் தவழ்ந்தும் புரண்டும் உடலுறுப்பெல்லாஞ் சிதையவும் உள்ளஞ்சிதையாதிருந்தமை நோன்மைக்கு எடுத்துக் காட்டாகும் நீர்மையது. இவ்வாற்ருல் "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு" எனத் தெய்வப்புலவர் தவத் திற்கே யுருவமெனக் கூறிய இரண்டு பண்புகளும் நாவுக்கரசர்பால் மேவிப் பொலிந்தமை விளக்கமாம். அருண்மொழித் தேவர் "திருநாவுக்கரசு வளர் திருத் தொண்டினெறிவாழ, வருஞானத் தவமுனிவர்" எனத் தோற்றுவாயிலேயே திருத்தொண்டு, தவம், ஞானம் என்னும் மூன்றற்கு முரிமைப்படுத் துரைத்தமையும் காண்க. மற்று, அவர் "ஞானத் தவமுனிவர்" என் றமையால் அவரது தவம் இம்மை மறுமைப் பயன் விழைந்து செய்யும் பொதுத்தவமாகாது, மெய்யுணர் வுக் கேதுவாகிய உண்மைச் சரியை கிரியை யோக மாகிய மெய்த்தவமாமென்பதும் பெற்ரும்.

இனி, நாவுக்கரசரது திருத்தொண்டோ மும்மைக் கரணமும் ஒன்றிய செம்மை வாய்ந்தது. அவரது உள்ளம் இறைவனை நெக்கு நெக்கு நினைந்து நினைந் துருகும் மென்னீர்மையுடன் மலைகலங்கினும் நிலை

கலங்காத வன்னீர்மையும் உடையது; அவரது உரை 'பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகி, எத்திறற் பத்தி செய்கேன் என்னை நீ யிகழவேண்டா' எனக்குறைந்தடைந்திரந்து கூறும் மென்றன்மையுடன் 'வானந்துளங்கிலென் மண்கம்பமாகிலென் மால் வரையும், தானந் துளங்கித் தலைதடுமாறிலென்! என்றிங்ஙனம் செம்மாந்துரைக்கும் வன்றன்மையும் உடையது. அவரது உடல் தளர்ந்து அசையும் மெல்லியல்புடன் காடு மலையெல்லாம் நடந்து கால் கை தேயினும் ஓய்வின்றி நிலமிசைப் புரண்டு செல்லும் வல்லியல்பும் உடையது. நாவரசின் அன்பின் நெகிழ்ச்சியிலாய மென்னீர்மையை,

"தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர் பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே"

"சிந்தையிடை யறுவன்புந் திருமேனி தனிலசைவும்
கந்தைமிகை யாங்கருத்துங் கையுழவா ரப்படையும்
வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற் பொலி திருநீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய"

என்னும் திருத்தொண்டர் புராணச் செய்யுட்கள் இனிது விளக்காநிற்பன. சிவஞானபோத மாபாடியத்தில், 'மாலற நேயம் மலிந்தவர் வேட'த்திற்கு எடுத்துக்காட்டாக நின்றன இவையென்றால் இப்பாடல்களின் அருமையையும், திருநாவுக்கரசரது அன்பின் பெருமையையும் என்னனென்போம். மற்று, அம்பலவாணர் திருமுன் அவர்க்கு நிகழ்ந்த அன்பின் மெய்ப்பாட்டினை அருண்மொழித்தேவர் தீட்டிக் காட்டிய அற்புத வோவியப் பொற்பினையும் ஈண்டு நோக்கியின்புறுதும்.

"கையுந் தலைமிசை புனையஞ் சலியன
கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுட
னுருகும் பரிவின பேறெய்தும்
மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரு
மின்ருழ் சடையொடு நின்ருடும்
ஐயன் திருநட மெதிர்கும் பிடுமவ
ரார்வம் பெருகுத லளவின்ருல்"

நாவுக்கரசர் சமணர்கள் புரிந்த கொடுவினையனைத்தையும் கடந்தமை அவரது திருத்தொண்டின் உறைப்பாலேயாம்; சேக்கிழாரும், 'நாணிலமண் பதகருட, னென்றிய மன்னவன் சூழ்ச்சி திருத்தொண்டினுறைப்பாலே, வென்றவர்' என்றமை காண்க. பிறிதோரிடத்தும் அவ்வுறைப்பினை அவர் சுட்டுகின்றனர். பழையாறை வடதளியிற் சமணரது மறைப்பை நீக்கி இறைவனைக் கும்பிட்டன்றி யகலேன் என உணவுமின்றித் தன்னந் தனியே இருந்துவிட்டதும், கயிலை காணச் சென்ற நெறியிடையே முனியுருக்கொடு வந்த இறைவன் 'கயிலை மால்வரை நின்னுற் காண்டற்குரிய தொன்றன்று; மீளுவதே கடன்' என உரைப்புழி, 'ஆளு நாயகன் கயிலையிலிருக்கை கண்டல்லால், மாளுமிவ் வுடல் கொண்டு மீளேன்' என மறுத்ததும் திருத்தொண்டின் உறைப்பேயாகும். மற்று அவரது தொண்டினுக்குள்ளதோர் சிறப்பு அது கைத்தொண்டாவதாம்; கைத்தொண்டு சிறுமையுடன் புரிந்த தொண்டும், ஒழுக்கமுடனுஞற்றிய தொண்டும், கையாற் செய்த தொண்டுமாகும்; 'கைத் தொண்டாகும் பெருமையினல், வாசியில்லாக்காசு நனிபெற்றுவந்தார் வாகீசர்' எனச் சேக்கிழார் குரிசில் அதன் தனிமாண்பினைக் கிளந்தோதுதலுங் காண்க.

இனி வரலாற்றுப் பகுதியுள் நாவுக்கரசின் ஞான நிலையைக் குறிப்பன அவர் திருமறைக்காட்டிலே கதவந்

திறந்து கண்ணுதலைத் தரிசித்தும், திருவையாற்றிலே யாவும் சத்தியுஞ் சிவமுமாய்த் திகழக்கண்டதும் என்ன லாம். கதவந்திறந்தமை அவரது மெய்யுணர்வுக்குப் பொருத்தமாவதறிந்தே,

தாயிலி யாகுஞ் சிவபெருமான்றனைத் தானெனுமோர்
கோயிலி னூரறி வாகிய நாமமுன் கொண்டிருந்த
வாயிலி னுணவ மாகுங் கபாடமும் மன்றிறந்து
நோயிலி யாகிய சொல்லிறை காட்டுவ னேக்குதற்கே''

என்று சிவப்பிரகாசவடிகள் அருளிச்செய்வாராயினர் என்க. மற்றும், 'பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும் மருளை நீக்கிப் பற்றறுத்த அவரது உணர்வு நிலையானது புகலூரிலே பொன்னை மாதரைப் பொரு ளெனக் கொள்ளாமையானும் போதரும்.

இதுகாறும் நாவுக்கரசர் வரலாற்றினின்று அவ ரது சால்பு, தவம், தொண்டு, ஞானம் என்பவற்றை எம் அறிவு சென்றவாறு சிறிது ஆராய்ந்தேம். இவற் றின் புறனாக அறியலாவதொன்றுமுளது; அது புறச் சமயம் புக்க தம்பியாரைத் தமக்கையார் திருவைந் தெழுத்தோதித் திருநீறளித்துத் திருக்கோயிலுக்கழைத் தேகி இறைவனுக்காட்படுத்தினர் என்பதனால், இற்றைநாளினும் பிற்றைநாளினும் வேற்றுமதம்புக்கு மீளுங் கருத்துடையாரை யாதுசெய்தல் வேண்டும் என்பது.

இனி, நாவுக்கரசரின் பாக்களாகிய பரவையிற் படிந்து அரும் பொருண் மணிகளைக் கொணர்தல் எமக் கெளியதன்றாயினும், அதன் கரைமருங்குலாவும் திரை கொழிப்பவற்றுள் எம் புன்மதிச்சிறுகையால் ஒல்லு மளவு முகப்பேமாக.

நாவுக்கரசரின் கல்வியின் பெருமையும் கவிதை யின் செழுமையும்'பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப்

பதிகத்தொடை பாடிய பண்பதனைக் கண்டு, அவருக்கு நாவுக்கரசு என்று திருப்பெயர் சூட்டிய நம்பரே அறிய வல்லார்; அவர் இறைவன் திருக்கயிலையில் எழுந் தருளிய கோலத்தைத் தரிசிக்க மீதூர்ந்தவன்பின ராயும், அவரை ஆண்டுச்செல்லவொட்டாது தடுத்துத் திருவையாற்றிலே அக்கோலத்தைத் தரிசிப்பித்த பெரு மானது திருக்குறிப்பு, அவர் 'மன்னுதீந்தமிழ் பின்னை யும் புவியிடைவழுத்த' வேண்டுமென்பதாயின், அதற் குக் காரணம் அப்பாக்களைக் கேட்கும் விருப்பமும், அவற்றை உலகினர் நுகர்ந்து உய்யவேண்டுமென் னுங் கருணையும் இறைவன்பால் விஞ்சினமையே யன்றோ? நாவுக்கரசர் தேவாரத்தில் கொல்லி காந்தாரம் முதலிய பண்வகை யன்றிச் சிறப்பாகவுள்ளன திரு நேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை, திருத் தாண்டகம் என்னும் நாற்பகுதியுமாம். அவற்றுள் ளும் திருத்தாண்டகத்தைச் சிறப்பாக நோக்கித் தாண் டகவேந்தர் என்றும், தாண்டகச்சதுரர் என்றும் அவரைப் பாராட்டுவர் உயர்ந்தோர். 'இணைகொள் ஏழெழு நூறிரும் பனுவலீன்றவன் திருநாவினுக் கரை யன்' என அவர் பாடியவற்றிற்கு மட்டும் நம்பியாரூரர் தொகை கூறியதில் ஏதோ ஓர் உண்மையிருத்தல் வேண்டும். அப்பாடல்கள் ஒவ்வொன்றினுள்ளே உலப் பில் பொருள்கள் உள்ளனவாகலின் அனைத்தின் பொரு ளும் எங்ஙனம் அளவிடலாகும்?

நாவுக்கரசர் வரலாற்றுப்பகுதிகள் பலவற்றுக்கு அவர் பாடல்களில் உறுதியுடைய சான்றுகள் பலவுள் ளன. தாம் சமண்சமயஞ் சார்ந்து உழன்றதனையும், இறைவன் பணியை நல்கிப் பின்பு அதுதீர்த்து ஆட் கொண்டதனையும் பலவிடத்துப் பகர்கின்றார் சொல் லரசர்.

"பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங்
குண்டர்கள்தஞ் சொல்லே கேட்டு
உருகுவித்தென் னுள்ளத்தி னுள்ளிருந்த
கள்ளத்தைத் தள்ளிப் போக்கி
அருகுவித்துப் பிணிகாட்டி யாட்கொண்டு
பிணிதீர்த்த வாரூரர்தம்
அருகிருக்கும் விதியின்றி யறமிருக்க
மறம்விலைக்குக் கொண்டவாறே."

என்பது காண்க. நாவுக்கரசர் தாம் முன்பு புறச்சமயம் புகுதலாகிய திருவடிப்பிழை செய்தும் இறைவன் தம்மைச் சூலை நோயால் ஒறுத்துத் தாம் அடைந்தவழி ஆட்கொண்டருளிய பேரருளை நினைந்து அவ்விறைமைக் குணத்தைப் பாராட்டுவாராகியே, அத்தன்மையனாய இராவணனுக்குப் பண்டு அருள் செய்ததனை ஒவ்வொரு பதிக விறுதியிலும் பாடிப் பரவுவாராயினர். சிவபெருமானது பேரருட்டிறம் இத்தகையதென மன்பதைக் கறிவுறுத்தற் பொருட்டே ஆளுடைய பிள்ளையாரும் பதிகந்தோறும் இராவணன் செய்தி கூறுவராயினர் என்க. இனித் திருநாவுக்கரசர் சிவபிரானே தமக்கருட்குரவராய் அருளுக்கினால் ஞான முழுக்கு செய்விக்கப் பெற்றவர் தாம் என்பதனை 'மலங்கெடுத்து மாதீர்த்த மாட்டிக்கொண்ட மறையவனை', 'அருளுக்கிற் றீர்த்த நீராட்டிக்கொண்டாய்' என்பவற்றினால் வெளியிடுகின்றார். திருநெறித்தமிழ் அருளிய மூவரும் குருவருளால் வீடு பெற்றவரெனச் சேக்கிழார் புராணங் கூறுவதும், 'தோடு கூற்றுப் பித்தா மூன்றும், பீடுடைத் தேசிகன் பேரருளாகும்' என ஆன்றோர் பகர்வதும் இதனை வலியுறுத்துவனவாகும். மற்றும் இறைவனே தமது பந்தத்தையறுத்து ஆட்கொண்டனன் என்பதனையும்,அவன் பாடுவிக்கவே அவருளனால்தமிழ் மாலை பாடப்பெற்றதென்பதனையும் 'நாயேனை முன்னைப், பந்த மறுத் தாளாக்கிப் பணிகொண்டாங்கே பன்னிய

நூற்றமிழ்மாலை பாடுவித்தென், சிந்தை மயக்கறுத்த திருவருளினானைச் செங்காட்டடங் குடியதனிற் கண்டேனே' எனவும், அருளறமாகிய நன்னெறி ஆண்டவனாலே தமக்கு அறிவுறுத்தப் பெற்றதென்பதனைத் 'தயாமூல தன்மவழி யெனக்கு நல்கி' எனவும் அரசு அருளிச்செய்தலுங் காண்க.

இனி, நாவரசர் தேவாரத்தால் அறியலாகும் பொருட்பரப்பைச் சுருக்கிக்கூறின் இறை, உயிர், கட்டு என்னும் முப்பொருளியல்புகளும், உயிர் கட்டின் நீங்கி இறையை அடைந்து பேரின் பெய்துதற்குரிய நெறிகளும், அந்நெறிகளிற் சென்று கட்டு நீங்கினார் நீர்மையும் ஆகிய சைவசித்தாந்தச் செழும்பொருள் யாவும் அறியப்படும் என்னலாம்.

அவற்றுள்ளே ஒல்லுவ சில காட்டி இவ்வுரை முடிக்கப்பெறும். இறைவன் 'உலகெலாமாகி வேறாய் உடனுமாய்' உளன் என்பது சித்தாந்த நூற்றுணிபு;

"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
யியமான னாயெறியுங் காற்று மாகி
அறநிலைய திங்களாய் ஞாயி றாகி
யாகாசமா யட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே"

என்பது இறைவன் கலப்பினால் உலகெலா மாகியுள்ள வியல்பினையும்,

"விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணு நிலனும்
திரிதரு வாயுவல்லர் செறுதீயு மல்லர்
தெளிநீரு மல்லர் தெரியில்
அரிதரு கண்ணியாளை யொருபாக மாக
வருள்கா ரணத்தின் வருவார்
எரியர வாரமார்ப ரிமையாரு மல்ல
ரிமைப்பாரு மல்ல ரிவரே"

என்பது பொருட்டன்மையால் வேருகியுள்ள வியல்பிணையும்,

"விண்ணகத் தான்மிக்க வேதத் துளான்விரி நீருடுத்த
மண்ணகத் தான்றிரு மாலகத் தான்மரு வற்கினிய
பண்ணகத் தான்பத்தர் சித்தத் துளான்பழ நாயடியேன்
கண்ணகத் தான்மனத் தான்சென்னி யானெங் கறைக்
[கண்டனே"

என்பது உண்ணிற்றலால் உடனாகியுள்ள வியல்பிணையும் தெளிவித்தல் காண்க.

இனி, உயிர்கள் முதல்வனையடைதற்குரியவாகச் சைவ சமயங் கூறும் நெறிகள் நான்கு. அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் அடிமை நெறி, மகனெறி, தோழ நெறி, உண்மை நெறி, என்பனவாம். சைவ சமய குரவர்களாகிய நால்வர்களின் வாழ்க்கை வரலாற்றைக் கூர்ந்து நோக்கின் நால் நெறிகளுள் ஒவ்வொன்று ஒவ்வொருவர்பால் விஞ்சித் தோன்றுமாயினும், நால்வரும் சிவஞானிகளென்பது துணிபாகலின், ஒவ்வொருவர் வாக்கினுள்ளும் நானெறிகளும் புலப்படா நிற்கும். அம்முறையே வாக்கரசர் பாக்களுள்ளே சரியையாகிய அடிமை நெறியன்றி மற்றைய நெறிகளும் தெற்றெனை விளங்குதல் கண்கூடு.

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன்மு னலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேந்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்றும்
ஆரூரா வென்றென்றே யலறுநில்லே"

என்பது சரியையிணையும்,

"தேனுடை மலர்கள் கொண்டு திருந்தடி பொருந்தச் சாத்தி
ஆனிடை யஞ்சுங் கொண்டு அன்பிஞ லமர வாட்டி
வானிடை மதியஞ் சூடும் வலம்புரத் தடிகள் தம்மை
நானடைந் தேத்தப் பெற்று நல்வினைப் பயனுற் றேனே"

என்பது கிரியை யினையும் தெரிவிக்கின்றன.

"உயிரா வணமிருந் துற்றுநோக்கி யுள்ளக் கிழியினுரு வெழுதி
உயிராவணஞ் செய்திட்டுன்கைத் தந்தா லுணரப்படுவாரோ
[டொட்டி வாழ்தி"

"உடம்பெனு மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத் தீயா லெரிகொள விருந்து நோக்கிற்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே"

"விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினுல்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே"

என்பன யோக ஞானங்களை உணர்த்துவன.

"நானெனிற் றனே யென்னும் ஞானத்தார் பத்தர் நெஞ்சுள்
தேனுமின் னமுது மானுர் திருச்செம்பொன் பள்ளியாரே"

என்பது சிவஞானபோதம் பத்தாஞ்சூத்திரத்தில், உயிர் தானெனவேறு காணப்படாது முதல்வனேயாம்படி ஒற்றுமைப்பட்டு அவ்விறைபணியில் வழுவாது நிற்றல் வேண்டுமெனக் கூறிய ஞானநிலையினை உணர்த்துதல் காண்க.

"முன்ன மவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்திய வனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள்
பெயர்த்து மவனுக்கே பிச்சி யானுள்
அன்னையையு மத்தனையு மன்றே நீத்தாள்
அகன்று ளகலிடத்தா ராசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னுமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் றளே"

உயிர் இறைவனேடு இரண்டறக் கூடுதலாகிய அத்துவிதமுத்தியைப் பெறுமாறு படிமுறையாக உருவக வாய்பாட்டால் இதில் அருளிச் செய்துள்ளார் ஞானத் தவமுனிவராகிய நம் நாவேந்தர்.

இனி, உள்ளம் தூய்மையுற்று மெய்யுணர்வு பெறு தற்கேதுவாகிய நன்னெறிகள் பலப்பல நாவரசர் பாடல் களில் ஆண்டாண்டுக் காணப்படுகின்றன.

''விரதமெல்லாம் மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்''
''பொய்யனைத்தையும் விட்டவர் புந்தியுள், மெய்யனை''
''சுரும்பமருங் குழன் மடவார் கடைக்கண் ணேக்கில்
துளங்காத சிந்தையராய்த் துறந்தோ ருள்ளப் பெரும் பயனை''
''துறந்தார்க்குத் தூநெறியாய் நின்ருன் றன்னை''

என்பன காண்க. ஆயின் இறைவன்பால் உண்மை யன்பின்றி எத்துணை நோன்புகளை மேற்கொள்ளினும் எவ்வெவற்றைச் செய்யினும் அவற்ரு னெல்லாம் பயனின் றென்பது அவர் கருத்தாதலை,

''கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்குதண் குமரித்துறை யாடிலென்
ஓங்கு மாகட லோதநீ ராடிலென்
எங்குமீச னெனுதவர்க் கில்லையே''

''வேத மோதிலென் வேள்விகள் செய்யிலென்
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதியங்கமோ ராறு முணரிலென்
ஈசனை யுள்குவார்க்கன்றி யில்லையே''

என்றற்ரெடக்கத்தனவாகிய கழற்றுரையால் அறிய லாகும். 'அம்பலக் கூத்தனைத், தினைத்தனைப் பொழு தும் மறந்துய்வனே' 'நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ் சுளே, புக்குநிற்கும் பொன்ஞர்சடைப் புண்ணியன் என்பன இறைவனை இடையருது நினைந்து அன்பினுல்' உருகுதலே அவனை யடைதற்கு நெறியாமென்பது

அவரது உன்ளக்கிடையாதலைப் புலப்படுத்தும். மக்க ளெல்லோரும் இறைவன்பால் அன்புசெய்து உய்தி கூடவேண்டுமென்னும் பேரிரக்கத்துடன் அவர்களை ஆற்றுப்படுத்துவனவும், அன்பு நெறியிற் றலைப்படா தாரை நோக்கி இரங்கிக் கூறுவனவும் ஆகிய பாடல் களும், பரந்த உலகியலறிவையும் புலமைத் திறத் தையும் வெளிப்படுத்துவனவாகிய உவமைகளும் பழ மொழிகளும் கற்பனைகளும் அமைந்த பாடல்களும் பலப்பல உள்ளன.

"முன்கை நோவக் கடைந்தவர் நிற்கவே
சங்கியாது சமுத்திர நஞ்சுண்டான்"

என்ருற்போல நகைச்சுவை யமைந்தனவுமுள. அவை கள் விரிவஞ்சி விடப்பெற்றன.

இறுதியாகக் கூறற்பாலது திருவைந்தெழுத்தின் பால் நாவுக்கரசர்க்குள்ள உறுதியான பற்றுகும். பாவத்தை யறுப்பதும், நடுக்கத்தைக் கெடுப்பதும், நலமிகக் கொடுப்பதும்,ஞானமாவதும், கல்வியாவதும், நன்னெறியாவதும் எல்லாம் அத்திருமறையே என் கின்ருர் அவர்.

'படைக்கல மாகவுன் ணுமத் தெழுத்தஞ்சென் நாவிற் கொண்டேன்,' 'திருவாய் பொலியச் சிவாய நம வென்று நீறணிந்தேன்' என அன்பு ததும்பக் கூறு கின்ருர். பின் வருவதும் காண்மின்:

"நமச்சிவாயவே ஞானமும் கல்வியும்
நமச்சிவாயவே நானறி விச்சையும்
நமச்சிவாயவே நாநவின் றேத்துமே
நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே."

8

# பண்டைத் தமிழரின் அரசியல்

பண்டைத் தமிழர் தம்மரசியலை அறிதற்கு ஆதார மாக உள்ளது சங்கந் தழுவிய தண்டமிழ் இலக்கியமே. கிறிஸ்து பிறப்பதற்கு இரு நூறுண்டுகட்கு முன்னும், அவர் பிறந்து இரு நூறுண்டுகட்குப் பின்னும் ஆக நானூறு ஆண்டுகளின் அரசுநிலையை அறிதற்கேனும் அவ்விலக்கியம் பயன்படக்கூடும் என்பதை மறுப்பார் இலர். அவ்விலக்கியத்தில் சிறப்பாக, திருக்குறளும், புறநானூறும், பதிற்றுப் பத்தும் புற நிகழ்ச்சிகளாய் அரசியல், போர்முறை முதலியவற்றைப் பற்றிப் பேசு கின்றமையால், அவற்றையே பெரிதும் துணைக் கொண்டு இக்கட்டுரையை எழுதுவாம். அகநிகழ்ச்சி யாகிய காதலைப்பற்றி மட்டும் பேசும் பிற நூல்களி லும். ஆங்காங்கு உவமை வாயிலாகச் சில அரசியற் கருத்துக்கள் சிதறிக் கிடக்கின்றன. நாம் மேற்குறிப் பிட்ட காலக் கீழ் எல்லையில் வருவது சிலப்பதிகாரம் என்னும் செந்தமிழ்க் கருவூலமாம். அந்நூலில் அர சியற் செய்திகள் பல பொதிந்து கிடக்கின்றன.

இக்காலத்தில் ஒரு நாட்டினரசியல் மற்றொரு நாட் டினரை ஒட்டி அமைத்துக் கொள்ளப்படுகின்றதெனி னும், அக்காலத்தமிழர் தம் அரசியல் காலப்போக்கில், நாட்டின் இயற்கை அமைப்புக்கும், வெப்பதட்ப நிலைக் கும், மக்களின் மனப்பாங்கிற்கும் ஏற்ற முறையில்

வளர்ந்ததெனவே கொள்ளல் சாலப்பொருத்த முடைத் தாம். இக்கருத்தையே நாம் இவண் கடைப் பிடிக்கின்றோம். பண்டைத் தமிழகத்தில் நிலை பெற் றிருந்த அரசியல் கோனாட்சியேயன்றிக் குடியாட்சி என்பதில்லையாம். மூன்று வேந்தர் குடும்பங்கள் எல்லையிலாது செல்கின்ற தொன்மை யுடையதாய்த் தமிழரிடையே வீற்றிருந்தன. வேந்தனின் இயல்பை முதன் முதலில் ஆராய்வோம். பழந்தமிழ் மன்னர் பொதுவான மானுடராகப் பாவிக்கப்படவில்லை என்ப தையும், அவர் கடவுளரைப் போலவே கருதப்பட்டனர் என்பதையும், நாம் தெள்ளிதாக உணரல் வேண்டும். இறை என்னும் சொல் கடவுளையும் வேந்தரையும் உணர்த்துவதை விளக்கப்போந்த பரிமேலழகரும், 'உலக பாலர் உருவாய் நின்று உலகங்காத்தலின் இறை என்றார்' என உரை வகுத்தனர். எனவே தமிழ்நாட்டு வேந்தர் கடவுளராக மதிக்கப்பட்டனர் என்பது தேற் றம். இக்கருத்து, பத்துப் பாட்டுள் ஒன்றாகிய பொருநர் ஆற்றுப்படையின் முடிவிற் காணப்படும் வெண்பா ஒன்றாலும் வலியுறுத்தப்படுகிறது. கரிகால் திருமாவள வனைக் கண்ணுற்ற புலவர் ஒருவர் தலைவி கூற்றாக,

> "அரிமா சுமந்த அமளிமே லானைத்
> திருமா வளவனெனத் தேறேன்—திருமார்பின்
> மானமா லென்றே தொழுதன் தொழுதகை
> போனவா பெய்த வளை."

என்னும் வெண்பாவை இயற்றினர். தலைவி தோழிக் குக் கூறுகிறாள்: 'சிங்கங்களால் சுமக்கப்பட்ட அரசு கட்டிலின் மிசை வீற்றிருந்த திருமாவளவனெனும் கரிகாலனை நான் கண்டேன். ஆனால், அவனை நான் சாதாரண மகனாகக் கைகூப்பவில்லை. திருவீற்றிருக் கும் மார்பையுடைய திருமாலே அவனென நான் அவனை வணங்கினேன். அவனைக் கண்டவுடன்

எழுந்த காதலால் என்னுடல் மெலிவுற, என் கைகளில் இருந்த வளையல்களெல்லாம் கழன்றுவிழுந்தன,' என இப்பாட்டால் பழந்தமிழ் மன்னர் தேவரனைய ரென்று மட்டும் கருதப்படாது, தேவரே எனக் கருதப் பட்டார் என்பது அறியக்கிடக்கிறது.

சங்க இலக்கியத்திற் காணப்படும் வேறுபல் குறிப் புக்களும் இக்கருத்தை வலியுறுத்தும். இயற்கை நிகழ்ச்சிகளெல்லாம் முறையாக நிகழ்தல் வேந்தனின் கடவுட்டன்மையால் தானென அக்காலத் தமிழ் மக்கள் உறுதியாக நம்பினர். இதற்குச் சான்ருகக் கீழ்வரும் அடிகளைக் காட்டுவாம்:

'ஓங்குதிரை வியன் பரப்பின்
ஒலிமுந்நீர் வரம்பாகத்
தேன்தூங்கும் உயர் சிமைய
மலைநாறிய வியன் ஞாலத்து
வல மாதிரத்தான் வளிகொட்ப,
வியனாண்மீன் நெறி ஒழுக,
பகற் செய்யும் செஞ்ஞாயிறும்,
இரவுச்செய்யும் வெண் டிங்களும்
மைதீர்ந்து கிளர்ந்துவிளங்க,
மழை தொழில் உதவ, மாதிரம் கொழுக்கத்,
தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய,
... ... ... ... ... ... ...
உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக!

(மதுரைக்காஞ்சி)

அலைகளையுடைய கடலாற் சூழப்பட்டதும், தேன் கூடுகள் கொடு முடிகளில் அசையாது தொங்கிக் கொண்டிருக்கும் சிமையத்தின் புகழால் நிறையப் பெற்றதுமான இவ்வுலகத்தில், காற்று பருவத்தின் படி வீசுவதும், உடுத்திரள்கள் வானின் தத்தம் நெறி பிறழாது செல்லுதலும், ஞாயிறும் திங்களும் ஒளி

மங்காது துலங்குவதும், காலமழை பயிர்த் தொழிலுக்கு உதவலும், இட்ட வித்து ஓராயிரமாக விளைதலும் நீ உலகத்தை நெறிபிறழாது ஆட்சி புரிதலால், என மாங்குடிமருதன் என்னும் தலைசிறந்த புலவர், நெடுஞ்செழியனை விதந்து பாடியுள்ளார். இயற்கை நிகழ்ச்சிகள் தடைப்படினும், முறைதவறினும் அக்கடவுட்டன்மை நல்வழிப்படுத்தப்படாததே அவற்றிற்குக் காரணமாகக் கருதப்பட்டது. மாரிபொய்ப்பினும் நல்லா பால் சுரக்காது மறப்பினும், நீர்நிலைகள் வறண்டுபோயினும், இயற்கையல்லது செயற்கையில் தோன்றினும், மன்னனையே அவற்றிற் கெல்லாம் காரணமாய்க் கருதிப் பழிப்பர் பழந்தமிழர். மக்களுக்கு அரசனே உயிராவான் என்றதும் இதைக் குறித்துப் போலும். அக்காலத் தமிழ் மன்னரிடையே நிகழ்ந்து வந்த வடக்கிருத்தல் என்னும் ஒழுகலாறும் இக்கடவுட்டன்மையை உணர்த்தக் கூடும். போரில் புறப்புண்பெற்ற வேந்தன் உயிர்வாழ்தல் இன்ரும். கரிகாலனோடு எதிர்த்துப் பொருது, வெண்ணிப்போரில் தோல்வியுற்ற பெருஞ்சேரலாதனைப்போலவும், தம் மக்களால் தோல்வியுறப்பெற்ற கோப்பெருஞ்சோழனைப் போலவும், அவர்தம் வாளைப் பக்கலில் கிடத்தி, வடக்கு நோக்கித் தனித்த இடத்தில் அமர்ந்து, உண்ணாது உயிர் விடுதல் ஒருதலை. நிலக்கடவுளாகிய வேந்தர் தோல்வியுறுதலென்பது மக்களுக்கும் அக்கருத்துக்கும் ஒவ்வாத தாகையால், அவர் இத்தகைய வீரமுறையில் தம்முயிரை நீத்தல் வேண்டும் என விதிக்கப் பட்டிருந்தது.

பொதுவாகநோக்குமிடத்துப் பண்டைத்தமிழ் வேந்தன் எல்லையற்ற ஆணையை உடையவன் என்பது புலப்படும். அவன் அவ்வதிகாரத்தை வரம்பின்றி ஆற்றுதற்கு முற்படின், மக்களால் அவனைத் தடைப் படுத்தவோ, அரசுகட்டிலினின்றும் அப்புறப்படுத்

தவோ, கொல்லுதற்கோ இயலாது. அக்கொடுங் கோன்மையை மக்கள் பொறுத்துக் கொண்டிருத்தல் வேண்டுமெனவும், அவர் பொறுக்க முடியாது பெருக்கிய கண்ணீரே அவ்வரசனின் குடியையும் செல்வத்தையும் வேரறுக்கும் படையெனவும் நம்பினர். அத்தகைய அரசியல் பிழைத்த மன்னர்க்கு அறமே கூற்றம் என இளங்கோவும் கூறிச்சென்றனர். கோவலனைக் 'கொன்றச் சிலம்பைக் கொணர்க ஈங்கு' எனக் கூறிய பாண்டியனுக்குக் கண்ணகி வடிவமாக அறக்கடவுள் இன்னல் இழைத்ததுபோல, பிற கொடியோருக்குப் பகைஞர் வாயிலாக அவ்வறக்கடவுள் தோன்றினும் தோன்றும். அரசியல் தத்துவ முறையில் நோக்குங் கால் இஃதுண்மை யாயினும், வரலாற்றில் பழந்தமிழ் மன்னர் எவரும் இவ்விலக்கணத்துக்குப் பொருத்த முடையவரல்லராம். ஆகையாற்றான் தம்மன்னனை இழக்க நேரிட்ட மக்கள் தம் கண்மணியையே இழந்ததாக வருந்தினர். ஞாயிறு படுதற் தம் திங்கள் எழுதற்கும் இடைப்பட்ட மருட்சியுடைய சிறுபோது, மறுவுலகெய்திய அரசனுக்கும் இவ்வுலக அரசெய்தி ஆளவரும் அரசனுக்கும் இடைப்பட்ட காலம்போல் இருந்ததென ஒரு புலவர் கூறினர். மன்னன் மாண்டதால் 'ஆனது கலுழ்ந்தது உலகம்' என அவர் புகலுகிறூர். இதனுனும் பழந்தமிழர் தம்வேந்தை எங்ஙனம் பாராட்டினர் என்பது விளங்கும்.

தமிழ் வேந்தரை, நெறிபிறழ்ந்தவழி இடித்து நல்லாற்றில் செலுத்தியவர் புலவரேயாவர். புலமையில் வைத்திருந்தபெருமதிப்பால் அக்கால மன்னர் புலவரை ஆதரித்துப் பாராட்டி மகிழ்ந்தனர். மருதன் என்னும் கவிஞரின் செய்யுளில் பாண்டியனுடு இடம்பெருவிடில், தான் சிறப்பிழந்ததாக நெடுஞ்செழியன் கருதினுன். எனவே அரசர் புலவர் தமக்குப் பேருரிமை அளித்தனர். 'அற நெறிமுதற்றே அரசின் கொற்றம்' என

அவர் வற்புறுத்துவர். 'நீ வாழிய இவ்வுலகத்தவர்க்கு' எனக் குமட்டூர்க் கண்ணனார் எனும் புலவர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு நினைவூட்டினார். அரசராவார் தம் முன்னோர் வழிநிற்றல் வேண்டும் என்பதைப் புலவர் அடிக்கடி அறிவுறுத்துவர்.

> 'அரசியல் பிழையாது, அறநெறி காட்டிப்
> பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது'

செங்கோல் ஓச்சுவாயாகவென மாங்குடி மருதனார், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியனை வாழ்த்துகின்றனர். தன்னுயிர் நீங்க நேரிட்ட பாண்டியனும் 'மன்பதை காக்கும் தென்புலங் காவல் என்முதல் பிழைத்தது' என உரைக்கின்றான்.

அரசியல் தடையின்றிச் செல்லுதற்கு உறுப்புகள் ஆறு இன்றியமையாவாம். அவை படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் எனப்படும். தன்னறிவின் ஒளி மட்டும் கொண்டு ஆட்சி செலுத்தும் மன்னனிலும் அமைச்சரின் அறிவையும் துணைக்கொண்டு ஆள்பவன் பிழைத்தல் பெரும்பாலும் கிடையாதாம். தனியரசனாட்சி ஒரு காற்றேறென வீழ்ந்துபடும் எனக் கௌடல்யனும் கூறுவன். 'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன் கெடுப்பாரிலானும் கெடும்' என்பது தமிழர்தம் கொள்கையாம். அமைச்சுக் குழுவில் பொதுவாக ஆசான், அமைச்சன், கணி, தானைத்தலைவன் என்பார் இடம் பெற்றிருந்தனர். சமயத்தைப் பற்றியவற்றைக் கூறுபவன் ஆசானாவான். போர் குறித்த வழி, புள் நிமித்தம் பார்த்தலும் நாள், கோள் நிலை அறிந்து பகரலும் கணியின் கடனாம். அமைச்சர் மற்ற எல்லா அரசியற்றுறைகளைப் பற்றியும் அரசனுக்கு அறிவுறுத்தற்குரியர். தானைத்தலைவன் படையைப்பற்றியும் போரைப்பற்றியும் வேந்தன்பால் எடுத்துக் கூறவல்லவனாவான். அரசனின் சீற்றத்துக்கு ஆளாயினும்

அஞ்சாது உண்மையையும், உறுதிபயப்பதையும் எடுத்துக்கூறல் அமைச்சுக் குழுவினரின் கடமையாகும். அங்ஙனமின்றி, அமைச்சரும் அரசனின் கொடுங்கோன்மைக்கு ஆதரவளித்தல், முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலையாவது போலாகும் என இளங்கோவும் கூறியுள்ளார்.

கூழ் என்பது பொருளாகும். அஃதின்றி அரசாட்சி இயலுதல் இன்றாதலால் பொருள் வரும் வழியை நாடுதல் வேந்தனுவானின் தலையாய கடமையாம். மக்கள் பக்கத்தில் அன்பால் அளிக்கப் பெற்றதும், மன்னன் பக்கத்தில் அருளொடு வாங்கப்பெற்றதுமே பொருளாக்கமாகும். நிலம் படு கடற்படு பொருளும், சுங்கமும் மாற்றார் தேயத்திற் சென்று போர்செய்து திரட்டிவரும் பொருளும் மன்னனின் பொருள் என்பர். புதையல், முத்துபோன்றன முதற்கண் குறிக்கப்பட்டன. வணிகம் ஓங்கிச் செழித்த காலம் அஃதாகையால், காலிலும், கலத்திலும் போந்த பண்டங்களுக்குச் சுங்கம்பெறுதல் அரசரின் உரிமையாயிற்று. பகைப்புலத்தைக் கொள்ளையிடல் குற்றமாகக் கருதப்படாததால், அஃதும் வருவாய்க்கு வழியாயிற்று. இவையன்றி நிலவிளையுளுள் ஒரு பகுதியும் வாங்கப்பெற்றது. ஆறில் ஒரு பங்கு கொளல்வேண்டும் என்னும் விதி அக்காலத்தமிழரிடையே இல்லையாம். விளைந்த நிலத்தில் யானை தனித்துப் புகுந்து, உழக்கி பாழாக்குதல்போல் அரசனுவான் விளைந்த விளையுள் எல்லாவற்றையுமோ, பெரும் பகுதியையோ பற்றிக்கொள்ளக் கூடாதெனவும், உழுதமாடு விளைந்து வந்த நெல்லை விரும்பாது, கேவலம் வைக்கோலை உண்டின்புறுதல்போல், அரசன் சிறு பகுதியையே கொள்ளவேண்டும் எனவும் அக்காலப் புலவர் தம்மரசருக்கு அறிவுறுத்தியுள்ளார்.

மேற்கூறிய வண்ணம் பலவாற்றாலும் ஈட்டிய பொருளைச் செலவிடவேண்டிய துறைகளும் அக்காலத்

தில் வகுக்கப்பட்டிருந்தன. 'அறனும் பொருளும் இன்பமும் மூன்றும் ஆற்றும் பெரும நின் செல்வம்' என **சோழன் நலங்கிள்ளியை** நோக்கிப் புலவர் ஒருவர் உரைக்கின்றார். வறியோருக்கும், புகழுக்குமாகக் கொடுத்தலை அறப்பொருட்டாகவும், கரி, பரி, முதலியவற்றிற்கும், அரணுக்கும், நட்புக்கொண்டோருக்கும் கொடுப்பதைப் பொருட் பொருட்டாகவும், மண்டபம்,வாவி,இளமரக்கா முதலிய செய்தற்கும் புலனுகர்ச்சிக்காகவும் கொடுப்பதை இன்பப் பொருட்டாகவும் கொள்ளல்வேண்டும். அரசனுவான் மக்களிடையே பசியைப் போக்க வேண்டியவனென்னும் பொருள்படப் பசிப்பிணி மருத்துவன் எனப் பட்டான்.

முடியுடைத் தமிழ் வேந்தர், அரசியற்றொழிலை ஆற்றுதற்கும், கண்காணித்தற்கும் ஏவல் சுற்றத்தையுடையவராக விளங்கினர். அவர் கோத்தொழிலாளர் எனவும் வினைஞர் எனவும் அழைக்கப் பெற்றனர். அவர் தருமவினைஞர், கருமவினைஞர் எனவும், தந்திர வினைஞர், கணக்கியல்வினைஞர் எனவும் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப் பெறுகின்றனர். வேந்தரால் நிறுவப் பெற்ற அறச்சாலைகளைக்கண்காணித்தல் தரும வினைஞரின் பணியாகும். தந்திர வினைஞர் என்பார் தம் நாட்டின் பொருட்டுத் தூதுவராகப் பிறநாடுகளுக்குச் சென்று அந்நாடுகளின் அரசரின் நட்பைப் பெறுவதற்கு முயலுபவராவர். கணக்கியல் வினைஞரோ வரவு செலவு கணக்கை வரைபவராம். மற்ற அதிகாரிகளெல்லாம் ஒருங்கே கரும வினைஞர் எனப்படுவர். இவரேயன்றி, சில அதிகாரக் குழுக்களும் இருந்தன. அவை எண்பேராயம், ஐம்பெருங்குழு எனப்படும். அவை வேந்தனின் உடன் கூட்டத்தாரும், மெய்காப்பாளர், கஞ்சுகன் முதலியோரும் அடங்கிய ஆயக்குழுக்களாம்.

முறை செய்து, தன் மக்களைத் தீங்கிழைப்பாரினின்றும் காப்பாற்றும் மன்னனே மக்கட்கு இறையாக வைக்கப் பெற்றனன். ஆறலைப்போராலும், கொலைஞராலும், பிற கொடியோராலும் மக்களுக்கு இன்னல் நிகழாத வண்ணம் அவரைக் காத்து, மற்றவரைக் கடிதல் அரசனுவானின் தலையாய கடமையாம். ஆனதாற்போலும் அவன் 'சான்றோர் மெய்ம்மறை, எனப்பட்டான். மன்னன் நேர்முகமாகவும், அதிகாரிகள் வாயிலாகவும் முறைவழங்கினுன். அவனுடைய முறை வழங்கு மன்றம் அறங்கூறவையம் எனப்பட்டது. சடடம் என்பது அக்காலத்தில் எழுதி வைக்கப்பட வில்லையாயினும், அறவுணர்ச்சியை இயற்கையாகப் பெற்றவர் தமிழராகையால், அவ்வுணச்சியின் ஒளியினைக்கொண்டே அவர் முறை வழங்கினர். வழக்கை ஆராய்ந்து உண்மை காணும் முறை கீழ்வருமாறு ஒரு புலவரால் பேசப்பட்டிருக்கிறது.

'பிறர்பழி கூறுவோர் மொழி தேறலையே;
நீ மெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி யத்தக ஒறுத்தி;
வந்தடி பணிந்து முந்தை நிற்பிற்
றண்டமும் தணிதி நீ."

சாட்சி கூறுவார் பழி கூறின், அவர் கூற்றை ஆராய்ந்து உண்மையைத் தெளிந்துகொள்ள வேண்டும் எனவும், ஒருவன்பால் குற்றம் காணப்படின் அற நூலின் துணைகொண்டு அரசனுவான் அவனைத் தண்டித்தல் வேண்டுமெனவும், குற்றம் செய்தோர் சரணடைந்தால் அவரைத் தண்டிக்காது மன்னித்தல் வேண்டுமெனவும், இங்ஙனமாக முறை வழங்கும் நெறி ஒரு புலவரால் வகுக்கப்பட்டது. களவு செய்தோனுக்குக் கொலைத் தண்டனை வழங்கப்பட்டது என்பதுகோவலன் கதையாலும், புதையலெடுத்து மறைத்துக்கொண்ட

வனைச் சிறையிடலென்பது வார்த்திகன் கதையாலும் அறியக்கிடக்கின்றன. நெய் தலைப் பெய்து குற்ற வாளியை யிழிவுபடுத்தல் வேருெருவிதத் தண்டனை என்பது கீழ்வரும் பதிற்றுப்பத்துப் பதிக அடிகளால் அறியலாகும்.

'நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ.'

போரே அக்காலத் தமிழ் வேந்தர் வாழ்க்கைக்குச் சுவையூட்டியது. முரசொலி கேட்டதும் தோள் விம் மும் தகையவர் அவ்வரசரும் அவர் தம் குடியும். நாட்டி னில் ஆடவர் யாவரும் அரசருக்குப் படைத்துணை யாகச் செல்லுதற்கு முனைந்திருந்தும், அவரையன்றித் தனிப்பட்ட நிலையாய படையையும் உடையவனாக அவன் இருந்தான் என்பது தேற்றம். அப்படை நால் வகைத்தாய் இருந்தது என்பது,

'கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகன்மறவரும்'

என்னும் மதுரை மருதனிள நாகனார் வாக்கினால் நிலை நாட்டப் பெற்றது. படையிலும் வழிவழி வந்த படையே சிறந்த தாகும். ஓரரசனை நோக்கி ஔவையானவர்; 'இவனுடைய தந்தை நின் தந்தையைப் போரில் காப் பாற்றினன். இவனும் நிற்குறித்து வரும்வேலைத் தன் நெஞ்சிற் புகச் செய்து நின்னைக் காப்பன்' எனக் கூறுகிறார். இதனால் பரம்பரையாகப் படைத்தொழி லுடைய குடும்பங்கள் தமிழ்நாட்டிலிருந்தன என அறி யக் கிடக்கிறது. 'தானை தலைமக்கள் இல்வழியில்' என்னும் வள்ளுவர் மொழிப்படி தானைத் தலைவர் பலரும் மன்னனால் ஏற்படுத்தப்பட்டனர். அவருள் தலையாவார் அவனுடைய அமைச்சுக் குழுவிலும் இடம் பெற்றனர் என நாம் முன்னமே கூறியுள்ளோம்.

போர் செய்யும் போது மறனிழுக்கா மானமுடைய முறையில் செய்தல்வேண்டும் என்னும் உணர்ச்சி அக்காலத்தில் உயர்ந்திருந்தது. பெண்டிரையும் நோயுடையோரையும், ஆண்மகவைப் பெருத ஆடவரையும் வீரர் துன்புறுத்தலாகாது என்னும் கோட்பாடு தமிழரிடையே காணப்பட்டது. ஆனல் பகைஞரின் ஊர்களைத் தீக்கிரை யாக்கலும், கொள்ளையிடலும், விளையுளை அழித்தலும், கழுதை ஏர்கட்டி அவர்தம் நிலத்தை உழுது பாழ்செய்தலும் போன்ற போரற ஒழுக்கத்தினின்றும் தவறின செயல்களும் நிகழ்ந்தன.

திருவள்ளுவர் குடியை அறுவகை அரசியலுறுப்புகளில் ஒன்ருகக் கூறியுள்ளார். குடிமக்களின்றி அரசு நடவாதாகையால் மற்றைய உறுப்புகளிலும் அஃதே சிறப்புடையதாகும் குடி என்றதால் நாடும் பெறப்பட்டது. ‘எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே’ என்றதால் நிலத்தின் பெருமை மக்கள் பாலுள்ளது என்பது தேற்றம். தமிழ்மக்களினிடையே குறுநில மன்னரும், பெருநிலக்கிழவரும், பெருந்தகைக்காரரும் சிலர் இருந்தனர். அவர் அரசனேடு நில ஒப்பந்தத்தொடர்பு (Feudal Contract) உடையராக விருந்தனர் என்பது இவ்விரு அடிகளாலும் உணரலாகும்.

‘படை வேண்டுவழி வாள் உதவியும்
வினை வேண்டுவழி அறிவு உதவியும்’

இவ்விரு பணியுமே அத்தகைய ஒப்பந்தத்தாரின் தலையாய கடமையென மேனுட்டு இடைக்கால வரலாற்ருலும் அறியக்கிடக்கிறது. போர்குறித்து அரசன் எழுங்கால், பெரு நிலக்கிழவர் தத்தம் படையுடன் போந்து துணைசெய்ய வேண்டுமென்பதும், அரசியலைப்பற்றி ஆராயுங்கால் அரசனுக்கு அவர் அறிவுறுத்தவேண்டும் என்பதும் மேற்கூறிய அடிகளால்

நாம் தெரிந்துகொள்கின்றோம். மற்றமக்களில், நிலத்தைப் பண்படுத்திப் பயிரிடும் வேளாளரை மன்னன் காத்தல்வேண்டுமெனவும் கூறப்படுகிறது. 'பகடு புறந்தருநர் பாரம் ஓம்பி' எனப் புலவர் ஒருவர் அரசனிடம் சொல்லுகிறார். கூலம் பகர்வாரான வணிகரைக் காத்தலும் அவன் கடமையென்பது பதிற்றுப்பத்தால் அறியக் கிடக்கிறது.

**9**

# பிறை தொழுதல்

> ''அந்தியாரண மந்திரத் தன்புட னிவனை
> வந்தியாதவர் மண்ணினும் வானினு மில்லை''

என்று வில்லிபுத்தூரார் புகழ்ந்து கூறியவாறே மதி பலராலும், பலநாடுகளிலும், பல முறைகளிலும், ஏத்தப் பட்டு வருகிறது. சங்க காலத்திலும் தமிழர்கள் சிவ பெருமானது சடைமீது குடியேறியிருக்கும் பெருமை யாலும், மற்றும் பதினெண் கணங்களும் வணங்கும் சிறப்பாலும் மதியை வணங்கி வந்தனர். ஆனால் நம்மிறைவனையும்,பதினெண் கணங்களையும் அறியாத பிறநாட்டினரும் பிறையைத்தொழுதுள்ளார், தொழுது வருகின்றனர்.

பிலினி (Pliny) என்னும் ஆசிரியர் 'மதி தன்னுடைய தன்மையினால் சகல பொருள்களுக்கும் குளிர்ச்சியைத் தரும். பெரும்பாலும் இரத்தமற்ற மரம், செடி, கொடி கள் மதியின் வளர்ச்சியினால் உயிர்ப்புப் பெறுகின் றன. மனிதர்களுடைய இரத்தமும் வளர் பிறையில் மிகுதிப்படும், ஏனெனில் சந்திரனது அநுகூல சக்தி எல்லாப் பொருள்களிலும் ஊடுருவிச் சென்று அவற்றை வளரச் செய்கிறது' என்று கூறினர். அவரினும் உறு தியாக மேக்ரோபியஸ் (Macrobius) என்பவர், 'சந்திரனே பொருள்களை ஆக்குவோன். 'அவன் வளர்ச்சியுடன் அவை வளரும்; தேய்வுடன் தேயுமென'க் கூறியுள்

ளார். ஹிசயட் (Hesiod) ஆசியரியரது நூலுக்கு உரை கண்ட புளூடார்க் (Plutarch) என்பவரது உரையை மேற்கோளாகக்கொண்டு ஆலூஸ் கெல்லியஸ் (Aulus Gellius) என்பவர் "வளர் பிறையில் வளரும் பொருள்களே தேய்பிறையில் தேயும்" என்று ஒரு சாந்திர விதியை நியமித்ததுடன், இவ்விதியை மாறுபடச் செய்வது சிறு பூண்டாகிய உள்ளியொன்றே என்றும் கூறினர். இச் சிறு பூண்டு தேய் பிறையில் வளர்ந்து,வளர் பிறையில் குறைந்து விடுகிறது. ஆயினும், பொதுவாக, வளர் பிறையில் எல்லாச் செடிகளும் வளரும் என்பதைக் கொண்டே ஸ்காத்லாந்து குறிஞ்சி நில மக்கள், இலையுதிர் காலத்து வளர் பிறைச் சந்திரனை 'கனி பிறை' (Gealach an abachidh) அஃதாவது கனிகளைக் கனியச் செய்யும் பிறை (ripening moon) என்கின்றனர். அக்காலத்துக் கதிர்கள் எவ்வாறு சூரிய கிரணங்களால் கனியுமோ, அதுபோலவே சந்திர கிரணங்களாலும் கனியும் என்பதே அவர்களுடைய நம்பிக்கை.

இவ்வாறு மதியால் பயிர்கள் முதலியவை வளரும் என்னும் கொள்கையை அடிப்படையாகக்கொண்டு பல விதிகள் ஐரோப்பாவிலும், கீழ் நாடுகளிலும் விவசாயிகளும், ஆயர்களும் கையாளுதற் பொருட்டு ஏற்பட்டுள்ளன. அவற்றில் பல இன்றும் மக்களிடையே நிலவி வருகின்றன. இந்நூற்றாண்டில் ஆங்கிலேய ஆசிரியருள் ஒருவர் தமது சமூகத்திலுள்ள சில நம்பிக்கைகளைப் பற்றி எழுதியுள்ள நூலொன்றில் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.* 'குடியானவன் எது ஓங்கி வளர வேண்டுமென்று விரும்புகிறானே அதை வளர் பிறையில் விதைத்தும், எதைக் குறைக்க வேண்டுமென்று எண்ணுகிறானே அதைத் தேய்பிறையில் குறைக்கவும் வேண்டும்'. இதனால் தான் ஜெர்மனியில் தினசரி

* Brand "Poyular Antiquities of Great Britian quoting Werenfals "Dissertation upon Superstition."

வாழ்க்கையில் இன்றியமையாத பலதொழில்களைச் செய்யும் காலத்தை மதியின் வளர்ச்சியையும், தேய்வை யுங் கொண்டே முடிவுசெய்கின்றனர். தொழிலுக்கேற்ற வாறு வளர்பிறைக் காலத்தையோ, தேய்பிறை நாட் களையோ குறித்துக் கொள்ளுவார்கள். பொதுவாக அனுசரிப்பது பெருகவேண்டுமவற்றைச் சுக்கில பட் சத்திலும், சிறுக வேண்டுமவற்றைக் கிருஷ்ண பட்சத் லும் செய்வதென்பதே. மணமுடித்தல், விதையிடல், ஒட்டுச் செடிகளைச் செய்தல் முதலிய தொழில்களை வளர்பிறையிலேயே செய்வார்கள். இது நாமும் அறிந்ததொன்றே. சந்திரன் உரோகிணியோடு கூடிய நன்னாளையே மணநாளாகக்கொண்டதை அகநானூறு முதலிய பழைய தமிழ்இலக்கியங்களும் கூறுகின்றன. இதைப் போலவே மேல் நாட்டினரான ஜெர்மானியரும் தமது மணநாள் வளர்பிறையில் வருமாறு கொண்ட னர். மற்று விறகு வெட்டுதல், நகங் குறைத்தல் முதலியவற்றைத் தவருது தேய்பிறையிலேயே செய்வர்.

காபூன் (Gaboon) என்னும் நீக்ரோ சாதியினர் தேய் பிறையில் விதைத்த பயிர்ச்செடிகள் வளரா; ஆனல் வளர் பிறையில் விதைத்தவை ஒன்றிற்குப் பத் தாகப் பலனளிக்குமென்று திண்ணமாய் நம்புகின்ற னர். ஸ்காத்லாந்திலும் இவ்வாருன நம்பிக்கை உண்டு. உஸ்ஸர் (Thomas Uusser) என்பவர் தமது விவசாய நூல்களுள் ஒன்றில் ' அவரை, துவரை முதலியவற் றைத் தேய்பிறை நாட்களில் நிலத்தில் இடவேண்டும்; ஏனெனில் அவை மதியோடு மறைந்திருந்து, பின்னர் மதியுடனே தோன்றும்" எனஎழுதியுள்ளார். எஸ்தோ னியரும் (Esthonians) ஜெர்மானியரும் நிலத்தின் கீழ் வளரும் கிழங்கு முதலியவற்றை அமர பட்சத்தி னிடையே நட்டு விளைவின் பயனை மிகுதியாக்கிக் கொள்ளுகின்றனர். மத்திய அமெரிக்க நாட்டு

பிபைல்ஸ் (Pipiles) என்னும் வகையினர் தாம் இடப் போகும் தானிய மணிகளை நான்கு இரவுகள் நிலா வெளிச்சத்தில் பரப்பி வைத்து, அம்மணிகள் சந்திரி கையின் சக்தியை நன்கு ஏற்ற பிறகே விதைப்பார்கள். இயற்கையின் மாறுதல்களுக்கு உட்பட்ட விதைகளே யன்றி, அவர்கள் வனையும் மட்பாண்டங்களும் இவ் விதிக்கு உட்பட்டவையே. உகந்தா (Uganda) நாட்டில் குயவன் தனது கலங்களைச் சுடுவதற்குப் பிறை தோன்றுமளவுங் காத்திருப்பான். பிறைதோன்றிச் சிலநாள் கழிந்த பின்னரே கலங்களைச் சுடுவான். தேய் பிறையில் கலங்களைச் சுட்டால், அவை செவ்வனே உருப்பெருமல் நொறுங்கி, உடைவதுமன்றித் தனது வேலையும் வீணுகும் என்பது அவன் நம்பிக்கை.

பிரான்சு தேசத்தில் கி. பி. பதினெட்டாம் நூற் ருண்டு இறுதிவரை தேசியப் புரட்சி (Revolution) ஆரம்பமாகும் வரை காட்டிலாக்கா விதிப்படி மரங் களைத் தேய்பிறையில்தான் வெட்டலாம். இதற்காக அரசாங்கத்தார் கொடுத்த அனுமதிச் சீட்டுகள் பல கிடைத்துள்ளன. பர்மாவில் ஸான்ஸ் (Shans) என்னும் வகையினர் வீடு கட்டுவதற்குரிய பலகைகள் வேண்டுமாயின் தேய்பிறை நாட்களுள் ஒரு நன்னுளைக் குறித்து, அன்றே மரங்களை முறித்துப் பலகைகளைச் செய்வது வழக்கம். வளர்பிறையில் மூங்கில்களை வெட்டினுல் அவை விரைவில் துளைபட்டு, உதிர்ந்து விடும் என்பது அவர்களது நம்பிக்கை. அதுபோலவே அமெரிக்கதேசத்து மெக்ஸிகோ (Mexico) நாட்டினரும் வளர்பிறையில் மரங்களை வெட்டுவது கிடையாது. வெட்டினுல் விரைவில் கெட்டுவிடும் என்று எண்ணு கிருர்கள்.

வளர்பிறை நாட்களில் பனி அதிகமாகப் பெய்வ தைக் கண்டு, திங்கள் தாவர வளர்ச்சிக்குக் காரண மாயது எனப் பல தேசங்களிலும் கருதலாயினர்.

கிரேக்க அறிஞரான அல்க்மன் (Alcman) என்பவர் இக் கருத்தை வைத்து ஒரு அழகிய கதையும் புனைந்துள்ளார். பனி ஒரு பெண் என்றும், ஜியஸ் என்னும் தெய்வத்துக்கும், சந்திரனுக்கும் பிறந்தவள் என்றும் கூறினார். (ஜியஸ் விண்ணிற்கும், மேகத்திற்கும் தெய்வம்). சந்திரனைக் குளிர்ச்சிக்கும், பனிக்கும் பிறப்பிடமாகவே கருதி உழுதுண்போர் வணங்கினர். தமது கதிர்கள் கனிவதற்கும், பயிர்கள் வளர்வதற்கும் இன்றியமையாத பனியின் இருப்பிடமாகத் திங்களைக் கொண்டால், அத்திங்களை அவர்கள் வணங்கியதில் தவறு யாதொன்றுமில்லை. இருக்கு வேதத்திலும் சோமனைப்பற்றிக் கூறும் பாடல்கள் சில குளிர்ச்சியையும், மனதிற்கினிய நிலவையுந்தரும் தெய்வமாக அவனைப் போற்றுகின்றன. புற்றரைகளையும், உழுதுண்ணும் வாழ்க்கையையும் தமது ஆதாரமாகக்கொண்ட ஆரியர்கள் சோமனைக் கடவுளாக வழங்கியது போலவே, சரித்திர காலத்திற்கு முற்பட்ட நாட்களில் நாகரிகம் தோன்றின இடமான பாபிலோனியாவில் (Babylonia) சூரியனைக் காட்டிலும் சந்திரனே அதிகச் சிறப்புப்பெற்றான். சந்திரனைக் கதிரவனின் தந்தையென்றும் வழங்கினர். அமெரிக்க உஷ்ணப் பிரதேசத்தில் வாழும்கரிப்புகள் (Carib) திங்களையே தமது முதற்கடவுளாக வணங்குகிறார்கள். பெரு (Peru) நாட்டினரும். மற்றும் பகஸ்மயூ (Pacasmayu) முதலிய பள்ளத்தாக்குகளில் வசிக்கும் வேறு சாதியினரும் மதியையே தொழுகின்றனர். பகஸ்மயூவில் சந்திரனுக்குப் பெரியதொரு கோவிலுண்டு. அங்கு அவர்கள் நாட்டு விளைபொருளான மக்காச் சோளமாவும், நறவும் நிவேதனமாகக்கொடுத்தன்றி, சிறு குழந்தைகளையும் பலியாகக் கொடுத்தனர்.

சங்க காலத்துத் தமிழர்களும் திங்களை வணங்கினரென்பது குறுந்தொகை 178-ம் செய்யுளால் பெறப்

படும். 'தொழுது காண் பிறை' என்று ஆசிரியர் கூறுகின்றனர். கடம்பனூர்ச் சாண்டிலியனும்,

"வளையுடைத் தனைய தாகிப் பலர்தொழச்
செவ்வாய் வானத் தையெனத் தோன்றி
இன்னுப் பிறந்தன்று பிறையே" (குறுந். 507)

என்று கூறினர். உழுதுண்டு வாழ்வோரையே, வாழ்வாராகக் கொண்ட அவர்கள், மதியினால் பயிர்த் தொழிற்கு ஏற்படும் நன்மையை யறிந்தே வணங்கினரென்று கொள்ளுவதால் இழுக்கொன்றுமில்லை. உலக நாகரிகத்தின் அடிமுதல் திராவிட நாகரிகம் என்று விவகரிக்கும்போது, இக்கொள்கை பொருட்பேறுடையதாய்ப் பயன்படுதல் காணலாம். பொதுவாக மதியை யாவரும் தொழுதாலும், அம்மதியின் வளரும் தன்மைக்கு அறிகுறியான பிறையையே பலரும் பெருமகிழ்ச்சியுடன் வரவேற்றுத் தொழுகிறார்கள். மேற்காட்டிய குறுந்தொகைச் செய்யுட்களிரண்டும் 'பிறை' என்றே கூறுதல் காணலாம்.

**பிறை, பொருள் வளர்ச்சியைத் தருவது.** மேல் நாட்டினர் பிறையைக் கண்டவுடன் தங்களிடமுள்ள நாணயங்கள் பெருகுமாறு அவற்றைப் பிறைக்குக் காட்டுவார்கள். சிறியா (Syria) வில் மகம்மதியரும் கிறிஸ்தவரும் யாவரும் பிறையைக் கண்டவுடனே வெள்ளி நாணயம் ஒன்றைப் பிறைக்குக் காட்டுவார்கள். தெருப்புறங்களில் ஒருவரை யொருவர் கண்டால் ஒவ்வொருவரும் வெள்ளிக்காசு கையிலெடுத்து, ஒருவரையொருவர் தழுவிக் கொள்வதுடன் "இம்மாசம் நல்ல மாசமாகுக" வென்றும் ஆசி கூறுவர்.

**பிறை காட்டல்:** தான் நாள்தோறும் வளருவதனால், பிள்ளைகளையும் பிறை வளரச் செய்யுமென்னும் நம்பிக்கை காரணமாகவே, உலகில் பல தேசங்களிலும்

குழந்தைகளுக்குப் 'பிறை காட்டல்' என்னும் வழக்கம் காணப்படுகிறது

கிரிவிஞத் தீவு (Kriwina Islands): கினியா (Guinea) வின் கிழக்கில் உள்ள ட்ரோபியண்ஸ் (Trobriands) தீவுத் தொகுதியில் ஒன்ருன கிரிவிஞ (Kriwina) த் தீவில் பிள்ளை பிறந்தபின்தோன்றும் முதற்பிறையன்று தாய் தனது பிள்ளையைத் திங்களிடம் காட்டுவாள். பிறை வளருவதைப் போலவே தன் குழந்தையும் வளர்ந்து விரைவில் தன் மழலைச் சொற்களால் தன்னை மகிழச் செய்யவேண்டுமென்றுதொழுவாள். பகந்த (Baganda) நாட்டிலும் இச் சடங்கு உளதாகும்.

அபினகோஸ் இந்தியர்கள் (Abinagos Indians) கிழக்கு பொலிவியாவில் இருண்ட காடுகளில் வசிக்கும் க்வரயோஸ் (Guarayos) இந்தியர்கள் தவருமல் ஒவ்வொரு குழந்தையையும் பிறைக்குக் கரட்டி அதனை வளரச் செய்யுமாறு இறைஞ்சுவார்கள். பிரேஸில் (Brazil) நாட்டுக் குடிகளான அபினகோஸ் இந்தியர்கள் பிறைகாட்டலைப் பெரும் விழாவாகக் கொண்டாடி வருகிருர்கள். அவர்களது 'பிறை காட்டல்' விழாவை நேராகக் கண்ட காஸ்டல்னவ் (Castel naw) என்னும் பிரெஞ்சு யத்திரிகா பின்வருமாறு கூறுகிருர் :

பிறைகாட்டல் விழா : "அபினகோஸ் இந்தியர்கள் இதைப் பெரும் விழாவாக மதிக்கின்றனர். நான் பார்த்த அன்றிரவில் ஊர்ப்பொதுவில் பெண்கள் ஒரு வரிசையாகவும், ஆண்மக்கள் எதிர் வரிசையாகவும் நின்று நடனம் செய்தார்கள். இரு நிரைகளின் நடுவே பெரும் தீ மூண்டு பிரகாசித்தது. ஆடவர்கள் கண் பறிக்கும்படியான பற்பல வர்ணங்களைத் தம்முடம்பில் பூசி, சோளமாவும் பசையும் சேர்த்துச் செய்த குல்லாய்களைத் தலையில் தலையணியாக அணிந்து கூத்தாடினர். அவர்களது நாட்டியம் சிறிதும் வேறுபாடின்றி

ஒரே வகையானது. முதலில் ஒரு காலை முன்வைத்து, மாற்றி மற்றொன்றை வைத்தும் ஒரு பாட்டையே மீண்டும், மீண்டும் பாடியும் ஆடினார்கள். ஆடும்போது தமது படைக்கலங்களை இடையிடையே தரையில் தட்டுவார்கள். பெண்களோ வர்ணமேதும் பூசாமல், சிறிது முன்புறமாக வளைந்து நின்று, முழந்தாளை ஒன்று சேர வைத்து இசைக்கேற்றவாறு முன்னும் பின்னுமாகக் கைகளை வீசி, முன்புறம் வீசும்பொழுது முன்பாகவும், பின்புறம் வீசும்பொழுது பின்னாகவும் கைகளைக் கோத்தாடினார்கள். ஆனால் இவ்விரண்டு நிரைகளின் நடுவே, மிகவும் புதுமையானதொரு உருவம் காணப்பட்டது. அவ்வுருவ முடையவன் உடல் நிறையச் சிவப்பு வர்ணத்தைப் பூசி, கையில் குடுக்கை (சுரைக்காயில் கற்களிட்டு) யொன்றை ஏந்தி அங்கு மிங்கும் ஆடி நடுவே தீயையும் தாண்டுவான், வெறி கொண்டவனைப் போல் பெண்கள் நிரையின் முன்னே ஓடி இங்குமங்கும் நின்று சில சைகைகளைச் செய்து குடுக்கையை விரைவாகக் குலுக்கி, ஒலிக்கச் செய்து கொண்டே ஓடுவான். மற்றும் சிலசமயங்களில் தரையில் முழந்தாளிட்டுத் திடீரென நிலத்தில் வீழ்ந்து புரண்டெழுவான். அவன் ஓடும் வேகமும் திறனும் வியக்கத்தக்கவை. பல நாழிகைவரை இக்கூத்து நடந்த பின், சிலர் வெளியேறச் சிலர் உள்வந்து கலந்து கொண்டனர். ஆடவர் மட்டும் இறுதிவரை நின்று ஆடினார்கள். நடு நிசியில் திங்கள் உச்சத்தை யடைந்த பொழுது ஒரு வேறுபாடு கண்டேன். ஒருவர் பின்னொரு வராக, நீண்ட வரிசையாகப் பலர், சிறு பாய்த்தொட்டில் களில் சிறு பிள்ளைகளையேந்தி வந்தனர். வந்தவர்கள், ஒவ்வொருவராக நிரைகளின் நடுவே சென்று, தொட்டிலை முன்னும், பின்னுமாக வீசி, ஒரு கீதத்தைப் பாடினார்கள். பாடி முடித்தவுடனே நிரையிலுள்ள மற்ற வர்கள் அதை மீண்டும் பாடினார்கள். பல முறை பாடிய

பின் ஒரு முதியவள், பார்க்கச்சகியாதவள், கைகளை மேலே தூக்கியபடி வரிசையுள் வந்து, ஓசையின்றிச் சுற்றிச் சுற்றி வந்தாள். இவளைக் கண்டவுடன் முன்பு ஆடிய குடுக்கைக்காரன் வெறிகொண்டவனுய் முன்னும் பின்னும் புழுப்போல் நெளிந்தும், வளைந்தும் கூத்தாடினுன். தன்னுள் எழுந்த வெறியைப் பிறருக்கும் ஊட்டு வானைப்போலத் தோன்றினுன். கூத்து நிகழ்ந்த நேரமுழுதும் நிரையின் வெளிப்புறத்தில் ஒருவன் ஏதோ பெயரை மீண்டும், மீண்டும் கூறி வந்தான். இவ்வாறு கூறியவன் கையில் அழகிய இறகுகளும் கோடரியுங் கொண்டு முன் செல்ல, குழந்தையுடன் ஒரு பெண் பின் தொடர்ந்தாள். இருவரும் ஓசையின்றி நிரைகளின் முன்னும் பின்னுமாக நடந்து வெளியேறினுர்கள். அவர்கள் போனவுடனே அங்கிருந்தோர் அவன் கூறிய பெயரைச் சத்தமிட்டு அழைத்தார்கள். (அப்பெயர் பிறையின் பெயர் போலும்). இவ்வாறே இரவு முழுவதும் குழந்தைகளைப் பிறைக்குக் காட்டி வந்தார்கள். ஆனுல், இரவு முடிவதற்கு முன்னரே நான் தூங்கிவிட்டேன். காலையில் எழுந்து பார்க்கும் பொழுது இரவில் நடந்த விழாவின் குறியொன்றும் காணப்படவில்லை. எங்கும் நிசப்தமே.''

**தோங்க (Thonga):** தென்னுப்பிரிக்காவிலும் "பிறை காட்ட"லென்னும் வழக்கு உண்டு. ஆனுல் செய்யும் முறை வேறுபட்டுளது. ஆரியர்களும் சிசுக்களை மூன்ரும் மாதத்தில் சந்திரனுக்குக் காட்டி வந்தார்கள். இது இப்பொழுது மிகுதியாக வழக்கில் இல்லை. "சந்திர தரிசனம்" அல்லது 'நிஷ்க்ரமணம்' என்று கூறப்படும் இச்சடங்கு முடிந்த பின்னரே, குழந்தைகளை வெளியில் கொண்டு போவார்கள். பொதுவாகப் புரோகிதர்கள் இச்சந்திர தரிசனத்தில் சந்திரனை நோக்கி வேண்டுவது என்னவென்ருல் "நீ இக்குழந்தைக்கு ஆயுள்,ஐசுவரியம் ஆரோக்கியம் மூன்றும் தருமாறு உன்னை நமஸ்கரிக்

கிறோம்'' என்பதே. தமிழ்ப்பிரபந்தங்களில் காணப்படும் 'அம்புலிப்பருவம்' என்னும் துறையும் குறிப்பிடத் தக்கதே.

பல நாடுகளில் உள்ள இப்'பிறைகாட்டல்' என்னும் வழக்கு எதை நோக்கி ஏற்பட்டதோவென்று பிரேசர் (Frazer) என்னும் ஆசிரியர் ஆராய்ச்சி செய்திருக் கிறார். ஆனால் அவ் வாராய்ச்சியில் ஒரு முடிவும் ஒரு தலையாகத் துணிந்து கூறப்படவில்லை. மேற் கூறப் பட்ட சுலோகத்தால் ஒரு தலையாகத் துணிதற்குக் கூடும். அவர் கருதிய வாறே குழந்தையின் ஆயுளும், ஆரோக்கியமும் பெருக வேண்டுமென்றே சந்திர தரிச னம் செய்து வந்தனரென விளங்குகிறது.

**பிறைவேண்டியன அளிக்கும் தெய்வம்:** வளர்ச்சியின் தெய்வமாகப் பிறையைக் கருதியதைப் போலவே, வேண்டியவற்றை அளிக்கும் தெய்வமாகவும் எண்ணி, பல நாட்டினரும் பிறையைத் தொழுது வந்தனர். பெரு (Perw) நாட்டு யுகலி (*Yucayali*) இந்தியர்கள், பிறை தோன்றியவுடனே மிக்க மகிழ்ச்சியுடன் ஆரவாரித்து வரவேற்று, அதை நோக்கிப் பெரிதும் புகழ்ந்து பேசி, தம்மைச் செவ்வனே பாதுகாத்து, மேன்மேலும் தமது வன்மையைப் பெருக்குமாறும் இறைஞ்சுவார்கள். **சான் ஜூயன் கபிஸ்டரானே** (San Juan Capistrano) என்னும் காலி போர்னியா நாட்டுச் சுதேசிகள் பிறையைக் கண்ட வுடன், யாவரும் ஒன்று சேர்ந்து, தொழ ஆரம்பிப்பார் கள். அவர்களுள் முதியோனொருவன் ''பிறை, பிறை'' யெனக்கூவ, இளையவரெல்லாம் அங்குமிங்கும் பைத் தியம் பிடித்தவரைப்போல ஓட, மற்றவர்கள் வட்ட மாக நின்று, ''திங்கள் இறந்து பிறப்பதே போல், நாமும் இறந்து பிறப்போ''மென்று பாடிக் கொண்டே நடனமாடுவது வழக்கம். இக் கருத்தையே திருத்தக்க தேவரும்,

"மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும்
தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்
(சிந்தா. 2932)

எனக் கூறியுள்ளார்.

மசய் (Masai):—மசய் (Masai) சாதியாருள் சூலுற்ற மகள் பிறயைக் கண்டால் ஒரு சிறு குடுக்கையில் சிறிதளவு பாலைக் கறந்து, அதைப் பசும்புல்லால் மூடி, "எனது பிரசவம் க்ஷேமமாக நடக்க வேண்டு" மென்று கொண்டே பிறையை நோக்கிப் பாலை வீசி எறிவது வழக்கம். வகாகோ (Wagago) என்னும் கீழ் ஆப்ரிக்கா மக்கள் பிணியுற்ருல், பிணியுற்றவன் பிறையைக் கண்டவுடன் ஒரு சிறுகோலைப் பல துண்டுகளாகச் சிதைத்து, அதன் மேல் உமிழ்ந்து, சந்திரனுள்ள திசை நோக்கி வீசியெறிந்து 'என்னுடைய பிணியும் மேல் திசையை நோக்கிப் போக வேண்டுமென' வேண்டுவான். பொலொகி: (Boloki) பொலொகி (Boloki) யரும் பிறையைக் கண்டால், அதை மிக்க ஆரவாரத்துடன் வரவேற்று, நோயுற்றவர் நோய் நீங்கவும், நோயற்றவர் நோயின்றி வாழவும் தொழுவார்கள். கொரியா (Korea) நாட்டிலும் நோயுற்றவர் பிறைச் சந்திரனைத் தம் நோய் நீங்குமாறு ஏத்துவது வழக்கம். பிறை வேண்டியதை அளிக்கும் தெய்வமாகவே எண்ணி, தமிழர்களும் பிறையைக் கொண்டு ஆசி கூறினர்.*

**'பிறை' கன்னியர்:** மூத்தோரது பிணியை யகற்றி, மற்றும் தெய்வமாக வேண்டுவோருக்கு வேண்டியதை அளிக்கும் ஆற்றலுடையது பிறையென்று நம்பித் தான் தமிழ் நாட்டிலும் பிறையைத் தொழுது வந்தனர் போலும். தாம் விரும்பியதைப் பிறையிடம் கேட்டால் பெறுவோமென்று கருதியே கன்னிப் பெண்கள் 'புல் லென்னும் மாலையிலும் உயர் பிறையைத் தொழுதனர்

* மதுரைக் காஞ்சி.

போலும். கன்னி மகளிர் பிறையை வழிபட்டனர் என்பது.

ஒள்ளிழை மகளிர் உயர்பிறை தொழூஉம்
புல்லென் மாலை (அகம் 231)

என்பதனாலும் 'தொழுது காண் பிறை' என்பதனாலும் பெறப்படுகிறது. கன்னி மகளிர் ஏன் பிறையைத் தொழுதனர்? திங்களை ஒரு கடவுளாகக் கொண்டனர் என்பதில் ஐயமில்லை. பிற்காலத்து நூல்களான கோவைகளுள் 'பிறைதொழுகென்றல்' என்னும் பகுதியொன்று உண்டு. 'நடுங்க நாட்டம்' என்னும் துறையைக் கூறும்பொழுது மணிவாசகர், பிறை தொழுகென்று தோழி கூறுவதாக,

"மைவார் கருங்கண்ணி செங்கரங் கூப்பு மறந்து மற்றப்
பொய் வானவரிற் புகாதுதன் பொற்கழற்கே யடியே
னுய்வான் புகவொளிர் தில்லை நின்றோன் சடை [மேலதொத்துச்
செவ்வானடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறு பிறைக்கே"
(திருக்கோவையார் 67)

என்றும், தஞ்சை வாணன் கோவை ஆசிரியரும்,

"திளைக்குந் திரை மேலுனக்குமுன் றோன்றலிற் செம்பொன் வெற்பை
வளைக்கும் பிரான்முடி வைகுத லாற்றஞ்சை வாணன் மண்மேல்
விளைக்கும் புகழ்போல் விளங்குத லாற் செக்கர் விண்பிறைகாள்
தளைக்குங் குழற்றிரு வேதொழ வேதகுந் தன்மையதே"

என்றும் கூறினர். தலைமகளது களவொழுக்கத்தைக் குறிப்பினால் மட்டும் அறிந்த தோழி அதை ஐயமற அறியும்பொருட்டுப் பல குறிகளைக்கொண்டு தெளிய முயலுவதில் பிறை தொழுவோம் வாவென்றலும் ஒன்

ருகும். கற்புக்கடம் பூண்ட மகளிர் தமது தலைவனைத் தேர்ந்தெடுத்த பின்னர் அவனை யல்லது பிறதெய்வங் களை வணங்கார் என்பதை நன்கறிந்தே தோழி தலைமகளைப் பிறைதொழ வாவென்றது. பிறைதொழ மறுத்து நாணி நின்ருளாயின், இவள் தனது தலைவனை யறிவாளெனத் தோழி உணர முடியும். பிறை தொழுவோம் என்றது தான் நாமறிய விரும்புவது. பிறையைக் கடவுளாக, மேலும் கன்னி மகளிர் தொழுவதற்குரிய கடவுளாகக் கொண்டாலன்றிப் பிறைதொழ வருமாறு அழைப்பதில் சிறப்பொன்றுமில்லை. கன்னி மகளிருடைய உரிமை யாகப் பிறைச் சந்திரன் கருதப்பட்ட தெவ்வாறு? இவ் வினுவிற்கு விடை வேருெரு மூலத்திலிருந்து கிடைக் கின்றது.

வேதத்தில் சோமன் கன்னிப் பருவத்திற்குரிய கடவுளாக காணப் படுகிருன். அத்ரி ஸ்மிருதியில் (137) 'மகளிருக்குச் சோமன் தூய்மையையும், கந்தருவர் இன் மொழியையும், அக்னி சர்வமேதத்வத்வையும்' அளித்தார்கள் என்று கூறப்பட்டுள்ளது. ஆரியர் மணம் (The Aryan Marriage) என்னும் நூலையெழு தியவர் இதை விரிவாக 'சோமன் ஸஸ்யாதிபதி. தாவர உலகின் அரசன். அதுவுமன்றி அவன் மகளிரது புத்தி சரீர வளர்ச்சிக்கும் ஏதுவானவன். மகளிரது புத்தி வளர்ச்சி அவனுல் ஏற்படுவது' என்ருர். மேற் கூறியதையும், வேத சுலோகத்தையும் பார்க்கும்போது ஆரியர்கள் சோமனை மகளிரது இளமைப் பருவத்திற் குரிய கடவுளாகக் கொண்டு வணங்கினரென்பது பெறப்படுகிறது. ஆரியர் தெய்வங்கள் பலவும், கொள் கைகள் பலவும் சங்க இலக்கியத்திற் காணப்படுகின் றன. தமிழாது தமிழ் இலக்கியத்தின் சிறப்புறுப்பான நிலப்பகுதிகளைக் கூறும்பொழுது இந்திரன் மேகத்தின்

இறைவன் ஒரு பகுதியைப்பெற்றான். இந்திரன் மட்டு மன்றி, வேதங்கூறும் வேறு பல தெய்வங்களையும் தமிழர் அறிந்தும் போற்றியும் வந்தனர். அது போலவே சந்திரனையும் மகளிரது கன்னிப்பருவத்திற் குரிய, அவரது வளர்ச்சிக்குரிய கடவுளாகக் கொண்டு கன்னிமகளிர் பிறையைத் தொழுதனர் என்பதில் இழுக் கொன்றுமில்லை.

வேறு பல நாட்டினரைப்போல, சங்க காலத்துத் தமிழ் மக்களும் பிறையை வணங்கினர். எதற்காக வணங்கினரென்பது பெறப்படா விடினும், பிற உதா ரணங்களால் வளர்ச்சியின் தெய்வமாகவும், வேண்டி யதை யளிக்கும் கடவுளாகவும் கொண்டாடினர் என்று துணியலாம். ஆயினும் பிறை தொழுதல் என்பது கன்னி மகளிருக்கே சிறப்பாயிற்று. தமது கன்னிப் பருவத்திற்குரிய தெய்வமாகவும் வேண்டியதை யளிக் கும் சிந்தாமணியாகவும் எண்ணித் தொழுதனர். பாற் கடலில் திருவிற்கு முன் தோன்றி, இறைவன் சடையை யடைந்து, பதினெண் கணங்களாலும் போற்றப்படும் சிறப்பையும் பெற்ற பிறை, பிறரால் வளர்ச்சிக்குரிய தெய்வமாகவும், விரும்பியதை யளிக்கும் கற்பகமாக வும் வணங்கப்பட்டது.

10

# வணிகப் புலவர்கள்

வணிகத் தொழிலுக்குப் படிப்பு இன்றியமையாதது. உழுதுண்பார்க்கோ அஃது அத்துணை அவசியம் அன்று. ஆகவே, பண்டைக்காலம் முதலாக வேளாளரைக் காட்டிலும் வாணிகர்கள் படிப்பைத் தம் வாழ்க்கைக்கு இன்றியமையாததாகக் கொண்டிருந்தது வியப்பல்ல. எனவே, பண்டைத் தமிழ் இலக்கண நூலார் வணிகர்க்கு ஏற்படுத்திய அறுவகைத் தொழில்களில் ஓதல், வாணிகம் என்னும் இரண்டையும் குறிப்பாகச் சேர்த்தனர் போலும். "கொள்வதூஉம் மிகை கொளாது, கொடுப்பதூஉம் குறை கொடாது பண்டம் பகர்ந்து பொருள் ஈட்டல்" இவர்கள் அறம் என வகுத்தனர். இத்தகைய வாழ்க்கையிலே எண் வகை உணவாகிய பயறு, உழுந்து, கடுகு, கடலை, கொள், எள், அவரை, துவரை, முதலியவை வித்தி விளைத்துப் பொருள் செய்து வாழும் உரிமை கொண்டவர்கள் ஆவார்கள். தொழிலுக்குக் கணக்கு வைத்தல் இன்றியமையாதது அல்லவா? ஏனைய நாடுகளிலும் வாணிகர்கள் படித்தவர்களே ஆவார்கள். ஆனால் அங்கோ தம் தொழிலுக்கு அளவான படிப்பையே அவர்கள் கொண்டுள்ளார்கள். நம் நாட்டிலோ வாணிகர்களில் சிற்சிலர் படிப்பில்-அதிகமாகத் தேர்ந்து பெரும்புலவர்களாய் விளங்கியுள்ளார்கள். ஆகவே கடைவைத்துக் கணக்கு எழுதும் வாணிகர்களில் புலமை விளங்கிச்

சிறப்புப் பெற்றது நம் தமிழின் இணையற்ற பெருமையாகும்.

ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகிய மணிமேகலையை இயற்றிய கூலவாணிகன் சாத்தனார் என்ற பெரும் புலவரின் பெயரை எண்ணும் காலத்திலேயே, அவருடைய தொழிலும் இன்னதென விளங்கும். கூலம் என்றால் தானியம், அதில் வாணிபம் செய்யும் தொழிலைக் கொண்டதால் கூல வாணிகன் என்ற அடைமொழி அவருக்கு வந்தது. அவருடைய இயற்பெயர் சாத்தனார் என்பது. கூல வாணிகம் செய்யும் அப்பெரியார் பெரும் புலமை வாய்ந்தவரானார். சமய நுட்பங்கள், அகம் புறம் என்ற இருபொருளையும் கதைப் போக்கில் அமைத்துப்பாடுதல், மெய்ப்பாடுகளை ஆங்காங்கு அமைத்தல் முதலியவைகள் அவர் இயற்றிய நூல்களில் சிறந்துள்ளன. ஆழ்ந்த படிப்பும், தேர்ந்ததெளிவும், நிறைந்த அறிவும், அந்நூலில் மிளிரக்காணலாம். திருக்குறள், தொல்காப்பியம் முதலிய சிறந்த நூல்களிலிருந்து இடத்திற்கேற்றவாறு மேற்கோள்களை அப்புலவர் எடுத்தாண்டிருப்பதைப் பார்க்கில் அவைகளை ஐந்திரிபறக் கற்றவர் என அறியவேண்டும். ஆங்காங்கு அறக்கூற்றுக்களை எடுத்துக்காட்டும் வண்மையும், மக்களின் இயற்கைப் பண்புகளைக் கதைப்போக்கில் அமைத்து நாடகம்போல் காட்டும் திண்மையும், இயற்கை அமைப்புச் செயற்கை வகுப்பு இவைகளை விரித்துரைக்கும் எளிமையும் இந்நூலில் விளங்குகின்றன. நகரங்களில் அமைந்திருந்த உட்பிரிவுகள் புறப்பிரிவுகள் முதலியவைகளை ஓவியம் போல எடுத்து விரித்துரைப்பர். தலைவன், தலைவியர் வரலாறுகள் அக்காலத்து மானிய இயல்பைத் தெளிவாகத் தெரிவிக்கின்றன. நகர அமைப்பு, நகர மாந்தர் இயல்பு, குடிவிவரம், தொழில்வகை, ஆலய நிர்மாணம், ஆலய வழிபாடு முதலிய பற்பல விவரங்களையும் அதில்

அறியலாம். தற்காலப் புலவர்களைப்போல் வெறும் மனோபாவ வருணனைகளில் அமைக்காது உள்ளதை உள்ளபடி கண்டகாட்சிகளையே தம் வரலாற்றில் எடுத்தாண்டுள்ளார். காதலின் செயல்களை எடுத்துக் காட்டும் முறைகளை ஆராய்ந்தால் தற்கால நவீனகமும் இவர் கூற்றுகளுக்குத் தோற்றுவிடும் எனலாம். ஆகவே தான், திரை ஒளிப்படத்திலும் இவர் இயற்றிய கதை ஏறிவிட்டது எனலாம். தமிழில் புறச்சமயமாகிய பௌத்த சமயத்தின் கொள்கைகளைத் தெளிவாய்க் கூறும் நூல் இது ஒன்றே ஆகும். சமய வேறுபாடுகளை மிக வெறுப்போடு நோக்கும் தென்னாட்டில் புறச் சமயக் கொள்கைகளை நிலைநாட்டும் முறையினிலே ஒரு நூல் இயற்றிய இப்புலவரின் நெஞ்சின் திடமே திடமென்க.

மேலும் இப்புலவர் பெருமான் கடைச் சங்கத்து நூல்களில் நற்றிணையில் மூன்று பாடல்களும், குறுந் தொகையில் ஒன்றும், அகத்தில் ஐந்தும், புறத்தில் ஒன்றும், திருவள்ளுவமாலையில் ஒன்றுமாகப் பதினொரு பாடல்கள் பாடியுள்ளார். பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன் மாறனைப் புகழ்ந்து பாடியுள்ளார் (புறம் 59). இப்புலவர் முல்லை ஒழிய ஏனைய நான்கு நிலங்களையும் பாடியுள்ளார். அகம் 59ல் அடிமரங்களில் சுரிமூக்கு நொள்ளைகள் மழைக் காலத்தில் ஏறி ஒட்டிக் கொள்வதைக் கூறியுள்ளார். அகம் 134ல் வெளிமான் கொம்பினை வாழைப்பூ உதிர்ந்த தாற்றோடு உவமித்துள்ளார். அகம் 306, 320 இப்பாடல்களில் எடுத்துள்ள உள்ளுறை உவமங்கள் மிகவும் வியக்கத் தக்கவை. ஆகவே இப்புலவர் பெருமான் அகம், அறம் இரண்டிலும் மிகவும் தேர்ந்தவர் எனவேண்டும். உலக இயற்கையை நன்றாக அறிந்தவர் எனவேண்டும்.

மதுரையிலே சங்கத்தார் காலத்திலே மற்றொரு வாணிகப் புலவர் இருந்தார். அவருடைய பெயர்

மதுரைப் பண்டவாணிகன் தேவனூர் என்பது. அவரும் பண்டமாற்றுதல் செய்யும் வணிகராயிருந்தார். பண்டம் என்றால் சரக்கு; ஆகவே அவரை இக்காலத்தார் பல சரக்குக் கடைக்காரர் என்று சொல்லுவார்கள். இப் புலவர் பெருமான் பாலைத் திணையையும் குறிஞ்சித் திணையையும் பாடியுள்ளார். நற்றிணை 41ல் ஒரு காதலி விருந்து புறந்தருதலை வியப்புறப் பாடியுள்ளார். அகநானூறு 298ல் ஒரு தலைவன் இரவுக்குறி வருதலை வெகு அழகாக எடுத்துக் கூறியிருக்கின்றார். இப்புலவர் பாடியது நற்றிணையில் ஒரு பாட்டும் அகநானூற்றில் 3 பாடல்களுமாக நான்கு கிடைத்திருக்கின்றன. பாலை நிலத்தில் சென்ற தலைமகன் தன் காலில் படிந்த புழுதியை ஒரு கிணற்றில் இறங்கிக் கழுவினான் என்றும், அக் கிணற்றைச் சுற்றிப் பருத்தி முளைத்திருந்ததென்றும் வருணிக்கிறார். பருத்தி விற்கச் செல்லும் வாணிகர்கள் வழியே இருந்த அக்கிணற்றங்கரையில் இளைப்பாறுகையில் பருத்தியின் விதைகள் அங்கே சிந்தினதினாலே பருத்திச் செடிகள் முளைத்தன. அதனாலே அக்கிணறானது பருத்திச் செடிகளால் சூழப் பட்டதாம்; அத்தகைய கிணற்றில் தலைவன் வெஞ்சுரத்தில் நடந்த கடுமையைத் தணித்துக் கொண்டானும் என்று அழகு பெறப் பாடி யுள்ளார்.

மேலும் பண்டைக் காலத்துத் தமிழர்களில் நிலம் உழுது விளைவித்த விளைபொருள்களில் வாணிபம் செய்ததுமன்றி, கைத் தொழில் செய்து ஊதியம் பெற்றும், அக்கைத் தொழிற் சரக்குகளை வாணிபம் செய்தும் வாழ்ந்து வந்தார்கள். அவ்வாறு கைத்தொழில் செய்தவர்களிலும் கைத்தொழில் சரக்குகளில் வாணிபம் செய்தவர்களிலும் படித்தவர்கள் இருந்திருக்கிறார்கள். புலவர்களும் இருந்தனர். பொன்வேலை செய்பவர்களில் திருத்தண்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார் என்பவர் ஒரு

வர். இவர் குறிஞ்சியையும் பாலேயையும் பாராட்டி யுள்ளார். நற்றிணையில் ஒரு பாடலும் குறுந்தொகை யில் ஒன்றும் அகத்தில் இரண்டும் புறத்தில் ஒன்று மாக ஐந்து பாடல்கள் கிடைத்திருக்கின்றன. பொன் ஞற் செய்த அணிகளே விற்பனே செய்யும் பொன் வாணிபர்களில் உறையூர் இளம்பொன் வாணிகனர் சாத்தன் கொற்றனர், காவிரிப்பூம் பட்டினத்துப் பொன் வாணிகனர் மகனர் நப்பூதனர் என்பவர்கள் சிறந்த புலவர்களாக இருந்தார்கள். அவர்களில் உறை யூர் இளம்பொன் வாணிகனர் புறத்தில் 264வது பாடல் பாடியிருக்கிருர். அதில் கன்றுடன் கறவைகளாகிய நிரைமீட்டியபோது களத்திற்பட்ட தலேமகனது சிலேக் கல்லே நட்டுப் பூவையும் மயிர்ப்பீலியையும் சூட்டிப் பெயர் எழுதிய வரலாற்றைச் சிறப்பித்துப் பாடியுள் ளார். பாடபேதத்தை ஆராயும்போது இப்புலவரே உறையூர் இளம் பொன்வாணிகன் சாத்தன் கொற்ற ஞக இருந்திருக்கலாம் எனத்தோன்றும். சாத்தன் கொற்றன் பாடியதாக உள்ள பாட்டு அகம் 117 ஆகும். ஆனல் இவரது பெயர் செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனர் என்றும், செல்லூர் இளம்பொன் சாத்தன் கொற்றன் என்றும், காண்கின்ருேம். இதனல், ஊர் பெயர் மாறியிருப்பதை அறிக.

மேலும், அறுவை (துணி) நெய்பவர்கள் நெய்து கொடுக்க அதனே விற்பவர் அறுவை வாணிகர் எனப் பட்டார்கள்.(தற்காலத்தில் புடைவைக்கடைக்காரர் என் பர்)அவ்வித வணிகர்களில் மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனர் என்பவர் ஒரு சிறந்த புலவர். அவர் அகத்தில் 6 பாடல்களும் குறுந்தொகையில் ஒன்றும் நற்றிணையில் ஒன்றும் புறத்தில் ஒன்றும் ஆக 9பாடல் கள் பாடியிருக்கின்ருர். நற்றிணை 344ல் புலி முழங் குவதை இடி முழக்கமாம் என்று கொண்டு குறவர் தினையைக் குவிப்பர் என நயம்படக் கூறியுள்ளார். இவ்

விதம் குறவர் செயலைக் கூறி அதற்கு உள்ளுறை உவமமாகத் தினைகாத்திருந்த தலைவியைக் காவலில் வைத்து வெறிக் களத்திற்குக் கொண்டு போவதைச் சிறப்பித்திருக்கின்றார். அகம் 254ல் புறுவோடு விளையாடும் மைந்தரை நோக்கிக் காதலி வருந்துவாள் என்று தலைவன் கூற்றாக இப்புலவர் கூறியது பாராட்டத்தக்கது. இப்புலவர் பெரும்பாலும் குறிஞ்சி முல்லைகளையும் சிறுபான்மை பாலையையும் சிறப்பித்துள்ளார். நற்றிணையில் ஒன்றும் குறுந்தொகையில் ஒன்றும் அகத்தில் 6ம் புறத்தில் ஒன்றும் திருவள்ளுவமாலையில் ஒன்றும் ஆக 10 பாடல்கள் இப்போது கிடைத்திருக்கின்றன. புறநானூற்றுப் பாடல் 329ல் நடுகல்லுக்குப் பலியூட்டி நன்னீராட்டி நெய்நறையிட்டு மாப்புகை மறுகுடன் கமழ விழாச் செய்தலை ஒரு புலவர் வருணித்திருக்கின்றார். பொருளீட்டும் வணிகராயினும் நாட்டு வழக்கங்களை நன்றாக அறிந்திருக்கின்றார்.

மற்றொரு புலவர் பெயர் மதுரை ஓலைக்கடை கண்ணம் புகுந்தாராயத்தனார் என்பது. இவரது தொழிற் பெயர் விளங்கவில்லை. இவர் புறத்தில் 350ம் பாடலைப் பாடியிருக்கிறார். அவ்வழி கடை வைத்த மற்றொரு புலவர் பெயர் மதுரை ஓலைக்கடயத்தார் நல்வெள்ளையார் என்பது. இவர் நற்றிணையில் 250, 369 என்ற இரு பாடல்களைப் பாடியிருக்கின்றார். இவரது பெயரால் இவர் பெண்பாலர் என்று ஊகிக்கப்படுகிறது. 'நிறையடுகாமம் சிறையடு கடும்புனலோடு ஒத்தது' என்று இவர் கூறியது வியக்கத் தக்கது. இமயமலையையும் கங்கை ஆற்றையும் கூறியுள்ளார். மருதம், நெய்தல் இரண்டினையும் நயந்தோன்றப் பாடியுள்ளார். ஊடல் தணிவித்தல் என்ற துறையில் புதல்வன் தேர் உருட்டிவருவதைச் சிறப்பித்துப் பாணனை 'நகுகம் வாராய் பாண' என்று விளிக்கும் 250வது பாடல் படிக்கப் படிக்க இன்பம் தரும்.

மேலே கண்ட புலவர்கள் வரலாறுகளையும் அவர்களின் புலமைத் திறத்தையும் காணும்போது பண்டைக் காலத்தில் தமிழர்களில் எல்லாத் தொழிலாளர்களும் படிப்பிற் சிறந்து புலமை பெற்று விளங்கினுர்கள் என்று அறிகின்றேம். ஆனுல் இடைக் காலத்தில் அப்படிப்பும் புலமையும் ஏன் குறைந்து விட்டனவோ அறியக் கூடவில்லை. ஒரு வேளை அரசாங்க மாறுதல், சமூக மாறுதல் முதலியவற்றுல் சீர்கேடு உற்றிருக்கலாம். சைவம் தழைத்து ஓங்கிய காலத்தில் காரைக்கால் அம்மையார், பட்டினத்து அடிகளார் என்ற இரு பெரும் வணிக குலத்து அடியார்களைத்தான் தமிழ்நாடு பெற்றது. இப்பெரியார்களுடைய பாடல்கள் பதினேராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. அவைகளின் சிறப்புக்களை நாம் ஒருவாறு அறிந்திருப்போம் ஆதலினுல் இங்கு விவரிக்கவில்லை. வைணவர்களில் திருக்கச்சி நம்பிகள் என்ற ஒரு பெரியார் பிற்காலத்தில் அவதரித்தார். அவருடைய புலமைத்திறம் அறியக் கூடிய வாக்குகள் நமக்குக் கிடைக்கவில்லை. உடையவருக்கு ஆசிரியராக இருந்து அவருடைய பெருமையை உலகத்திற்கு அறிமுகப்படுத்திய மேன்மை இப்பெரியாருடையது என்க. இடைக் காலத்தில் வாணிய இயக்கம் குறையப் புலமையும் குறைந்தது போலும்.

சமீப காலத்திலும் வாணிகர்களில் ஒரு சிலர் புலமைப் பெற்றிருக்கக் காண்கின்றேம். தேவிகோட்டை சின்னயச் செட்டியார், சொக்கலிங்க ஐயா முதலிய புலவர்கள் செட்டிநாட்டில் தோன்றினர். தற்காலத்தில் பண்டிதமணி கதிரேசன் செட்டியார் புலவர்களுக்கெல்லாம் முடிமணியாக விளங்குகின்றுர். வாக்கு, எழுத்து, போதனை, இம்மூன்றிலும் மிகச் சிறந்தவர். தமிழ் மொழியிலும் அங்கதம் உண்டு என்று முதல் முதலில் வெளியிட்ட ஆராய்ச்சியாளர் இவரே. அதனைத் தம் வாக்கில் வேண்டியமட்டும் பயன்படுத்திக் கொண்டு

கேட்போரை மகிழ்விப்பர். அன்னார் அடிச் சுவட்டைப் பின்பற்றி இரண்டு மூன்று இளங்காளைகள் இப் பொழுது தோன்றியுள்ளார். இத்தகைய பேரறிஞர் களாலே வாணிக உலகம் சிறப்படைந்து ஓங்கிவரு கின்றது.

1427—8

11

# தமிழ் இலக்கியங்களிலுள்ள உவமைச்சுவை

தமிழ் மொழியால் ஆக்கப்பட்ட இலக்கியங்களிற் காணப்படும் உவமானங்களிலுள்ள சுவை என்பது இத் தொடரின் பொருள். உவமைச் சுவை என்பது, நகைச் சுவை முதலிய எட்டு அல்லது ஒன்பது வகைச் சுவை களுள் ஒன்றன்று; எனினும் ஐம்புலனுக்கோ அல்லது அறிவுக்கோ இன்பந் தருவன அனைத்தையும் 'சுவை' என்று கூறும் வழக்குப் பற்றிக் கற்போருக்கும் கேட் போருக்கும் இன்பந்தந்து அவர்களை மகிழ்விக்கும் உவமத்தையும் சுவை என்று கூறுகின்றோம்.

## உவமை என்பது என்ன?

உவமை என்பது ஒருபொருளோடு மற்றொரு பொருளை ஒப்புமை கூறுதலாகும். இந்த உவமை, பண்டைப் புலவர்கள் அகமும் புறமும் பற்றிப் பாடிய பாட்டுகளின் பொருளைப் புலப்படுத்துதற்குச் சிறந்த கருவியாக உள்ளது. 'இஃது அணிவகையிற் சேர்ந்தது' எனவும் 'அல்ல' எனவும் கொள்ளும் கருத்து வேற்றுமை பண்டைய உரையாசிரியர்களிடம் உண்டு. தொல்காப்பியனாரால் இஃது ஏனையுவமமென்றும்,

உள்ளுறை உவமமென்றும் இரண்டாகப் பகுக்கப் பட்டது. இங்குப் பேசப்படுவது ஏனை உவமையேயன்றி உள்ளுறை உவமமன்று. அந்த ஏனை உவமம் வெளிப் படையுவமம் என்னும் பெயரையும் உடையது. அது வினைபற்றியும், பயன்பற்றியும், வடிவம் பற்றியும், நிறம்பற்றியும் வருதலால் நான்கு விகற்பங்களையுடைய தாயிற்று. ஒவ்வொன்றற்கும் உதாரணங்கூறி விளக்கினுல் விரியுமாகையால் இஃது இம்மாட்டோடு நிற்க.

## புலமையை அளப்பதற்குரிய கருவிகளுள் உவமையும் ஒன்று

பண்டைக் காலத்தில் புலவர்களின் பரந்த புலமை நுட்பத்தை அளப்பதற்குரிய கருவிகளுள் அவர்கள் கையாண்ட உவமைகளைத் தலைசிறந்த கருவியாகக் கொண்டிருந்தனர். என்பதையும், அவ்வுவமையிலீடு பட்டு அப்பெயரையே அப்புலவர்கட்கு இட்டு வழங்கி வந்தனர் என்பதையும் நாம் அறிவதற்குப் பல ஆதரவுகள் உள்ளன. குறுந்தொகை என்னும் சிறந்த சங்க இலக்கியத்திற் காணப்படுவன கடவுள் வாழ்த்து உட்பட நானூற்றொரு (401) பாடல்கள். அவற்றைப் பாடியவர்கள். பாரதம் பாடிய பெருந்தேவனுர் முதல் அம்மூவனுர் இறுதியாக உள்ள இருநூற்ருறு (206) புலவர்களாவர். இவருள் பதின்மூவரின் பெயர்கள் கூறிய உவமைகளாலேயே வழங்கப்படுகின்றன. 'செம்புலப் பெயனீரார்' என்பது ஒரு புலவரின் பெயர். இவர் முன்பு யாதொரு தொடர்புமில்லாது எதிர்ப்பட்ட ஓர் தலைவன் தலைவியின் உள்ளம் ஒன்றுபட்டதற்குச் செம்மண் நிலத்துப் பெய்தமழை நீரானது அம் மண்ணோடு கலந்து அதன் நிறத்தையும் சுவையையும் பெற்று ஒன்றுபடுவதை உவமையாக்கி,

"செம்புலப்பெயல் நீர்போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந்தனவே" எனக்கூறியதனுல்,

அப்பெயராலேயே அழைக்கப்பட்டார். மற்றப் புலவர்களின் பெயரையும் இவ்வாறே காண்க.

### எந்தெந்த உவமையால் எவ்வெவற்றை அறியலாம்

இந்த உவமங்களைப் புலவர்கள் ஆண்டிருக்கும் முறையை நோக்கினால் அவை பிறர் கூற்றாகக் கூறியதும் தம் கூற்றாகக் கூறியதும் என இருவகையாகக் காணப்படுகின்றன. அவற்றுள் பிறர் கூற்றாகக்கூறும் உவமங்களிலே தான் புலவனுடைய விரிந்த புலமையாற்றல் வெளிப்படும் தம் கூற்றாகக் கூறும் உவமங்களாலே அப்புலவனுடைய உள்ளத்தின் உயர்வு, அதை யொட்டிய வாழ்க்கைநிலை, புலமை முதலியவற்றையறியலாம். பிறர் சொல்லுவதாகச் சொல்லப்படும் உவமைகள், சொல்லுகின்றவர்களின் மரபு, தொழில், பழக்கம், சுற்றுச் சார்பு முதலியவற்றால் அவர்கள் அறிந்த பொருளிலே இருக்கவேண்டும் ஆதலால், அவையனைத்தையும் புலவன் நன்குதெரிந்து வைத்திருந்தாலன்றி, அவற்றுக்குப் பொருத்தமாகக் கூற முடியாது. ஆதலால் அவ்வுவமைஅவனது பரந்த புலமையைக் காட்டுவதாயிற்று.

இனி, புலவன் தன் கூற்றாகச் சொல்லும் உவமைகளோ 'மனநலம் மாற்றம் உரைக்கும்' என்றபடி அவனது உள்ளத்தின் உயர்வையும் தூய்மையையும் வெளிப்படுத்தி, அவன் வாழ்க்கையின் குறிக்கோளையுங் காட்டி, உலக நிகழ்ச்சிகளை எத்துணைக் கூர்ந்து நோக்கியிருக்கிறான் என்பதைப் புலப்படுத்து முகத்தால் அவனது புலமையையுங் காட்டுகின்றன.

### பிறர் கூற்றாகக் கூறும் உவமை

இவ்வுவமங்கள் இலக்கியங்களுள் எவ்வாறு எடுத்தாளப்பட்டிருக்கின்றன என்பதை ஆராய்வோம். விரை

வில் மணந்து கொள்ளுங்கருத்து இல்லாதவனுய், களவொழுக்கத்தையே விரும்பி ஒழுகுந் தலைவனிடம் தோழி, 'நீ, எங்கள் தலைவியைப் பிறரறிய விரைவில் மணஞ் செய்துகொள்ளவேண்டும். இன்றேல் தலைவி இறந்துவிடுவாள்' என்றுசொல்லுபவள், தன் தலைவியின் உயிரினது சிறுமையும், அதைப்பற்றி நிற்கின்ற காமநோயின் பருமையுமாகிய இவற்றுக்கு, மலைப் பக்கத்திலுள்ள பலாமரத்திலுள்ள கொம்பின் சிறுமையையும் அதைப்பற்றித் தொங்குகின்ற பலாப்பழத்தின் பெருமையையும் உவமமாக்கி,

"... ... ... ... ... சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" எனக் கூறினுள்

என்பது குறுந்தொகையாலறியப் படுவதொன்று. அத்தோழியானவள் குறிஞ்சி நிலத்திலுள்ளவள்; அந்நிலத்தின் கருப்பொருளாகிய பலா மரங்களின் சிறு கொம்புகளிலே பெரிய பெரிய பழங்கள் தொங்குதலைப் பல காலுங் கண்டு பழகியவள்; ஆதலால் அவள் அறிந்த பொருளாலே உவமை கூறுகின்ருள் என ஆசிரியர் பாடியது பெரிதும் போற்றத்தக்கதாகும்.

இனி, திருக்குறளிற் கூறப்படும் உவமங்களுள் இரண்டை எடுத்துச் சுவைக்கலாமென எண்ணுகிறேன் 'தலைவன் பிரிந்திருக்கும்பொழுது அவனுடைய குறைகளைக் கூறி வருந்தும் நீ, அவனைக்கண்ட காலத்துப் பிணங்காமைக்குக் காரணம் என்ன' என வினவிய தோழிக்குத் தலைவி, கண்ணுக்கு மைதீட்டும் அஞ்சனக் கோலின் தன்மையை, அது தனித்திருக்கும் போழ்து நன்கு அறிந்து கொண்டிருக்கும் கண், அக்கோல், தன்னேடு பொருந்தி மைதீட்டும்பொழுது காணுவதில்லை என்பதை உவமை யாக்கி,

"எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து" எனக் கூறுகிருள்.

தலைவி செல்வர்கள் வீட்டுப்பெண் ஆகையால், தன் தலைவன் கண்டு மகிழுமாறு மையிடுதல் முதலியவற்ருல் எப்பொழுதுந் தன்னை ஒப்பனை (அலங்காரம்) செய்துகொள்ளும் இயல்பினள், ஆதலால் அதனையே இங்கு உவமமாக்குகிருள்.

ஓர்நாள், தோழி தலைவியை நோக்கி 'கலவிக்காலத்தில் சாலவும் இன்பத்தை விளைவித்தலால் புலவி இன்றியமையாததுதான்; ஆனல் அஃது ஓரளவிலிருந்தாற்ருன் அந்த இன்பத்தைத் தரும்; அவ்வளவிற் சிறிது மிகுந்தாலோ இன்பத்திற்கீடாகத் துன்பத்தை நல்கிவிடும்' எனச் சொல்லக்கருதியவள், சமைக்குந் தொழிலில் நன்குபழகியவளாதலால்,மக்கள் உண்ணுங் கறி முதலியவற்றுக்கு அளவோடு போடப்பட்டிருந்தாற்ருன் உப்பு இனிமையைத் தரும்; சிறிது அளவு மீறினலும் அவற்றை உண்ணுந் தகுதியில்லாதனவாய் அவ்வுப்புச் செய்துவிடும் என்பதை உவமமாக்கி,

"உப்பமைந் தற்ருற் புலவி யதுசிறிது
மிக்கற்ருல் நீள விடல்" என்று கூறினள் என

வள்ளுவர் கூறுவது எத்துணை வாய்ப்புடையது பாருங்கள்.

கோவலன் பிரிந்தபின் உலக வாழ்க்கையையே வெறுத்திருந்த மாதவியைத் திருப்பித் தன் மரபுத் தொழிலிற் புகுத்தக்கருதிய அவளுடைய தாய் சித்திராபதி என்பவள் 'யாழ் வாசிக்கும் ஒருவன் இறந்து விடுவானனல் அவனேடு அவன் வாசித்த யாழும் இறந்துபடுவதில்லை. பின்னும் வாசிக்கின்றவன் கையிற் சென்று பயன் தரும் அதுபோலல்லவா நாமும்.'

''பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையில்
யாழினம் போன்ற இயல்பினம்''

எனக் கூறினளென்பதை மணிமேகலை என்னும் பெருங் காப்பியத்தாலறிகிறோம். சித்திராபதி என்பவள் விலை மகள். அம்மரபுப் பெண்கள் பலரும், தம் வலையில் வீழாத செல்வ இளைஞர்களை வீழவைக்கவும், வீழ்ந்தவர்கள் பொருள் அவர்களைக் கைவிடும் வரையும் தம்மைக் கை விடாதிருக்கவும் மேற்கொள்ளும் உபாயம் யாழ் வாசித் தல் முதலியவற்றுள் தேர்ச்சி பெற்றிருத்தலன்றோ! எனவே தனக்குக் கைவந்த நிகழ்ச்சியொன்றையே சித்திராபதி உவமையாக்கிக் கூறினளென்பது எத் துணை இன்பத்தை அளிக்கிறது பாருங்கள்.

இனி, சீவக சிந்தாமணி என்னும் பெருங்காப்பியத் துட் காணப்படும் உவமையொன்று அறிவுடையோர் எண்ணி எண்ணிச் சுவைத்தற்குரியது. நந்தகோன் என்ற இடையர் தலைவன், தன்மகள் கோவிந்தை என் பாளைச் சீவகனுக்கு மணஞ்செய்து கொடுக்கக்கருதி யவன், அச்சீவகனிடம் தன் புதல்வியின் உடலினது மென்மைக்கும், சொல்லின் சுவைக்கும், உடலின் நிறத் திற்கும், தன் வாழ்க்கையிலே பலகாலும் கண்டு கண்டு பழகிய வெண்ணெய், பசுவின்பால், உருக்கிய பசுவின் நெய் இவற்றையே உவமாக்கி,

''வெண்ணெய்போன் றூறினியள் மேம்பால்போற் றீஞ்சொல்லள்
உண்ண உருக்கிய ஆனெய் போல் மேனியள்''

எனக் கூறினன் என்று திருத்தக்கதேவர் பாடி யிருப்பது அவர்கூறிய பசுவின் பாலினும் தெவிட்டாத சுவையுடையதாக இருப்பதைப் பாருங்கள்.

கண்ணப்ப நாயனார் நாணன் என்னும் வேடனோடு காளத்தி மலையிலேறினார்; இறைவனைக் கண்டார்; அன்பால் விழுங்கப்பட்டுத் தம்மை மறந்தார்; அப்

பெருமானை இறுகத் தழுவிக் கொண்டார்; நாணன் என்ன கூறியும் அவ்வாண்டவனை விட்டாரில்லை; அன்புகனிந்த பல வார்த்தைகள் கூறினார்; பின்னர் அவனுக்கு உணவு கொண்டு வரும் பொருட்டுக் கீழே இறங்கினார். நாணனும் உடனிறங்கினான். கண்ணப்ப ரால் கொல்லப்பட்ட பன்றி யொன்றை அவருடைய ஆணைப்படி பாதுகாத்துக் கொண்டிருந்த காடன் என்னும் வேடன் ஏன் இத்துணைக் காலந்தாழ்த்தீர்கள்? நாம் ஊருக்குப் போகவேண்டாமா?' என வினவினான். அச்செய்தி கண்ணப்பர் காதில் ஏறவேயில்லை. நாணன் அதற்கு விடை கூறுகிறான். சொல்லும் அவனும் கேட்கும் காடனும் வேடர்கள். தங்கள் வாழ்க்கையில் எத்துணை முயற்சியாலுந் தளராது தான்பிடித்த பிடியை விடாமலிருக்கும் உடும்பைத்தானே கண்டிருப் பார்கள். ஆகையால் நாணன் 'மரப்பொங்தைப் பற் றிய உடும்பு எப்படி' அதை விடாதோ' அதுபோல இவன் அங்குள்ள குடுமித் தேவரைக் கட்டிப் பிடித்துக் கொண்டு விடமாட்டாதவனாய் விட்டான் எனக் கூறிய தாகச் சேக்கிழார் பெரிய புராணத்துள்,

'அங்கிவன் மலையிற் றேவர் தம்மைக் கண் டணைத்துக் [கொண்டு
வங்கினைப் பற்றிப் போகா வல்லுடும் பென்ன நீங்கான்'

எனப் பாடியிருக்கிறார். வேடன் கூற்றாகக் கூறப்படும் இந்த உவமை வேறு எந்த வகையாற் கூறப்படினும் அஃது ஆசிரியரின் பரந்த புலமையைக் காட்டா தல்லவா?

இனி, கம்பராமாயணம் என்னும் கனி நிறைந்த சோலையுட்புகுந்து ஒரு கனியைச் சுவைக்கலாமென எண்ணுகிறேன். விசுவாமித்திர முனிவன், தன் அரிய தவத்தைத் தன் காமத்தாலும் வெகுளியாலும் பாழாக் கினவனாதலால், தாடகையைக் கொல்லும் பொருட்டு

இராமபிரானைத் தசரத மன்னனிடம் பெறச் சென்றவன்,

> ‘தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக் கிடையூருத்
> [தவஞ்செய்வோர்கள்
> வெருவரச் சென்றடை காமவெகுளியென’

என்று தன் அநுபவத்தையே உவமையாகக் கூறினான். சிறந்த நூல்கள் ஒவ்வொன்றிலுள்ள ஒவ்வோர் உவமையைக் கூறியும் இது விரிந்து விட்டதாகையால் இதனை இம் மட்டோடு நிறுத்திவிட்டு, தம் கூற்றுகக் கூறும் உவமையை இரண்டொன்று காண்போம்.

## தம் கூற்றுவமை

திருவள்ளுவர் ‘மானம்’ என ஓர் அதிகாரங் கூறியுள்ளார். மானம் என்னும் அச் சொல் ஓர் வியப்பானது. தன் பெயரைக் கேட்டவுடனே ஆணோ பெண்ணோ, முதியவரோ இளைஞர்களோ, அறிஞர்களோ மூடர்களோ இவர்கள் அனைவருக்கும் மகிழ்ச்சியையோ சினத்தையோ மூட்டுவது. ‘மானமுடையவர்கள்’ என்றால் மகிழ்ச்சி; ‘மானங்கெட்டவர்கள்’ என்றாலோ சினம். ஆனால் அந்தச் சொல்லின் பொருள் தெரியாது. ஆதலாலே தான் இஃது ஓர் வியப்பான சொல் என்றேன். இச் சொல்லுக்குப் பரிமேலழகர் ‘எஞ்ஞான்றும் தம் நிலையினின்று தாழாமையும் தெய்வத்தாலே (ஊழ்வினை) தாழ்வுவந்துழி உயிர் வாழாமையுமாம்’ எனப் பொருள் விரிக்கிறார். எனவே மக்களுக்குத் தம் நிலை என்பதொன்று; அதினின்றும் ஓர்படி மேலேறினால் தெய்வநிலை. ஒருபடி கீழிறங்கினால் விலங்கின் நிலை. சிறந்த மக்கள் தம் நிலைக்குத் தாழ்வு வருமானால் அஃதாவது மானங்கெட நேருமானால் உயிரைவிட்டு மானத்தை நிலை நிறுத்துவார்களேயன்றி, மானத்தை விட்டு உயிரை வைத்திருக்கமாட்டார்கள்.

இனி, மானமிழந்தும் உயிர்வாழ்கின்றவர்கள் அறிஞர்களால் எவ்வாறு கருதப்படுகிறார்கள் என்பதற்குத் திருவள்ளுவர் மானம் என்னும் அவ்வதிகாரத்துக் கூறும் உவமையொன்று மிகமிக அருமையும் சுவையுமுடையது. அத்திருக்குறள்,

'தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை'

என்பது. மயிரானது தன் நிலைப்பிடமாகிய தலையிலிருக்கும் வரையிலும் வாசநெய் முதலிய ஊட்டப் பெற்று, பேணி வளர்க்கப்படுதலையும், அந்நிலையினின்று தவறினால் அஃது அருவருத்து ஒதுக்கப்படுதலையும், தப்பித்தவறி உண்ணும் உணவிற் கிடந்து விட்டால் உண்பவர்கள் சமைத்தவர்களிடம் பாய்வதையும் கண்கூடாகக் காண்கின்றோம். சற்று நேரத்திற்கு முன் (தன்னிலையிலிருக்கும்போது) புகழ்ந்து பேணப் பெற்றது இப்போது இகழ்ந்து கூறப்படுவதோடு நூல் வழக்கிலும் உலக வழக்கிலும் இழிந்த பொருளுக் கெல்லாம் அதுவே உவமையாக எடுத்தாளப்படுதலையும் பார்க்கின்றோம். ஆதலால், நமது வள்ளுவப் பெருந்தகையார் 'மானங்கெட்டு உயிர் வாழ்பவர் தலையினின்றும் தவறிய மயிரை ஒப்பாவார்' என்று கூறியது, ஓர்வகை நகைச்சுவையோடு பொருந்தி, அப்புலவர் பெருமான் தமது வாழ்க்கையில் மானத்தை உயிரினும் மேலாக ஓம்பி வந்திருக்க வேண்டுமென்பதையும் புலப்படுத்துகிறதல்லவா? எவனுந் தன் வாழ்க்கையில் உறுதியாகக் கொள்ளாத ஒன்றைப் பிறருக்கு வற்புறுத்திக் கூறமாட்டானென்பதும் அங்ஙனம் கூறினும் அக்கூற்றுப் பிறரால் எள்ளி நகையாடுதற் கிட மாவதோடு ஒரு பொருளாக மதிக்கப்படாதென்பதும் நம்மாலறியப் பட்டனவே.

அரிவாட்டாய நாயனாரின் வாட்போருக்கு அஞ்சி அவருடைய பகைவனாகிய அதிசூரனென்பவன் படைகள்

ஓடி ஒளிந்தன என்பதற்கு, ஒருவனுக்கு மெய்ஞ் ஞானம் தோன்றிய காலத்தில் அவனது காமவெகுளி மயக்கங்கள் தலை காட்டாமல் ஓடி ஒளிவதை உவம மாக்கி,

"நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற் குற்றம்போலாயினர்" எனவும்,

கண்ணப்பர் வேட்டையாடும் போது வலைகளை அறுத் துக் கொண்டு தப்பியோடும் விலங்குகளைப் புறத்தே நின்ற நாய்கள் பிடித்துக்கொண்டன என்பதற்கு, நல் வினை தீவினை என்னும் வலையை அறுத்துக்கொண்டு ஆண்டவனுடைய திருவடியை நோக்கி ஓடும் ஆன் மாவை, மனத்தைத் துணையாகக் கொண்டு ஐம்புலன் கள் பற்றிக் கொண்டன என்பதை உவமையாக்கி,

"நிலவிய இருவினை வலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறு மனனிடைதடை செய்த பொறிகளினளவுளவே"
எனவும்

சேக்கிழார் பெரிய புராணத்துட் கூறியிருப்பது அவரது வாழ்க்கையின் குறிக்கோள் (இலட்சியம்) என்ன என்ப தைத் தெள்ளத் தெளியக் காட்டுகின்றதல்லவா?

இந்த முறையில் ஆன்றோர் கூறிய உவமைகளை நோக்கி உண்மை யறிவோமானல் அது நமக்குத் தெவிட்டாத சுவை தரும் என்பதைக் கூறி இம்மட் டோடு முடிக்கின்றேன். குற்றங்களைப் பொறுத்துக் கொள்க; குணம் உளதேற் கொள்க.

வாழ்க நம் தமிழ் மொழி!

**12**

# பண்டைத் தமிழர் பெருமை

தமிழ் நாட்டின் பெருமையே பெருமை. அது தெய்வத் திருநாடாம். வடவேங்கடம், தென்குமரி என்பது தமிழ்நாடு. தற்காலம் திருப்பதி யென்று விளங்கி வருவதே வேங்கடம். இம்மலையில் வீற்றிருப்போன் நீலமேனி நெடியோன். இம்மலை வட சொற்கும், தென் சொற்கும் வரம்பாய் நின்றமலை. தென் பக்கத்திலோ கன்னித் தெய்வம் காத்தருள்கின்றனள். இஃது ஒரு பாலிருக்க முத்தமிழ் முனிவன் சந்தனப் பொதிய மாமலையில் அமர்ந்து தென்னுடு முழுதும் தமிழ்மொழி ஒலிக்கும் படி செய்த நாடு. இத்தகைய பேறும் பெயருமுள்ள நாட்டை ஏன் தெய்வத் திருநாடு என்று சொல்லக் கூடாது?

தமிழ்நாடு எப்பொழுது தோன்றியது? தமிழ் நாகரிகத்தின் காலம் யாது என்று வரலாற்றுராய்ச்சி வல்லுநர்கள் பலர் ஆராய்ந்து வருகிறுர்கள். சென்ற ஆண்டில் இந்திய ஸையன்ஸ் காங்கிரஸ் தலைமை கொண்ட ஆராய்ச்சிப் புலவர் Sahani எத்தனையோ ஆயிரம் ஆண்களுக்கு முன் தென்னுட்டில் மக்கள் வசித்து வந்தனர் எனத் தெரிவித்தார். பழைய பாண்டங்கள், ஆயுதங்கள், வீட்டுக்கருவிகள், முதலியவைகளை ஆதார

மாகக் கொண்டு Bruce Foote என்ற பெரியார் வடஇந்தியாவில் இரும்பின் உபயோகம் தெரியு முன்னரே தென்னுட்டில், இரும்பு உபயோகத்திற்கு வந்துவிட்டது என்று தெரிவித்தார். முதல் முதலில் இரும்பின் உபயோகம் தென் இந்தியர்க்கே தெரிந்தது போலும். தமிழ்க் காப்பியங்களுள் மிக்க சிறப்புப்பெற்ற காப்பியமான சிலப்பதிகாரத்தில் 'கண்ணெழுத்து' என்பது கூறப்படுகிறது. (சிலப். 26. 170.) அஃதாவது சித்திரம் வரையப்பட்ட எழுத்தாம். தற்காலம் கண்டுபிடிக்கப்பட்ட சிந்து சமவெளி நாகரிகத்திற்குச் சமானமான எழுத்துக்களே அவையாகும். தமிழ் நாட்டில் வியாபாரத்திற்கு ஏற்பட்ட பொதிகளில் எவ்வளவு மூட்டைகள், என்ன சாமான்கள், எவ்வித நிறை என்பதைக் குறிக்கும் எழுத்தாம். இவ்வெழுத்திலிருந்து; தமிழ் நாகரிகத்திற்கும் சிந்து சமவெளி நாகரிகத்திற்கும் நெருங்கிய தொடர்புண்டெனக் கருதலாம். சிந்து தேசத்திற்கும் தென் இந்தியாவிற்கும் கடல் வழியாகப் போக்குவரவு இருந்து வந்தது. என் கருத்தைக் கேட்டால் இந்திய நாகரிகம் மிகப்பழையது. சிந்துநதிப் பிரதேசத்திலிருந்து நமது நாகரிகம் பாபிலோனியா, எகிப்து முதலிய தேசங்களுக்குப் பரவியது. அவ்விடங்களிலிருந்து இந்தியாவிற்குப் பரவியது என்ற ஐரோப்பிய ஆராய்ச்சியாளரின் எண்ணம் தவறென்றே கருதவேண்டும். பாபிலோனியாவில் கி. மு. 700ல் ஒரு தமிழ்க் குடித்தனம் இருந்தது.

தென்னுட்டிலிருந்து தமிழ் நாகரிகம் உரோமாபுரிக்கும், கிரேக்க நாட்டிற்கும் பரவியது. இன்னும் தக்கிண பீடபூமியைச் சேர்ந்த வேட்டுவர் என்ற குறிஞ்சி மக்கள் யவன தேசத்திற்குச் சென்று தங்கள் அரசை நிலை நிறுத்தித் தங்கள் பெயரையும் அந்நாட்டிற்குக் கொடுத்தார்கள். இதுவே Crete தேசம். இதன் நாகரிகத்திற்கும் தமிழ் நாகரிகத்திற்கும் ஒப்புமை மிகுதியாயுளது.

உரோமாபுரி நாணயங்கள் தமிழ்நாட்டில் மதுரை, கரூர் முதலிய இடங்களில் மிகுதியாய்க் கிடைக்கின்றன. உரோமர்கள் வியாபாரம் முதலிய காரணங்களைக் கொண்டு இவ்விடம் கிறித்து பிறப்பதற்கு முன்னமேயே தமிழகத்தில் சிதறியிருந்தார்கள் என்று திண்ணமாய்க் கூறலாம். அகில், புகை, இரத்தினங்கள், முத்து, பட்டு, மிளகு இவைகள் மிகுதியாய் ஏற்றுமதியாயின. தமிழ் வேந்தர் அயல் நாட்டு யவனர்களைத் தங்கள் கோட்டை வாயில் காவலாளிகளாய் வைத்திருந்தார்களென்று சிலப்பதிகாரம் கூறும். கி. மு. 20 ஆம் ஆண்டில் உரோமாபுரி வேந்தனுன Augustus என்பவருக்குப் பாண்டியன் ஒரு தூது அனுப்பியதாகத் தெரிகிறது. இது முதலிய ஆதாரங்களிலிருந்து மத்திய தரைக் கடலில் நாகரிகம் என்று இப்போது வழங்கப்படுவது தென்னிந்தியா நாகரிகம் அல்லது தமிழ் நாகரிகமென்று துணிவாய்ச் சொல்லலாம். மேற்குத் திக்கில் பரவியதுபோல் கிழக்குத்திக்கிலும் நமது நாகரிகம் பரவிற்று. தற்காலம் மலேயாத்தீவுகள் (Malaya Archipelego) என்று வழங்கும் சுமத்திரா, சாவா, முதலிய தீவுகளுக்குத் தென்னுடட்டு மக்களே போய்க் குடியேறி நாகரிகமற்ற சாதியாரை வென்று தங்கள் ஆட்சியை நிலை நிறுத்தித் தம் நாகரிகத்தையும் பரவச் செய்தார்கள். இதைத்தொடர்ந்து கலிங்கர், வங்கர் போனதாயும் தெரியவருகிறது. ஆனல் முதல் முதலில் குடியேறிய மக்கள் தமிழ்நாட்டு மக்களேயாவர். இவ்வூர்களில் இந்திய மதமும் இந்திய வரலாறும் வழக்க ஒழுக்கங்களும் காணப்படுகின்றன.

இதுமாத்திரமன்று தென்னுட்டு மக்கள் சீனதேசத்திற்கும் மத்திய ஆசியாவிற்கும் போக்குவரவு செய்து நமது நாகரிகத்தையும் அவ்விடங்களில் பரவப்பண்ணியதாகவும் வரலாறு கூறும். சீனமதக்கொள்கைகள் இந்துமதக் கொள்கைகளையே தழுவி நிற்கின்றன

என்பதில் என்ன வியப்பு. உதாரணமாக கி. பி. 526ல் தென்னாட்டு வேந்தன் குமாரன் புத்தமதத்தைத் தழுவிப் போதிதர்மன் என்ற பெயருடன் சீன நாட்டை அடைந்து பௌத்த தர்மத்தை ஓங்கும்படி செய்தான். மற்றும் பர்மா நாட்டிற்கும் இலங்கைத் தீபத்திற்கும் தமிழ் மக்கள் அடிக்கடி போனதற்கும், தமிழ் நாகரிகம் பரவியதற்கும் பல சான்றுகளுண்டு. சோழ வேந்தன் கரிகாலன் இலங்கையிலிருந்து ஆயிரக்கணக்கான கூலி வேலைக்காரர்களைக் கொண்டுவந்து காவிரிக்கு அணைகட்டியதாக நூல்கள் கூறும். சேரன் செங்குட்டுவன் பத்தினி தேவிக்குக் கோயில் கட்டி விழாநடத்திய போது இலங்கை வேந்தன் கயவாகு வந்து, தன் ஊர் போய்ப் பத்தினிக் கடவுளுக்கு மங்கலவணி நடத்திய தாகச் சிலப்பதிகாரம் கூறும். இன்னமும் அமெரிக்காவில் மாயா Maya நாகரிகம் இந்திய நாகரிகமென்றே முடிவில் ஒப்புக்கொள்ளப்படுமென்பது என் திண்ணமான எண்ணம்.

இஃது இப்படியிருக்க, தென்னாட்டுக்கும் வடநாட்டுக்கும் உண்டான சம்பந்தத்தை நோக்குவோம். ஆரிய வேதத்தில் மிகப்பழையதான இருக்குவேத சங்கிதையில் தக்கிணபதம் சொல்லப்படுகிறது. வட இந்தியர் இத்தக்கிணபதம் வழியாகத் தென்னாடு வந்ததாயும், தென்னாட்டு மக்கள் வடநாடு போனதாயும் தெரிகின்றது. இது தரைவழியாய் உண்டான பெரிய பாதை. வடநாட்டு வேந்தர்கள் பலர் இந்நாட்டுக்குப் பல முறைகள் வந்ததாக இலக்கியம் கூறும். மாபாரதப் போரில் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் பெருஞ்சோறு அளித்து உதவியவன் சேரவேந்தனான உதியன் சேரலே. இதற்குப் பல ஆண்டுகள் முன்னர் இராமபிரான் முன்னோனான தண்டகனென்ற அரசன் தென்னாட்டைத் * தன் கைவசமாக்கித் தண்டகாரணியம்

---

*இது தட்சிணதேசமெனப் பெயர் பெறும்.

என்னும் பெயரைக்கொடுத்தான். இக்காட்டில் அனேக முனிவர் பின்பு வந்து தங்கினர் என இராமாயணம் கூறும். இராமன் இலங்கை வேந்தன்மேல் படை யெடுத்து வந்தபொழுது தமிழ் வேந்தர்களை எதிர்த் தமையாதல் வென்றமையாதல் தெரியவில்லை. அவர் களிடம் அவன் நட்பாகவே யிருந்திருத்தல் வேண்டும்.

மற்றுமொரு கதை உலாவுகின்றது. அஃதாவது பரசுராமன் தன் திக்கு விசயத்தில் கேரள தேசத்தை அடைந்து சமுத்திரத்தால் விழுங்கப்பட்ட மலையாள தேசத்தை மீண்டும் எடுத்ததாக வரலாறு. பிற்காலத் தில் மௌரிய சக்கரவர்த்தி அசோகனும், குப்த சக்கர வர்த்தி சமுத்திர குப்தனும் தமிழ்நாடு வரையும் வந்து பகைவரை வென்றனர். ஆனால் தமிழ்நாட்டை வெல்ல வில்லை. சங்க இலக்கியம் கூறுவதிலிருந்து தமிழ் வேந்தர்கள் வடநாட்டுக்குப் போய்த் தங்கள் ஆற்றலைக் காட்டி வந்தார்கள். தமிழ்நாட்டு மூவேந்தரும் வட பால் இமயமலைவரை போய்த் தங்கள் இலச்சினைகளை அம்மலையில் பொறித்து வந்தார்கள். செங்குட்டுவன் என்ற சேரவேந்தன் கங்கைக் கரையில் குயிலாலுவ மென்ற விடத்தில் ஆரியப்படைகளைத் தோல்வியடை யச் செய்து, அனேக வடமன்னர்களைச் சிறைப்படுத்தித் தமிழ்நாட்டு வேந்தர் வியப்பத் திரும்பிவந்தனன். இப்படி வென்ற வீரர்கள் இமயவரம்பன் என்ற பட் டத்தை வைத்துக் கொண்டார்கள். பிற்காலத்தில காஞ்சியில் ஆண்ட பல்லவர்களும், தஞ்சையில் ஆண்ட சோழர்களும், பாண்டிய சேரர்களும் தமிழ்மொழியை வளர்த்து வந்தார்கள். தமிழ் நாகரிகத்தையும் பரவச் செய்தார்கள்.

தமிழ் நாகரிகமென்றால் என்ன எனக் கேட்கலாம். அரசியலிலும் கல்வியிலும் சிற்பங்களிலும் தமிழர் அடைந்த ஊக்கமும் பெருமையுமே. இவைகளைச் சுருக் கிச் சொல்வேன். தமிழ் அரசியன் முறைகள் அறத்

தால் அமைந்தவையே. தெய்வப்புலமை வாய்ந்த திருவள்ளுவனர் அரசியலைப்பற்றி மிக விரித்துள்ளார். தமிழ் வேந்தர்கள் ஆட்சியை நடத்த இரு சபைகளை நிறுத்தி அச்சபையோர்களுடன் கலந்து ஆராய்ந்து அரசியல் செய்திகளை முடிவுகட்டினர்கள். இச்சபைகளை ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்பர் நூலாசிரியர்கள். இவர்களில் சிலரைக் கருமவினைஞர், தந்திர வினைஞர் பெருங்கணி என்பர். தூதுவரும் சாரணரும் வேற்றரசரிடம் அரசியற் செய்திகளைத் தம்மரசனிடம் அறிவித்து அதற்கு வேண்டிய காரியங்களை வகித்து வருவர். அரசனது பிறந்த நாள் 'பெருநாள்' என்றும் பெருமங்கலமென்றும் நகர மாந்தர்களால் கொண்டாடப்படும். அரசன் போர்ச்செலவி லீடுபடுவதற்குமுன் குறித்த நன்னாளில் தன் வெற்றி வாளையும் கொற்றக் குடையையும் யானைமேலேற்றி வெகு சிறப்புடன் கோட்டைக் கப்பால் புறவீடுவிட்டு வைப்பது தமிழ் மரபாகும். இதனைத் தொல்காப்பியர் 'நாட்கோள்' என்பர். அவர்களிட்டபோர் அறப்போரேயன்றி மறப் போரல்ல. இதைப் பின்வரும் புறநானூற்றுப் பாட்டு ஒன்று விளக்கும்.

ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறுஅ தீரு
மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
வறத்தாறு நுவலும் பூட்கை ........

ஒவ்வொரு வேந்தனுக்கும் இருவகைத் தலை நகர்கள் உண்டு. ஒன்று துறைமுகப்பட்டினம், மற்ருென்று உள்நாட்டுப் பட்டினம். உறையூர், புகார் சோழர்களுக்கும், மதுரை, கொற்கை, பாண்டியர்களுக்கும், வஞ்சி, முசிறி சேரர்களுக்கும் உரிய நகர்களாம். ஒவ்வொருவேந்தனுக்கும் தரைப்படையும் மரக்கலப்படை

யும் உரியவை என்றே சொல்லலாம். சேரர் பெருந் தகையான செங்குட்டுவனைக் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்றார் அடிகளும். தமிழரின் போர் முறைகள் அநேகம். அதில் ஒன்றைக் குறிப்பேன். இக்காலம் போர்வீரத்தில் முதன்மையால் விளங்கிய முடிமணிகளுக்கு "விக்டோரியா கிராஸ்" என்ற பதக்கம் அளிப்பதுபோல் பொருது வெற்றியடைந்த வீரர்களுக்குப் பொன்னாலாகிய வாகைப்பூக்களைச் சூட்டிப் புகழ்ந்து பாராட்டுவது ஒரு முறை. போரில் விழுப் புண் பட்டு இறந்த வீரர்களுக்கு "வீரக்கல்" என்ற நடுகல் நாட்டிச் சிறப்பிப்பது இன்னொருமுறை. தமிழ் வேந்தர்கள் நீதி தவறாமல் அரசு புரிந்தவர்கள். நீதிக்காகத் தங்கள் உயிரையும் விட்டார்கள். நீதி தவறிக் கோவலன் கொலை செய்யப்பட்ட செய்தி கேட்ட பாண்டியன் அரசு கட்டிலில் வீற்றிருந்தபடியே, தான் அரசனல்லன் கள்வன் என்று சொல்லிக் கொண்டே உயிர்விட்டான் என்பர் இளங்கோ அடிகள். தமிழ்ப் பெண்மணிகள் வீரபத்தினிகளாயிருந்தார்கள். கண்ணகி போன்றார் கற்பினை வீரக்கற்பு, சீறிய கற்பு, மறக்கற்பு என்று பண்டையோர் அவர்களுக்கு நடுகல் நாட்டிக் கொண்டாடினர்.

கல்வியில் தமிழ் வேந்தர் சிறந்தவர். தமிழ்ப்புலவர்களுக்கு வேண்டிய அளவு பரிசில் கொடுத்துச் சிறப்பித்தனர். பாண்டியன் ஒரு சங்கத்தை ஏற்படுத்திப் புலவர்களை மிகமிகப் பாராட்டினான். புலவர்கட்கும் ஏனைய இரவலர்க்கும் மிகுதியாகப் பண்டை மன்னர்கள் தானம் செய்து அவர்கள் வறுமையைப்போக்கினார்கள். அதனால் தமிழ்த் தாய் என்று மிளமையோடிருந்தாள். தமிழின் பெருமை எங்கும் விளங்கிற்று.

பண்டைத் தமிழர் பெருமை பல வழிகளில் அறிந்து மகிழத்தக்கது. ஆடல்பாடல்களில் சிறந்த பயிற்சி

யுள்ளவர்கள். நாடகத்தில் குரவை முதலான கூத்துக்களும் சங்கீத முறைகளும் உயர்ந்தவைகள். ஓவிய நூலிலும் மனை நூலிலும் சிற்பத் தொழிலிலும் பெயர் பெற்றவர்கள். மதத்திலும் மதக் கொள்கைகளிலும் வைரம் பாராட்டி ஒருவர்க்கொருவர் சண்டை சச்சரவு செய்யவில்லை. எல்லா மதத்தினரும் ஒரே வீட்டில் சேர்ந்து இல்லறம் நடத்தி வந்தார்கள்.



# அருஞ்சொற் பொருள் விளக்கம்



அ

அகவுலகம்-நினைவுலகம்
அகழ்தல்-தோண்டுதல்
அசுத்தமாயை-மாயை வகை [களுள் ஒன்று
அச்சுறுத்தல்-அஞ்சச் [செய்தல்
அண்மைக் காட்சி-சமீபத்தில் [காண்டல்
அத்துவிதம்-இரண்டற்றநிலை
அயன்மை-அயலாம் தன்மை
அரசுகட்டில்-அரியணை
அருண்மொழித்தேவர்-சேக்கிழார்
அருத்துதல்-உண்பித்தல்
அரும்பிய-தோன்றிய
அவலம்-துன்பம்
அறங்கூறவையம்-நீதிமன்றம்
அனுபானம்-மருந்துடன் [சேர்த்து உண்ணப்படும் பொருள்
அன்னை வழிபாடு-சக்தி [வணக்கம்

ஆ

ஆயம்-தோழியர் கூட்டம்
ஆருகதசமயம்-சமணமதம்
ஆனிரை-பசுக் கூட்டம்

இ

இயங்குதல்-அசைதல்
இயம்புதல்-கூறுதல்
இருமுதுகுரவர்-தாய் [தந்தையர்
இலச்சினை-அடையாள [முத்திரை
இல்வழி- இல்லாத இடத்து
இவண்-இவ்விடம்
இழுக்கு-குற்றம்
இளமரக்கா-சிறு மரங்களா [லான சோலை
இறைஞ்சுதல்-வணங்குதல்
இன்னல்-துன்பம்

உ

உட்கோள்-கருத்து
உய்திகூடல்-கடைத்தேறல்
உரம்-ஆற்றல்
உலப்பில்பொருள்-கெடாத [பொருள்
உவகை-மகிழ்ச்சி
உழவாரப் பணி-புற்செதுக்கு [தல் முதலியன
உறைப்பு-ஈடுபாடு

எ

எண்மர்-எட்டுப்பேர்கள்
எடுத்துக் காட்டு-உதாரணம்; [இலக்கு

ஏ

ஏனையவை-மற்றவை
ஏது-காரணம்

ஒ

ஒருப்படுதல்-உடன்படுதல்
ஒல்லுதல்-இயலுதல்
ஒறுத்தல்-தண்டித்தல்
ஒற்றித்த-ஒன்றுபட்ட

ஓ

ஓச்சுதல்-செலுத்துதல்

க

கடப்பாடு-கடமை
கடவுட்கூறு-தெய்வாமிசம்
கட்டு-பாசம்
கணி-சோதிடன்
கருவி-ஏது; உபகரணம்
கருவூலம்-நிதிஅறை
கலம்-மட்பாண்டம்; மரக் [கலம்
கவி-புலவன்
கவியரங்கு-புலவர் இருத்தற் [குரிய இடம்
கண்கூடு-காட்சி
கழல்-அடி
கன்னிப்போர்-முதற்போர்
காப்பியமாந்தர் - காப்பியத் [தில் வெளிப்படுவோர்
கால்-நிலத்தில் செல்லுதற் [குரிய வண்டி முதலியன
குடியாட்சி-குடியரசு
குறிக்கோள்-நோக்கம்
குறியீடு-அடையாளச் சொல்
கூலம்பகர்வார்-தானியம் [விற்பார்
கேண்மை-நட்பு
கோட்பாடு-கொள்கை
கோனாட்சி-அரசாட்சி

ச

சமண்பாழி-சமண முனிவர் [இருக்கை
சாலுதல்-பொருந்துதல்
சால்பு-பல குணங்களின் [நிறைவு
சான்று-சாட்சி
சிவசாதனம்-திருநீறும் [கண்மணியும்
சிவநெறி-சைவசமயம்
சீவன்முக்தர்-உடலோடு கூடி [யிருந்து பற்றற்றவர்
சுரிமூக்குநொள்ளை-சுரித்த [மூக்கினையுடைய ஒருவகை வண்டு
சுறுநாற்றம்-தீய புலால் [நாற்றம்
சூலைமடுத்தல்-சூலைநோய் [பற்றச் செய்தல்
சூலுற்றமகள்-கருக் [கொண்டவள்
சூழ்ச்சித்துணைவர்-ஆராய் [தற்குத் துணையாவார்
செஞ்சொல்-இயற்சொல்
செலவு-செல்லுதல்; போக்கு
செறிக்கப்படுதல் - நெருக்கப் [படுதல்
சேய்மைக்காட்சி-தொலைவிற் [காண்டல்

த

தநயன்-மகன்
தலைக்கூடுதல் - பொருந்துதல்
தற்குறிப் பேற்றம், தன்மை நவிற்சி } அணி வகைக ளுள் ஒன்று
தாமம்-பூமாலை
தானைத்தலைவன்-படைத் [தலைவன்
திரிசொல்-அரிதிற் பொரு [ளுணர்த்தும் சொல்
திருக்காப்பிடுதல்-சாத்தப் [படுதல்
திருவலகு-திருக்கோயில் [களில் துடைத்தல்

திரை-அலை
திறம்-ஐந்து சுரங்களுடையது
திறத்திறம்-நான்கு சுரங்
[களுடையது
தினகரன்-சூரியன்
தேற்றம்-தெளிவு
தொகைப் பொருள்-திரண்ட
[பொருள்
தொடர்நிலைச் செய்யுள்
[காப்பியம்
தொன்மைச் சமயம்-பழமை
[யான மதம்

ந

நல்ஆ-நல்ல பசு
நாட்டுமொழி-தாய்மொழி
நுதி-நுனி
நிறுவுதல்-நிலைப்படுத்தல்
நிரனிறை-ஒருவகை அணி
நிலைக்களம்-தோன்றுமிடம்
நுனித்துணர்தல்-கூர்ந்து
[ஆராய்தல்
நெடிதுசூழ்தல்-நீண்டு
ஆராய்தல்
நோன்மை-பொறுமை

ப

பகரப்படுதல்-கூறப்படுதல்
பகலவன்-சூரியன்
பகைப்புலம்-பகைவர் இடம்
பசுகரணம்-உயிரின் கருவி
படிக்காசு-வாயிற்படியில்
[வைக்கப்பட்ட பொற்காசு
படிமுறை-சோபான கிரமம்;
ஏணியின் பழுப்போல் ஒன்
றுக்கொன்று சாதன சாத்
தியமான அமைந்த முறை
படைக்கலம்-போர்க்கருவி
பண்டு-பழமை
பண்-ஏழு சுரங்களும் கலத்
[தற்குரிய இராகம்
பண்இயல்-ஆறு சுரங்களை
[உடையது
பண்புச் சொல்-குணச் சொல்
பதிகரணம்-இறைவன் கருவி
பரற்கல்-சிறுகற்கள்
பரத்துவம்-தலைமைத்
[தன்மை
பரிபவம்-மானக்கேடு
பாநயம்-பாட்டின் அழகு
பாவினம்-ஆசிரியம் முதலிய
பாக்களுக்கு இனமாக
வுள்ள ஆசிரியத்துறை
முதலியன
பிராமணம்-மறையின் கூறு
[களுள் ஒன்று
பிறழ்தல்-மாறுபடுதல்
புண்ணீர்-இரத்தம்
புலனுதல்-வெளிப்படுதல்
புள்நிமத்தம்-சகுனம்
புறப்புண்-முதுகுப்புண்
புன்மதி-சிற்றறிவு
பெருமிதம்-வீரம்
பொதிசோறு - வழியில் உண்
ணுதற்குரிய கட்டுச்சோறு
பொலிவு-விளக்கம்
பொறிஇயக்கல்-எந்திரத்
[தைச் செலுத்தல்
பொற்பு-அழகு
போக்கு வீடு-செல்லுமிடம்
போதரல்-கிடைத்தல்

ம

மகன்மைக்காதல் - புதல்வனி
[டத்துள்ள விருப்பம்
மதுகை-வன்மை
மருத்துவர்-வைத்தியர்
மறுமாற்றம்-எதிர் உரை
மறைநூல்-வேதம்
மன்பதை-மக்கள் தொகுதி
மாண்பு-பெருமை
மாற்றார்-பகைவர்

மிடற்றுப்பாடல்-வாய்ப் [பாட்டு
முப்பால்-அறம், பொருள், [இன்பம்
மூவுறுப்பு-எழுத்து, சொல், [பொருள் என்பன
மெய்ப்பாடு-உடலில் தோன்றி வெளிப்படும் சுவைக்குறி
மெய்யின் இயக்கம்-உடல் [அசைவு
மெய்யுணர்வு-உண்மை [ஞானம்
மெல்லியல்பு-மென்மைத் [தன்மை
மென்னீர்மை-மெல்லிய [தன்மை
மொழிப்பயிற்சி-மொழி நூல் [கலைக் கற்றல்

ய

யாக்கை-உடல்

வ

வயமழிதல்-தன்வயமிழத்தல்
வரம்பு-எல்லை
வரிப்பாடல்-இசைப்பாட்டு
வல்லியல்பு-வன்மைத் [தன்மை
வடக்கிருத்தல்-உண்ணா [நோன்பு மேற்கொண்டு சாகுங்காறும் வடக்கு நோக்கி இருத்தல்
வலியுறுத்தல்-உறுதிப்படுத் [தல்
வற்கடம்-வறுமை
வாய்ப்பு-பொருத்தம்
விகற்பம்-வேறுபாடு
விஞ்சுதல்-மிகுதல்
விடையிறுத்தல்-விடை [கூறல்
விதத்தல்-சிறப்பித்தல்
விரவல்-கலத்தல்
விழுப்புண்-மார்புப்புண்
வெஞ்சுரம்-வெப்பமான [பாலைநிலம்
வேட்கை-விருப்பம்



